

பயணம்: 2 பதிவு: 5

“ஹெறிட்டேஜர்” தமிழ் இதழினை, மின்னிதழாக வெளியிடுவோர், தளி அறக்கட்டளை இராஜசேகர் பாண்டுரங்கன்.

இந்த இதழின் நோக்கம், மரபு சார்ந்த செய்திகளைப் பகிர்தல் மட்டுமே. மற்ற எவ்வித ஆதாய நோக்கமும் இல்லை.


ஹெறிட்டேஜர் தமிழ் இதழ்,
தளி அறக்கட்டளை,
26, முதல் தெரு, ராமலிங்கா நகர்,
நெற்குன்றம்,
சென்னை. 600107
தொலைப்பேசி: 9786068908

கட்டுரைகளை அனுப்ப:
news@heritager.org


முந்தய இதழ்கள்: goo.gl/AeBzaa

Telegram











அட்டைப்படம்:
அர்மாமலை ஓவியம்
பட உதவி: இராசு.
சரவணன்ராஜா, வேலூர்






## Donate

வேலூர் இதழ் சிறப்பாக வர உதவிய வேலூர் மாவட்ட வரலாற்று ஆர்வலர்களுக்கும், நாணயச்சங்க உறுப்பினர்களுக்கும், வேலூர் கோட்டை அருங்காட்சியகம், மத்திய மாநில தொல்லியல் துறையினருக்கும், வரலாற்றுத் துறை பேராசிரியர்கள் மற்றும் மாணவர்கள் அனைவருக்கும் முக்கியமாக சிறப்பிதழ் ஒருங்கிணைப்பாளர் திரு. இராசு.சரவணராஜா, மக்கள் தொடர்பாளர் திரு. A.T மோகன் அவர்களுக்கும் நன்றியும் வாழ்த்துக்களும்.

Paytm
Accepted Here

Heritager Magazine

To Pay,
Scan QR code in Paytm App



India's Most Sincere Bank
Paytm Payments Bank

Paytm QR code issued by One97 communication PVT. Ltd



PhonePe

ACCEPTED HERE

Scan & Pay Using PhonePe App



or Pay to Mobile Number using PhonePe App
9786068908






UPI ID: 9786068908@ybl

# வேலூரின் தொன்மை
# – முகமது அஸ்ரப் அலி, வேலூர்.

வேலூரின் சரித்திரம் பற்றிச் சொல்பவர்களும் எழுதுபவர்களும் அதன் சரித்திரத்தை பல்லவர் காலத்திற்குப் பிறகுதான் ஆராய்ந்து எழுதுவார்கள். கி.பி. 965ல் ராஷ்டிரகூட மன்னன் கன்னரதேவன் என்ற கிருட்டிணன் III காலத்தில் பகவதி மலைக் (வேலூர்) கல்வெட்டில் "சூதாடுபாறை மலை பக்கல் - வேலூர் பாடி" என்று முதல் முதலாக நமது வேலூர் அறியப்படுகின்றது.

அதற்கு முன் கி.பி. 2ஆம் நூற்றாண்டில் சமணத் துறவிகளின் இருப்பிடமாகியது வேலூர். ஆனால் அவர்களுக்கும் முன்பே கற்கால மனிதர்களின் இருப்பிடமாகத் திகழ்ந்துள்ளது. அதாவது முப்பதாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே மனிதர்களின் குடியிருப்பாக இருந்துள்ளது.

**Robert Bruce Foote (Father of Pre Historic Archaeology in India)** என்ற ஆங்கிலேயர்தான் முதன்முதலாக 1863 மே 30ல் இந்தியாவின் கற்கால மனிதர்களின் ஆயுதத்தை நமது தமிழ்நாட்டின் அத்திராம்பாக்கத்தில் கண்டுபிடித்தார். அவர்தான் நமது வேலூரின் பகவதி மலையின் கிழக்குப்புறத்தில் கற்கால மனிதர்களின் வாழவிடங்களையும், கல் ஆயுதங்களையும் கண்டெடுத்து உலகுக்குத் தெரியப்படுத்தியவர்.

அதன் பின்தான் நமது வேலூர் மாவட்டம் முழுமையும் உள்ள கற்கால மனிதர்களின் இருப்பிடங்களும் அவர்கள் வரைந்த ஓவியங்களும் வெளியுலகிற்குத் தெரிந்தது. ஆனால் அவை ஆராய்ச்சிக்கு உட்படுத்தப்பட்டு மக்கள் கவனத்துக்குக் கொண்டு செல்லப்படவில்லை. குறிப்பிட்ட சில இடங்களை மட்டும் சொல்லவிழைகிறேன்.

பகவதி மலையின் கிழக்குச் சமவெளி முதல் கரடிக்குடி குகை வரை கற்கால மனிதர்களின் வாழ்விடங்களும், அவர்கள் வேட்டையாடிய கல் ஆயுதங்களும் கண்டெடுக்கப்பட்டுள்ளன. இன்றும் பூட்டுத்தாக்கு, குரங்குமலைக் குகைகளில் வழுவழுப்பாகத் தீட்டப்படாத இருபதாயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய கல் ஆயுதங்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளது.

கணியம்பாடி அடுத்தச் சின்னப்பாலம் பாக்கம் அருகிலுள்ள மலைக்குகையில் A.S.I.யால் கற்கால மனிதர்களின் வாழ்விடமும் ஆயுதங்களும் கண்டெடுக்கப்பட்டுள்ளன. மேலும் சத்துவாச்சாரி **Cup & Saucer** அருவியருகே குகையும் கற்கால மனிதர்கள் தங்கள் கல் ஆயுதங்களைத் தீட்டிய கல்பட்டறையும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.




வேலூரின் மத்திய பாகத்திலேயே சின்ன அல்லாபுரம் என்று அழைக்கப்படும் இடத்திலுள்ள ஜாங்கிரி தோப்பின் (ஜஹாங்கீர் தோப்பு) பின்புறம் இன்றைய குடியிருப்பின் மத்தியில் பெருங்கற்கால ஈமக்கிரியை செய்த இடம் கல் அடுக்குகளாக இன்றும் காணப்படுகிறது. தொல்பொருள் ஆராய்ச்சி செய்யப்படாமல் இவ்விடம் அழிந்துபட்டுவருகிறது.

ஆனால் இவ்வெச்சங்களால் வேலூரின் தொன்மை விளங்குகிறது. மேலும் சின்னப்பாலம் பாக்கம், சிவநாதபுரம் மற்றும் சென்னராயன்பள்ளி போன்ற இடங்களில் கற்கால மனிதர்களின் பாறை ஓவியங்கள் உள்ளன. இவையே வேலூரின் தொன்மைக்குச் சான்றுகள்.

எழுத்து: திரு. முகமது அஸ்ரப் அலி, வேலூர்.

# வேலூர் நேதாஜி மார்க்கெட் வரலாறு – தமிழ் வாணன், வேலூர்




சரித்திர புகழ் பெற்ற இந்த அங்காடி தமிழ்நாட்டிலேயே கட்டப்பட்ட முதல் அங்காடியாகும்.

இதன் கட்டிடம் 1868ல் கட்டி முடிக்கபட்டது. (வேலூர் நகராட்சி உருவாக்கபட்டது-1866) இதற்கான அடிக்கல் அப்போதிருந்த கலெக்டர் மர்ஜோரிபாங்க்ஸ் மற்றும் நகராட்சி தலைவர் கான் பஹதூர் ஹபிபுல்லா சாஹிப் அவர்களால் நாட்டபட்டுள்ளது.

200 கடைகள் உருவாக்கப்பட்டு ஓட்டேரி தண்ணீர் திட்டம் வழியாக முதல் தண்ணீர் குழாய் அமைக்கப்பட்டது- 1912. இந்த அங்காடிக்கு முதல் தண்ணீர் குழாய் அமைக்கபட்டது

1927 இல் இந்த அங்காடியில் உள்ள மணிக்கூண்டு 1911 இல் இங்கிலாந்து அரசர் 5 ம் ஜார்ஜ் பதவியேர்ப்பு நிகழ்வை குறிக்கும் வகையில் கட்டப்பட்டது. அங்காடியில் உள்ள கல்வெட்டு ஒன்றில் வேலூர் கிராமத்தில் இருந்து 277 சிப்பாய்கள் முதல் உலக யுத்தத்தில் கலந்து கொண்டதாகவும் அதில் 14 உயிர் தியாகம் செய்ததாகவும் குறிப்பிடப்பட்டு உள்ளது.

இது தமிழ் நாட்டிலேயே முதலில் கட்டப்பட்ட அங்காடி. சரித்திர புகழ் வாய்ந்தது.

1866 - இதற்கான அடிக்கல் அப்போதிருந்த ஆட்சியர் மர்ஜோரிபாங்க்ஸ் மற்றும் நகராட்சி தலைவர் கான் பஹதூர் ஹபிபுல்லா சாஹிப் அவர்களால் நாட்டப்பட்டுள்ளது.

1868 - கட்டிடம் கட்டி முடிக்கப்பட்டது (வேலூர் நகராட்சி உருவாக்கப்பட்டது)




1912 ல் 200 கடைகள் உருவாக்கப்பட்டு ஓட்டேரி தண்ணீர் திட்டம் வழியாக முதல் தண்ணீர் குழாய் அமைக்கப்பட்டது.

1927 ல் இந்த அங்காடிக்கு முதல் தண்ணீர் குழாய் அமைக்கப்பட்டது.

1932ல் அங்காடி முதல் தெரு விளக்கு அமைக்கப்பட்டது.

1934 ல் வீடுகளுக்கு விரிவுபடுத்தப்பட்டது.

1942ல் நேதாஜி தொடங்கிய தேசிய படையை வரவேற்கும் வகையில், வேலூர் நகர வர்த்தகர் சங்கம் இந்த அங்காடிக்கு நேதாஜி மார்க்கெட் என்று பெயர் சூட்டியது.

# அப்துல்லாபுரம் அன்ன சத்திரம்
## – ராகவேந்தர்.TC.தஞ்சாவூர்.



பண்டைய கால மக்கள் பயணம் செய்ய, கால்நடைகளாலும், விலங்குகளாலும் இழுத்துச் செல்லப்படும் வண்டிகளே பெருமளவில் பயன்பட்டன.

அக்காலத்தில். பெரும்பாலும் ஒற்றையடிப் பாதைகளே இருந்தன. இரண்டு ஊர்களுக்கு இடையில் அமைந்துள்ள சாலைகளில் இரவில் செல்வது பாதுகாப்பற்றதாகவே இருந்தது. அதனால் தொலைதூரம் பயணம் செல்பவர்கள் இரவில் பாதுகாப்பாகத் தங்கி செல்வதற்காகச் சத்திரங்கள் அமைக்கப்பட்டது.

பக்தர்கள் பல்வேறு ஊர்களில் நடக்கும் திருவிழாவைக் காண்பதற்கும், பல புண்ணியத் தலங்களுக்குச் சென்று இறைவனை வழிபடவும், தீர்த்தங்களில் நீராடவும் நீண்ட தூரம் பயணம் செய்வர். அவ்வாறு செல்லும் பக்தர்களுக்கு அன்னம் அளித்தால் புண்ணியம் என்பதால் உருவானதே அன்ன சாத்திரங்கள். பக்தர்களுக்கு மட்டுமல்லாது வழிப்போக்கர்களுக்கும் அவர்களின் பயணகளைப்பை நீக்குவதற்கும், பசியாறி செல்வதற்கும் அமைக்கப்பட்டதே சத்திரங்கள். அன்னம் அளிப்பது சிறந்த தர்மம் என்பதால் மன்னர்களும், பெரும் செல்வந்தர்களும் இது போன்ற சத்திரங்களை நகரின் முக்கியமான இடங்களில் கட்டினார்கள்.

இவ்வாறு அமைக்கப்பட்ட சத்திரங்களில் ஒன்றே, வேலூர் பெங்களூர் தேசிய நெடுஞ்சாலையில் அப்துல்லாபுரத்தில் அமைந்துள்ள இந்த சத்திரம். தற்போது வெறும் காட்சிப் பொருளாக மட்டுமின்றிப் பாழடைந்து, இடியும் நிலையில் புதர்மண்டி கிடக்கிறது. இன்று அந்த இடத்தைச் சமுக விரோத செயல்களுக்கும், கழிவறையாகவும் பயன்படுத்துவது வேதனையாக உள்ளது.

சத்திரத்தின் பின்புறம் ஒரு சிவலிங்கம்,

மற்றும் 8 அடி உயரக் கல்வெட்டு இதன் சரித்திரத்தை கூறுகின்றது. கல்வெட்டும், அதன் பொருளும் பின்வருமாறு.

விஜேயாப்துதி சாலிவாகன சக வருஷம் 1789ல், கலியுக வருஷம் 4969 ல் பிறபவாதி சென்ற வருஷம் 60 இதில் வர்த்தமான பிரபவ வருடம் வைகாசி மாசம் 29ல் காஞ்சி மண்டலத்தில் உள்ள விரிஞ்சிபுரம் க்ஷேத்திரம் அருகே சன்னதி அக்கிரகாரத்தில் சாண்டில்ய மகரிஷி கோத்திரத்தை சேர்ந்த அக்கிரவாசிகளான சங்கரநாராயண தீக்ஷதரின் மகனும் சுப்பிரமணிய தீக்ஷதரின் பௌத்திரனுமாகிய சங்கர தீக்ஷதரின் மகன் வித்யாபதி தீக்ஷதர்..

வேலூரில் சோதிநகரத்தில் உள்ள முத்து செட்டியாரின் மகனும் மாறப்ப செட்டியாரின் பௌத்திரனுமான முத்தைய்யா செட்டியாரின் மகன் தாண்டவராய செட்டியார் கல்வெட்டில் கூறப்பட்டுள்ள மேலது தேதி அன்று முத்தைய்யா செட்டியாரின் அண்ணன் பொன்னப்ப செட்டியார் முன்னது ஆண்டு (ஆங்கிரச வருஷம்??) கட்டிய சத்திரம் நந்தவனம்

இவை அவரின் இளைய சகோதரர் முத்துசாமி செட்டியார் ருத்தோத்காரி வருடம் பிரதிஷ்டை செய்து சோமயாகம் செய்து சோமபானம் அபித்தலை



தானம் கொடுத்து மேல் கண்ட.... செய்வித்து அதற்கு தேவைப்பட்ட திரவியங்கள் கொடுத்து பிராமண சந்தறப்பணை** முதலான விஷயங்களுக்கு பிரமாணர்களால் சோமயாகம் பூரணம் செய்து இந்த வகையில் அவர்களுக்கு தாம்பூலம் தக்ஷணை தானம் எல்லாம் கொடுத்து பூரணமாக நடத்தி வைக்கப்பட்டது.

பிரபவ வருஷம் வைகாசி மாசம் 29 தேதி. சமீபத்தில் முகநூல் மூலமாக இணைந்த சில நல்ல உள்ளங்கள் பாழடைந்த ஒரு சத்திரத்திரத்தையும், கோயிலையும் மீட்டனர். அதே போல அப்துல்லாபுர பகுதி இளைஞர்கள் இணைந்தால் இந்தச் சத்திரத்தைச் சீர்செய்ய முடியும்.





# திருவலம் பாலம்

## – சிவசங்கர்



திருவலம், வேலூர் மாவட்டம். திருவலம், பொன்னையாற்றின் மீது கட்டப்பட்டு, 80 ஆண்டுகளைக் கடந்தும், கம்பீரத்தை தொலைக்காத சுதந்திர வரலாற்றில் மட்டுமல்ல சினிமா வரலாற்றிலும், இடம்பெற்றுப் புகழ் பெற்ற இரும்பு பாலத்தை நினைவு சின்னமாகப் போற்றிப் பாதுகாக்க வேண்டும், என்ற கோரிக்கை எழுந்துள்ளது.

தேசிய தலைவர்கள் பலர், பயணம் செய்ததன் மூலம் இந்தியாவின் சுதந்திர வரலாற்றுப் பக்கங்களில் மட்டுமல்ல, பல்வேறு மொழி திரைப்படங்களைச் சுபமாக முடித்து வைக்கும் கிளைமாக்ஸ் காட்சிகளில், இடம்பெற்ற சிறப்புமிக்கது திருவலம் இரும்பு பாலம். அப்போதைய சென்னை ராஜதானியில் சென்னை-பெங்களூரு இடையே செல்லும் நெடுஞ்சாலையில் திருவலம் பொன்னையாற்றின் குறுக்கே பாலம் கட்ட அப்போதைய பிரிட்டிஷ் இந்திய அரசு திட்டமிட்டது.

இதற்கான கட்டுமான பணியைச்சென்னையைச் சேர்ந்த தாராப்பூர் இன்ஜினியரிங் கம்பெனி கடந்த 1935ம் ஆண்டுத் தொடங்கியது. 1939ம் ஆண்டுப் பயன்பாட்டுக்குத் திறந்து விடப்பட்டது. இப்பணியைத் தாராப்பூர் இன்ஜினியரிங் கம்பெனியின் தலைமைப் பொறியாளர் ராபர்ட் எம்பர்சன் மேற்கொண்டார். இப்பாலம் பொன்னையாற்றின் குறுக்கே சாய்வு வடிவ இரும்பு தூண்களைக் கொண்டு பாதுகாப்பான முறையில் துல்லியமாக அமைக்கப்பட்டுள்ளது.

அரை கிலோ மீட்டர் நீளமுள்ள திருவலம் இரும்பு பாலம் கட்டுவதற்கு 10 ஆயிரம் டன் இரும்பு பயன்படுத்தப்பட்டது. 4 ஆண்டுக் காலம் நடந்த இந்தப் பால கட்டுமான பணியில் 1200 தொழிலாளர்கள் பயன்படுத்தப்பட்டனர். பாலங்களை இணைக்க 2 லட்சம் இரும்பு ஸ்குரூக்கள் பயன்படுத்திப் பொருத்தப்பட்டுள்ளது.

இந்த பாலம் இந்திய திரைப்படங்களில் கிளைமாக்ஸ் காட்சிகளில் இடம்பெற்றுள்ளது. நல்ல வலுவுடன் திகழ்ந்து வரும் இந்தப் பாலத்துக்கு 30 ஆண்டுகளுக்கு முன்பு வரை எந்தவித பிரச்சினையும் இல்லை. அதன் பின்னர்ப் பாலத்தை ஒட்டிய ஆற்றுப்படுகையில் நடந்த மணல் கொள்ளை இந்தப் பாலத்தைத் தாங்கும் அடித்தளத்தை அசைத்தது.

இதனால் ஏற்பட்ட அதிர்வுகளும், பாலத்தில் உயரத்தைக் கருத்தில் கொள்ளாமல் வந்த கனரக வாகனங்களாலும் ஆங்காங்கே இரும்பு பாலம் சேதமடைந்தது. இந்த நிலையில் இந்த இரும்பு பாலத்தைப் பாதுகாக்க வேண்டும் என்ற கோரிக்கை மக்கள் மத்தியில் எழுந்தது. இதனை வரலாற்று நினைவு சின்னமாக அறிவிக்க வேண்டும் என்ற கோரிக்கையை மாவட்ட மக்கள் எழுப்பி வருகின்றனர். பல கதாநாயகர்களைக் கண்ட இரும்பு பாலம்திருவலம் இரும்பு பாலத்தைத் தமிழ், தெலுங்கு கன்னட திரைப்படக் கதாநாயகர்கள் சிவாஜிகணேசன், எம்ஜிஆர், ஜெய்சங்கர், ரவிச்சந்திரன், அசோகன், என்.டி.ராமராவ், நாகேஸ்வரராவ், ராஜ்குமார், ரஜினிகாந்த், கமல்ஹாசன் உட்படப் பலர் தங்கள் திரைப்படங்களில் பயன்படுத்திக் கொண்டுள்ளனர்.

இவர்களைத் தொடர்ந்து ஆட்டுக்கார அலமேலு திரைப்படத்தில் சிவகுமாரும், ஜெய்கணேஷும் மோதிக் கொள்ளும் கிளைமாக்ஸ் சண்டைக் காட்சியில் இப்பாலம் இடம்பெற்றுள்ளது. இதுதவிரப் பாலிவுட், மல்லுவுட் படங்களிலும் இந்தப் பாலம் இடம் பெற்றுள்ளது. இன்று வரையில் துருப்பிடிக்காத இரும்பு பாலம் என்பது குறிப்பிடத்தக்கது.

# தாரமங்கலம் நடுகற்கள் 2

– A.T.மோகன், வைரம்
தாரமங்கலம் வரலாற்று ஆய்வு அறக்கட்டளை





இரு சக்கர வாகனத்தில் கண் போன போக்கில் தாரமங்கலம் நடுகற்களைத் தேடி எங்களின் பயணம் இரண்டாம் நாளாக இரண்டாவது பகுதியாகத் துவங்கியது.

முதலில் சேலம் மாவட்டம் அமரகுந்தியில் வயல்வெளி இடையே இருந்த இரண்டு குத்துக் கற்கள் கண்ணில் பட்டது, அதில் ஒன்று மட்டும் வித்தியாசமாய் கந்து வழிபாட்டுக் கல் போல இருந்தது. அதன் அருகில் சிறிது தள்ளி இருந்த வீரக்கல் பார்த்தோம்

இந்த நடுகல் பாதி மண்ணில் புதைந்த நிலையில் கையில் வாளுடன் காணப்பட்டார்.

தொடர்ந்து தொளசம்பட்டி நோக்கி வாகனத்தைச் செலுத்தத் தொடங்கினோம். தொளசம்பட்டியை அடுத்துச் செல்ல சாலை ஓரத்தில் கல்வெட்டுடன் ஒரு நடுகல் காணப்பட்டது. இதில் வீரன் ஒருவன் வில்லேந்தியபடி இருக்கிறார். இதன் பின்புறம் ஒரு கட்டுமானம் காணப்படுகிறது ,அதை இந்த பகுதி மக்கள் ஜீவசமாதி எனக் கூறுகின்றனர்.

பிறகு வந்த வழியே திரும்பி அமரகுந்தி வந்தோம். அங்கிருந்து சோரகை செல்லும் வழியாகச் சென்றால் வழியில் கல்வெட்டுடன் ஒரு சதிக்கல் நடுகல் காணப்படுகிறது.







அதில் வீரன் ஒருவன் வில்லேந்தி இருக்க அருகில் அவர் மனைவியும் மகனும் இருப்பது போலச் சித்தரிக்கப்பட்ட நிலையில் உள்ளது. அந்த இடத்திற்கு மிக அருகில் இன்னும் ஒரு கல்வெட்டுடன் ஒரு நடுகல் காணப்படுகிறது, அதில் வீரன் ஒருவன் குதிரையில் அமர்ந்து இருக்க மற்றொரு வீரன் வாளால் குதிரையைக் குத்துவது போல காணப்படுகிறது.

எடப்பாடி ஊரிலிருந்து ஏரிக்கரை செல்லும் வழியில் வலது புறம் ஊர் எல்லை முடியும் இடத்தில் ஒரு வீட்டின் முன் கல்வெட்டுடன் கூடிய ஒரு நடுகல் காணப்படுகிறது, அதைத் தொடர்ந்து ஏரிக்கரை மீது பயணித்தோம். ஏரிக்கரையில் மொழுமொழுவென்று உருவம் சிதைந்த நிலையில் ஒரு கொற்றவை சிலை காணப்பட்டது.



இதைத் தொடர்ந்து சங்ககிரி நோக்கிச் செல்ல அங்கே தாலுக்கா அலுவலகம் எதிரில் உள்ள வீரமாத்தி அம்மன் கோயிலில் ஒரு நடுகல்





தொடர்ந்து மல்லசமுத்திரம் நோக்கி , வழியில் சாலை ஓரத்தில் ஒரு நடுகல் கோயில் கட்டி வழிபாட்டில் காணப்படுகிறது.

சங்ககிரிக்கு மீண்டும் வருகையில், பண்ணை கிணத்தூர், ஊரின் உள்ளே காணப்படும் மிக மிகச் சிதிலமடைந்த கோயில் , இங்கே இருந்த கல்வெட்டுகள் காணவில்லை. இதன் அருகில் பழைய பெருமாள் கோயில், பாழடைந்த நிலையில்.கருவறையில் உள்ள பெருமாள் நிறைய வித்தியாசமாக இருக்கிறார் ஏன் எனத் தெரியவில்லை.

இதன் அருகில் ஒரு குத்துக்கல் காணப்பட்டது.

அதைத் தொடர்ந்து பூத்தாளக்குட்டை பூத்தாளீஸ்வரர்கோயில் நோக்கி பயணம். பூத்தாளக் குட்டை கிராமத்தில் இருக்கும் பூத்தாளீஸ்வரர் கோயிலில் ஒரு கல்மரம், ஒரு கல்வெட்டு என இரண்டையும் மிக நேர்த்தியாக மேடை கட்டி பாதுகாப்பாக வைத்துள்ளனர்.

சங்ககிரியில் கல் மரமா ?

இது எப்படி சாத்தியம் எனக் கேட்பவர்கள் நேரில் சென்று உறுதி செய்து கொள்ளலாம்..

தொடர்ந்து எடப்பாடி வெண்ணூற்றுபெருமாள்கோயில் நோக்கி சங்ககிரி மலைத்தொடரை ஒட்டி ,எடப்பாடி வழியாகக் கிராமத்துச் சாலையில் சுமார் 15 கிலோமீட்டர் தூரம் கரட்டின் வழியாகச் சென்றால் இந்த கோயில் மற்றும் குளம் வருகின்றது . இந்த குளத்தில் வருடம் முழுதும் தண்ணீர் வற்றுவது கிடையாது அதுவும் மழைக் காலங்களில் குளத்தின் நீர் பால் போல வெண்மையான நிறத்தில் காணப்படும் அதனால்தான் இக்கோவில் மற்றும் இக்குளத்திற்கு வெண்ணூற்று எனும் பெயர் வந்துள்ளது. இங்கே குரங்குகள் கொஞ்சம் அதிகம்.

தொடர்ந்து சோழசிராமனிகிராமம் நோக்கிச் செல்ல தொடங்கினோம்.

எடப்பாடி அருகில், அரசிராமணி என்னும் ஊரில் அமைந்துள்ள சிவன் கோயிலாகும்.



இக்கோயில் பத்தொன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்றும் பல்லவர் கட்டியது என்றும் கருத்துக்களைக் கோவில் பூசாரி பகிர்கின்றார் சரியான ஆய்வுகள் தேவை , இக்கோயிலில் இரண்டு கல்வெட்டுகள் காணப்படுகிறது ,அதைப் படித்தால் ஓரளவுக்கு உண்மையான தகவல் கிடைக்கலாம், அது மட்டுமன்றி இக்கோயில் பாழடைந்த முன் மண்டபத்தில் ஆயுதங்களைக் கூர்மைப் படுத்தும் போது ஏற்பட்ட குழிகளும் காணப்படுகின்றன.

இக்கோயில் முதன்மைத் திருக்கோயில் என்ற வகைப்பாட்டில் இந்து அறநிலையத்துறையின் கட்டுப்பாட்டில் உள்ளது. பரம்பரை அல்லாத அறங்காவலர் அமைப்பால் நிர்வகிக்கப்படுகிறது.

இக்கோயிலில் ஒருகாலப் பூசை நடக்கின்றது. மாசி மாதம் சிவராத்திரி முக்கிய திருவிழாவாக நடைபெறுகிறது.தற்சமயம் கோயில் புனரமைப்பு செய்யப்பட்டு வருகின்றது.

அடுத்து மீண்டும் சங்ககிரி பண்ணை கிணறு கிராமம், அங்கே நாங்கள் கண்ட மிகப் பழமையான விவசாய கிணறு. இந்த ஊருக்குப் பெயரே இந்த கிணற்றின் பெயரில்தான் அழைக்கப்படுகிறது.



கிணற்றின் உட்புறத்தில் ஆட்கள் நிற்க வசதியாக இரண்டு கருங்கல் பலகைகள் , தண்ணீர் இறைக்க வசதியாக உயரமான கல் உத்திரம் ஆனால் மற்ற மரத்தினால் செய்யப்பட்ட பாகங்களைக் காணவில்லை. அங்கே இருந்த பெரியவரிடம் கேட்டதற்கு இது சுமார் **400** வருடங்கள் பழமையான கிணறு என்று கூறினார் ,அங்கே இருந்த பண்ணையார் விவசாயத்திற்கு எனக் கட்டியது என்று கூறினார்...

இந்த பயணத்தில் நாங்கள் இரண்டு இடங்களில் கண்ட இளவட்டக்கல் (கற்கள்) எடப்பாடி அருகில் சூரப்பள்ளி எனும் கிராமத்தில் விநாயகர் கோயிலின் பின்புறம் மூன்று இளவட்டக்கல்லும்.ஜலகண்டாபுரம் கடைவீதியில் விநாயகர் கோயில் அருகில் ஒரு இளவட்டக்கல்லும் பார்த்தோம். தமிழரின் வீரத்தைச் சொல்லும் பாரம்பரியம் இப்படிக் கவனிப்பார் இன்றி.

கொளுத்தும் கோடைக்கு இதமாக அவ்வப்போது இடை இடையே கம்பங்கூழ், மோர், தர்பூசனி, நுங்கு என இயற்கை முறையில் சாப்பிட்டு பசியாற்றி, கொஞ்சம் உணவு நிறையவே நடுகற்கள் என எங்களின் நடுகற்களைத் தேடிய பயணத்தின் இரண்டாம் பகுதியை நிறைவு செய்தோம்.







# மலைக் கிராம மக்களின் பாரம்பரிய திருமணம்.

– கோவிந்தபாடி சன்முகம், A.T மோகன்

கோடீசுவரர் முதல் பாமரன் வரை ஒரே மாதிரியான திருமணம். சேலம் மாவட்டம் மேட்டூர் அருகில் உள்ள மலைக்கிராமங்களில் மிக எளிய முறையில் நடைபெறும் பாரம்பரிய முறைப்படியான திருமணங்கள் பற்றி இக்கட்டுரையில் காண்போம்.

இங்கு ஒரு சமூக மக்கள் அதிக அளவில் வசிக்கிறார்கள். இவர்கள் உள்ளூரிலேயே பெண் கொடுத்து வாங்கிக் கொள்வார்கள், வெளியூரில் கொடுப்பது இல்லை. இந்த டிஜிட்டல் யுகத்திலும் பாரம்பரிய முறைப்படி திருமணம் செய்துகொள்கிறார்கள். திருமண மண்டபங்களுக்கு லட்சக்கணக்கில் செலவு செய்யும் நிலையில், கோடீஸ்வரனாக இருந்தாலும் ஏழையாக இருந்தாலும், ஊர் மந்தையில்தான் திருமணம் நடத்துகிறார்கள். ஒரே நேரத்தில் மலைக் கிராமத்தில் திருமண வயது வந்த அனைவருக்கும் ஒரே நேரத்தில் பந்தல் அமைத்துத் திருமணங்கள் நடத்துகிறார்கள். ஊரும் உறவுகளும் ஒன்றுகூடி, பாரம்பரிய சடங்குகள் நடத்தி, சிறப்பாக திருமணம் நடத்துகிறார்கள்.

அதிக அளவிலான திருமணங்கள் ஊர் மந்தையில் அல்லது அவரவர் வீட்டின் முன் பகுதியில் வெள்ளேரி இலைகள் பாலை மரத்தின் குச்சிகளைக் கொண்டு பந்தல் அமைத்து திருமணம் நடத்துகின்றனர்.

அருகில் உள்ள மலைப் பகுதியிலிருந்து வெள்ளேரி இலைகள் பாலை குச்சிகளைக் கொண்டு வந்து அந்தக் குச்சிகளை வைத்து மணப்பெண்ணுக்குச் குடிசை அமைக்கின்றனர். பிறகு மணமகளை அழைத்துவந்து குடிசையில் அமர வைக்கிறார்கள். குடிசைக்கு அருகே, மணமகன் அமர்வதற்குச் சாக்கு விரிப்பு விரித்து. மணமகனை அழைத்து வந்து விரிப்பில் அமர வைக்கின்றனர். திருமணத்தை நடத்திவைக்கும் ஊர்த் தலைவர், பாரம்பரிய முறைப்படி திருமணச் சடங்குகளை நடத்திவைக்கிறார்.

மணமகளைத் தயாராக இருந்த பஞ்சகல்யாணி குதிரையில் அமரவைத்து, ஊர் மந்தையை வலம் வர வைக்கிறார்கள். கடைசியில், குதிரையிலிருந்து கீழே இறங்க விடாமல் தாய்மாமன்



மணமகளைத் தூக்கிக்கொண்டுபோய் மணமகனிடம் ஒப்படைக்கிறார். தாய் மாமன் தூக்கிக் கொண்டு போய் கொடுத்தால் தான் திருமணம் நடக்கும். பாரம்பரிய வாழ்த்துப் பாடல்கள் ஒலிக்க, மணமகன், மணமகள் கழுத்தில் மாங்கல்யத்தைக் கட்டுவார்.

இரு வீட்டுப் பெண்களும் தங்கள் உறவுகள் வலுப்படும் வகையில் சீர்கள் கொடுப்பார்கள். போட்டிபோட்டு நடனங்கள் ஆடுவர். மகிழ்ச்சியில் பெரியவர்கள் முதல் சிறியவர்கள் வரை பாரம்பர்ய தேவராட்டம் ஆடி, மணமக்களை ஊர்வலமாக அழைத்துச்செல்வார்கள். மணமக்கள் இருவருக்கும் தாய் வீட்டு சீராக ட்ரங்பெட்டி, பாய் தலையணை, போர்வை வழங்குவார்கள். சிலர் கால்நடைகள் கூட சேர்த்து வழங்குவது உண்டு.

கல்வராயன்மலை கிராமங்களில், வசித்து வரும் பழங்குடியின மக்கள், இளம் வயதில் கணவரை இழந்த விதவை பெண்களுக்கு, உறவினர்கள் ஒன்று கூடி, மறுமணம் செய்து வைக்கின்றனர்.

சேலம், விழுப்புரம், திருவண்ணாமலை, தர்மபுரி மாவட்ட எல்லையாக, கல்வராயன் மலை உள்ளது. இதில், ஆத்தூர் அடுத்த, பெரிய கல்வராயன், சின்னக் கல்வராயன், அருநூத்துமலை, நெய்யமலை பகுதிகளில், 150க்கும் மேற்பட்ட மலைக் கிராமங்கள் உள்ளன. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன், காஞ்சிபுரம் மாவட்டத்திலிருந்து இடம் பெயர்ந்து வந்து, இம்மலை பகுதிகளில் ஆயிரக்கணக்கான மலைவாழ் மக்கள் வசித்து வருகின்றனர். இங்கு, கோவில் விழா, திருமணம், இறுதி சடங்குகள் உள்ளிட்டவை பாரம்பரிய முறையைப் பின்பற்றுகின்றனர்.

திருமணமானதும் ஆண் இறந்துவிட்டால்,







அவருக்கான இறுதி சடங்கு முடிந்ததும், கணவரை இழந்த பெண்ணை அழைத்து, அவரது விருப்பத்தைக் கேட்டு திருமணம் செய்து வைக்கின்றனர். ‘கனியான்’ என்றழைக்கப்படும் நாட்டின் தலைவர், திருமணத்தை நடத்தி வைக்கிறார். நகர் பகுதிகளில் கூட, விதவைகள் மறுமணத்துக்கு ஆதரவு கிடைக்காத நிலையில், மலை கிராம மக்கள் மறுமணம் செய்து வைத்து, இளம் பெண்களை வாழ வைக்கின்றனர்.







இதுகுறித்து, கல்வராயன்மலை கிராம மக்கள் கூறியதாவது, இளம் வயதில், குழந்தை கூட இல்லாத நிலையில் கணவரை இழந்த பெண்களுக்கு, விரும்பும் நபருக்கு மறுமணம் செய்து வைக்கப்படும். குழந்தை உள்ளவர்கள் சிலரும், மறுமணம் செய்து கொள்கின்றனர்.

விதவை பெண், மறுமணம் செய்து கொள்ளாமல் கைம்பெண்ணாக இருப்பதால், எந்தச் சுப நிகழ்ச்சியிலும் பங்கேற்க முடியாது. குடும்பத்திற்கும் தீங்கு ஏற்படும் என்பதால் மறுமணம் செய்து வைக்கிறோம். மருத்துவக் குணம் கொண்ட, வெள்ளேரி இலைகளைக் கொண்டு பந்தல் போடப்படும். இவை, 20 நாட்கள் வரை இலை காயாமலும், உதிராமலும் இருக்கும். இவ்வாறு அவர்கள் கூறினர்.





# மங்கா தேவி 3 (தொடர்)

கோமகள் குமுதா

ஓவியம்: பூரணி

அத்தியாயம் -- 5

பெருமை வாய்ந்த மதுரை நாயக்கர் வம்சத்தில் திருமலை நாயக்கனின் மகனாக பிறந்து தந்தையின் மறைவுக்குப் பிறகு அரசு கட்டிலில் அமர்ந்தவுடன் தலைநகரை மதுரையிலிருந்து திருச்சிக்கு மாற்ற கோட்டையை வலுவுடையாதாகச் செய்து எண்ணற்ற வீரர்களையும் ஏராளமான வெடி மருந்தையும் கோட்டையில் சேகரித்து பீஜப்பூர் சுல்தானுக்கு பதிலடி கொடுக்க ஆயத்தம் செய்தான் மதுரை நாயக்கன் முத்துவீரப்பன்.அப்பேர்பட்ட மாவீரனை வஞ்சகமாக தளவாய் இலிங்கம நாயக்கனும் பிரதானியும் இராயாசமும் ஒன்று கூடி சூழ்ச்சி செய்து திருச்சியிலிருந்து மதுரைக்கு திரும்பும் வழியில் ஆட்சிக் கட்டிலில் ஏறிய நான்கே மாதங்களில் கொன்றனர். வரும் வழியில் புலிதாக்கி மன்னர் முத்துவீரப்ப நாயக்கன் இறந்தார் என்ற செய்தியை அரசியிடம் தெரிவித்தனர். தளவாய் இலிங்கம நாயக்கன் மன்னருக்கு மிகவும் நெருங்கிய அனைவரையும் சிறையிலடைத்தான்.அரசியை திருமலை நாயக்கர் மஹாலில் உள்ள சுரங்க அறையில் பலத்த காவலுடன் சிறையிலடைத்து சித்திரவதை செய்தான். ஆவினன்குடி காட்டில் நூறுபேர் சூழ பட்டத்து இளவரசனை கைது செய்து மதுரைக்கு அழைத்து வந்த தளவாய் இலிங்கம நாயக்கனும் அவன் கூட்டாளிகளும் மக்கள் மன்றத்தில் பதில் கூற முடியாது என்ற காரணத்தால் சூழ்ச்சி செய்து வஞ்சகத் திட்டம் வகுத்து இளவரசனை மன்னனாக பெயரளவில் முடிசூடி அரண்மனைச் சிறையில் வைத்து அதிகாரத்தைக் கைபற்றினர்.

அரசனுக்கு வேண்டிய நன்றி விசுவாசமுள்ள பலரையும் கொன்று குவித்தனர்.சிலரை நாடு கடத்தினர்.தன் தாயின் நிலை தெரியாததால் அவர்கள் கூறிய கட்டுபாடுகள் அனைத்துக்கும் கட்டுபட்டு அமைதி காத்தான் இளவரசன்.மீறினால் அவன் தாயின் உயிர் அரைக்காசு பெறாது என்று அவனை எச்சரித்து அரண்மனையை விட்டு எங்கும் செல்ல முடியாத படி அவனை அரண்மனையில் சிறைவைத்தனர்.

அன்றும் இளவரசி மங்கலதேவி அந்த நான்காம் நாள் தேய்பிறை நிலவின் மெல்லிய

ஒளி வீசிய இரவு ஆரம்பித்து நான்கு நாழிகை பொழுதோடிய அந்த அர்த்த ஜாமத்தில் கொடிவீட்டின் இருளில் பளிங்கு மேடை மேல் வானத்து தேவதை போல் படுத்து கிடந்தாள். அவள் மனக்கண்முன் மீண்டும் அந்த இளைஞனின் முகம் எழவே அவள் இன்பவயப்பட்டாள்.

அரண்மனை நந்தவனத்துள் அந்நிய ஆடவன் ஒருவன் நுழைந்ததோ அவன் கொடிவீட்டில் பளிங்கு மேடையில் படுத்து கிடந்த இளவரசியை வைத்த கண் மாறாமல் பார்த்து திகைத்து நிற்பதையோ யாரும் காணவில்லை. தஞ்சை அரண்மனையின் தூண்களும் அந்த கிருஷ்ணபட்சத்து நிலவும் விண்மீன்களும் மட்டுமே நடக்கப் போவதை ஆவலுடன் பார்த்து கொண்டிருந்தன.

திடீரென்று படுத்துக் கிடந்த மங்கலதேவி எழுந்து அமர்ந்ததையும் அவள் கைகள் பின்னால் சென்று எதையோ இறுகபற்றியபடி மேடையிலிருந்து கண்ணிமைக்கும் நேரத்தில் குதித்து தன்னை நோக்கி குறுவாள் வீசியதையும் கண்டு அந்த மறைந்து நின்ற மர்ம மனிதன் மலைத்தான். இவள் குறுவாள் எறிவதில் மிகவும் பயிற்சி உடையவள் என்பதை நொடியில் புரிந்து கொண்டு அந்த வீரமங்கையை அவ்வளவு சுலபமாக யாரும் நெருங்க முடியாது என்பதை அறிந்து அவள் எதிரியின் மகள் என்ற போதிலும் அவளுக்கு அந்த வீரத்தை ஊட்டிய அவள் தந்தையை மனதிற்குள் பாராட்டினான்.

"ஏய் யார் நீ வா என் முன்னே". அடுத்த குறுவாளை அவள் கை இறுக பற்றியதும் அது எந்த விநாடியும் தன்னை நோக்கி வரும் என்று நினைத்து முடிக்கும் முன் 'கிளங்' என்ற சத்தத்துடன் மங்கல தேவியின் குறுவாள் நிலத்தில் விழுந்தது.. வந்திருப்பவன் சிறந்த வீரன். தான் வீசிய குறுவாளின் வேகத்தை கணக்கிட்டு அதை தன் வாளால் தடுப்பதென்றால்... சிறிது சுவாரசியமாக இதழ்கோடியில் நகை அரும்பியபடி தன் முன்னே அவ்வளவு இருள் கவிந்திருந்த நேரத்திலும் கம்பீரமாக இடுப்பில் கைவைத்தபடி ஒரு சிலையைப் போல் நின்ற அவளைப் பார்த்து திகைத்தான் அந்த மர்ம மனிதன்.

எட்ட இருந்த மேடையைத் தொட்டு நின்ற பிறைமதியின் ஒளி உள்ளே முழுவதும் பாயவில்லை யென்றாலும் அரைகுறை வெளிச்சத்தை அந்தக் கொடிவீட்டினுள் வீசியதால் மங்கிய ஒளி பரவி நின்றது.அந்தக் குறைவான வெளிச்சத்தில் அவள் முகம் தெளிவாகப் புரியாவிட்டாலும் அந்த தெளிவற்ற தன்மையிலும் அது தனி அழகு வாய்ந்திருந்ததையும் தெளிவாக பார்க்க முடியாத தன்மையாலேயே அதில் அழகும் மர்மமும் கலந்திருந்தன.

மங்கலான வெளிச்சத்தில் லேசாகத் தெரிந்த மங்கலதேவி அவன் கண்களுக்கு மெல்லிய ஒளித்திரைக்குப் பின் வீற்றிருந்த தெய்வீக மங்கை போல் காட்சியளித்தாள். தெய்வீகமான எதுவும் முழுதும் கண்களுக்கு புலப்படுவதில்லை. அதனாலேயே மர்மம் நிறைந்ததாக மாறி அதன் மேல் ஆசையைத் தூண்டுகிறது. இது இயற்கையின் விசித்திரம் என்று எண்ணினான் அந்த மர்ம மனிதன்.

இத்தகைய எண்ணங்களால் நீண்ட நேரம் மௌனமாக நின்றிருந்த அந்த நிழலுருவம் சரேலென்று மறைந்தது. கண்ணிமைக்கும் நொடியில் அந்த மனிதன் எங்கு சென்றிருப்பான் என்று எண்ணிய மங்கல தேவி தன் கையிலிருந்த குறுவாளை இறுகப் பிடித்தபடி சற்றே திரும்ப எத்தனித்த போது அவளை இருந்த இடத்திலிருந்து நகரவிடாமல் உடும்பு பிடியாக பிடித்து தன் மேல் சாய்த்துக் கொண்டான் அந்த மர்ம மனிதன்.

"தேவி நான்தான்" என்ற சொற்களும் அவள் காதில் ஒலித்தது.உள்ளத்தின் எழுச்சியாலும் உணர்ச்சிகளின் தூண்டுதலாலும் அவள் கற்பனையில் தேடிய முகம் அப்படி தன்னை இறுக அணைத்தபடி மேடையில் தன் அருகில் நிற்பவன் தன் உள்ளத்தை கொள்ளை கொண்டவன் தான் என்றாலும் அஞ்ச வேண்டாம் என்ற சொற்கள் உண்மையில் அவள் அச்சத்தை அறவே வெட்டிவிடுவதே இயல்பு. ஆனால் அதற்கு புறம்பாக அவள் சிந்தையில் அச்சத்தையே விளைவித்ததால் சில விநாடிகள் என்ன செய்வதென்று அறியாமல் அவன் மீதே சாய்ந்தாள்.

நள்ளிரவில் ஓர் ஆடவன் கள்ளத்தனமாக அரண்மனையின் கொடிவீட்டில் தன் அருகில் இருப்பது எத்தனை முறைகேடு.எத்தனை விபரீதம் என்பதை எண்ணியதால் அவள் மனத்தின் சஞ்சலம் எத்தனையோ மடங்கு அதிகமாகவே சஞ்சலத்தைக் குறிக்கும் பெருமூச்சு ஒன்றும் அவள் நாசியில் அனலாக வெளிப்போந்தது.

அத்தனை சஞ்சலத்தையும் அச்சத்தையும் மீறி இன்பமான ஒரு கள்ளத்தனமும் ஊடுருவி நிற்பதை உணர்ந்து கூடிய வரையில் நெறியைத் தகர்த்து எறிய உணர்ச்சிகள் எத்தனைத் துணை செய்கின்றன என்பதை எண்ணி இயற்கையின் சக்தியைக் குறித்துப் பெரிதும் வியந்தாள். சஞ்சலம் கள்ளத்தனம் வியப்பு இவற்றையெல்லாம் மீறிய வெட்கமொன்று அவளை அழுத்திக் கொண்டது. வெட்கம் தான் பெண்களின் நெறியைப் பாதுகாக்கும் பலத்த இரும்புக் கவசம் என்பதைப் புரிந்து கொண்டாள் மங்கல தேவி. வெட்கம் பயத்தை அளிக்கிறது.பயம் நெறியைக் காக்கிறது.இவை இரண்டும் இல்லாததால் தான்

ஆடவர் விரைவில் நெறி குறைந்து விடுகிறார்கள்.

இவை இரண்டும் இருப்பதால் தான் பெண்கள் தங்களைப் பாதுகாத்துக் கொள்கிறார்கள் என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்ட மங்கலதேவி சடாலென்று அவன் கைகளில் தன் உடம்பை ஒரு திருகுதிரிகி நழுவி தன்னை விடுவித்துக் கொண்டு பளிங்கு மேடையின் அருகிலிருந்த திட்டில் முழந்தாள்களைக் கட்டிக் கொண்டு தலைகவிழ்ந்து உட்கார்ந்து கொண்டாள். அப்படி தன்னிடமிருந்து திடீரென்று திமிறி நழுவிச் சென்று திட்டில் அமர்ந்திருந்த அவளைச் சில விநாடிகள் உற்று நோக்கினான் சொக்க நாதன்.

எதுவும் பேசாமல் இருவரும் பதுமை போல் இருந்தது எவ்வளவு நேரம் என்று அவர்கள் உணரவே இல்லை. எங்கோ ஓர் ஆந்தையின் அலறல் ஒலி கேட்டு இந்த உலகத்திற்கு வந்தனர்.

சொக்கநாதன் அப்படியே மலங்க மலங்க விழித்தபடி நின்றதைக் கண்ட மங்கலதேவி மெல்ல நகைத்தாள்.ஏதோ பேச வேண்டும் என்பதால்
" இரவு மிகவும் ஏறிவிட்டது" என்றான் சொக்கன் சற்று முணுமுணுப்பாக.

மீண்டும் நகைத்த மங்கலதேவியின் இடையை இறுகப்பிடித்து மீண்டும் அவன் கைகளால் சிறை செய்தான் சொக்கன்.இடையிலிருந்த அவன் கைகள் சற்றே அசைந்தது.

"ஏன் சிரித்தாய் தேவி " என்று அவள் கன்னங்களைப் பிடித்து இருபுறமும் நெரித்தான்.

அதனால் மொட்டெனக் குவிந்த இதழ்களை அவன் விரல்கள் ஒரு விநாடி தீண்டி மீண்டன.
"சரி சரி கையை எடுங்கள் கன்னம் வலிக்கிறது" என்றாள் இளவரசி பொய்கோபம் காட்டி.
"நீ ஏன் சிரித்தாய் அதற்கான காரணம் சொன்னால் தான் கையை எடுப்பேன்" என்று பிடிவாதம் செய்தான் சொக்கன்.

"கன்னங்களை அழுத்திப் பிடித்துக் கொண்டால் எப்படி பதில் சொல்வது ? என்று குழறினாள் மங்கலதேவி.

கன்னத்திலிருந்து கையை நீக்கினான் சொக்கன்.
"சரி இப்பொழுது சொல்"
என்றான் பேச்சோடு நிற்காமல் அவள் தலையைத் தடவியது அவன் வலக்கை.

"எங்கள் அரண்மனையின் நந்தவனத்தை கடந்து அரசமகளிர் உலவும் கொடிவீட்டிற்குள் திருட்டுத்தனமாக நுழைந்து தஞ்சையின் இளவரசியை நள்ளிரவில் இப்படி இறுகத் தழுவிக் கொண்டு இருப்பதை தஞ்சை மன்னர் அறிந்தால் என்ன நடக்கும்? "

"என்ன நடக்கும் ?"
என்று அவன் வாய் பேசியதே ஒழிய மனம் கடினபட்டுவிட்டது.

தஞ்சை மன்னன் விஜயராகவ நாயக்கனை எண்ணியதும் மங்கலதேவியின் தோளிலிருந்த தன் கைகளை எடுத்துக் கொண்டான். அவன் முகம் கடினபட்டுவிட்டதை கண்ட மங்கலதேவி இவன் ஏதோ ஒரு காரணத்தால் தன் தந்தையை வெறுக்கிறான் என்பதை உணர்ந்தாள். மிகவும் பண்பாடும் வீரமும் நிறைந்த அவன் , தன் தந்தை மீது காட்டிய வெறுப்பு அவளுக்கு கலக்கத்தை அளித்தது. அவள் கலக்கம் தீர்ந்ததா? அவர்கள் காதல் அந்த பகைமையை அறுத்ததா?

## அத்தியாயம்-- 6

தஞ்சை மன்னன் விஜயராகவ நாயக்கன் பெயரை மங்கலதேவி கூற கேட்ட சொக்கநாதனின் நினைவலைகள் பின்னோக்கிச் சென்றது.

மன்னர் புலிதாக்கி இறந்த செய்தி கேட்டு ராஜமாதாவான தன் தாய் பட்டத்து இளவரசனான தன்னை எதிரிகள் கொன்று விடக்கூடும் என்றஞ்சி தன் பிறந்தவீட்டுக்கு சுரங்கப்பாதை வழியாக மெய்காப்பாளர்களுடன் அனுப்பியது இன்று நடந்த நிகழ்ச்சி போல் அவன் மனக்கண்ணில் காட்சிகள் ஓடியதை கண்டான்.தன் தாயின் கதி என்னவாயிற்று என்றே தெரியாமல் அவன் இதயம் ரணமானது.தளவாய் இலிங்கம நாயக்கனும் பிரதானியும் இராயாசமும் ஒன்று கூடி சூழ்ச்சி செய்து தன் பணிமக்கள் என்று நம்பி பிரயாணம் செய்த தன் தந்தை மதுரையின் மன்னர் முத்து வீரப்ப நாயக்கனை நடுக்காட்டில் வெட்டிக் கொன்ற நம்பிக்கை துரோகிகளை எண்ணியதும் அவன் கண்கள் கோபத்தால் சிவந்து செந்தணல் போல் மாறியது. பற்களை நறநறவென்று கடித்து கைகளை மங்கலதேவி அமர்ந்திருந்த திட்டின் அருகிலிருக்கும் பளிங்கு மேடையில் ஓங்கி குத்தினான்.
மேடை டமார் என்ற சத்தத்துடன் இரண்டாக பிளந்தது கண்டு மங்கல தேவி செய்வதறியாது திகைத்தாள்.

தன் தந்தையை கொன்றதில் தஞ்சை மன்னன் விஜயராகவ நாயக்கனுக்கும் தொடர்பு இருப்பதாக தெரிந்ததும் தன் தந்தையை படுகொலை செய்த அந்த பாதகர்களை பழிவாங்கத் துடித்தான் சொக்கநாத



மஹாலின் அந்தப் பகுதியை இடித்து தரைமட்ட மாக்கினான்.

சூழ்ச்சி செய்து தன் பெற்றோரைக் கொன்ற கயவன் நயவஞ்சகன் தளவாய் இலிங்கமனைத் தேடிப் புறப்பட்டு வந்த போது தான் அவன் உயிருக்கு பயந்து செஞ்சி மன்னன் சகோசியிடம் அடைக்கலம் புகுந்ததை அறிந்தான் சொக்கன்..

தஞ்சை விஜயராகவ நாயக்கனின் உதவிப்படையோடு திருச்சியிலிருந்த சொக்க நாத நாயக்கனைத் தாக்கினான் தளவாய் இலிங்கமன். புதிதாக பொறுப்பேற்ற மதுரைப் பிரதானியும் இலிங்கமனோடு சேர்ந்து சதி செய்ததால் மதுரைப் படைத்தலைவர்கள் பலர் மடிந்தனர். சிலர் சிறைபட்டனர். இலிங்கமன் மீண்டும் சொக்க நாத நாயக்கனைச் சிறைபடுத்த முயன்றான்.

நாயக்கன்.

தளவாய் இலிங்கம நாயக்கன் செஞ்சிக்கு சென்ற சமயத்தில் அரண்மனைச் சிறையிலிருந்து தப்பினான் இளவரசன் சொக்கநாத நாயக்கன்.

அரண்மனையில் மக்களைத் துன்புறுத்தி வரிப்பணம் பறித்துக் கொண்டிருந்த பிரதானியையும் இராயாசத்தையும், நாடு கடத்தப்பட்ட தன் தந்தையின் விசுவாசிகளான இருபடைத்தலைவர்களின் உதவியோடு கொன்றான்.அதிகாரத்தை கைபற்றி மதுரை நாயக்கரின் அரசு கட்டிலில் முழு உரிமையோடு ஆளத் துவங்கினான்.

தன் தந்தை தலைநகரத்தை திருச்சிக்கு மாற்ற எண்ணிய திட்டத்தை மீண்டும் செயல் படுத்தினான்.

திருமலை நாயக்கர் மஹாலில் உள்ள சுரங்க அறையில் சிறைவைக்கப் பட்டிருந்த தன் தாயை மீட்க வீரர்களைக் கொண்டு திருமலை நாயக்கர் மஹால் முழுவதும் தேடியும் தன் தாய் சிறைவைக்கப் பட்ட இடத்தை கண்டுபிடிக்க இயலாமல் மனம் வாடினான்.

இறுதியாக பட்டத்தரசியின் நெருங்கிய பணிப்பெண் கூறியதைக் கேட்டு மஹாலில் தென்மேற்கு மூலையில் நான்கு புறமும் அடைத்து புதிதாக கட்டிய ஒரு அறையை கண்டுபிடித்து அதன் உள்ளே செல்ல வழியே இல்லாததால் ஒருபக்கத்து சுவற்றை இடித்து உள்ளே சென்று தன் தாயின் எலும்பு கூடு இருந்ததைக் கண்ட சொக்க நாதன் கண்கள் சினத்தால் சிவக்க தாளமுடியாத கோபத்தால் திருமலை நாயக்கர்

ஆனால் தன் பெற்றோரைக் கொன்ற அந்தப் பாவியை கொல்ல தானே படைத்தலைமை தாங்கி ஆவேசமாக போரிட்டான் சொக்க நாதன். மதுரை வீரர்கள் தங்கள் மன்னனின் புயல் வேகம் கண்டு ஆர்பரித்து வீறு கொண்டு எழுந்தனர்.எதிரிப்படை புறமுதுகிட்டு ஓடியது. இறுதியில் செஞ்சி மன்னன் சகோசியும் மதுரை தளவாய் இலிங்கமனும் தஞ்சை மன்னன் விஜயராகவ நாயக்கனிடம் தஞ்சம் புகுந்தனர். தஞ்சையைத் தாக்க லட்சம் வீரர்களடங்கிய பெரும் படையுடன் தஞ்சைக்கு வரும் வழியில் தான் அடர்ந்த காட்டின் சோலையில் தன் சிற்றன்னையின் மகன் அழகிரி நாயக்கன் தஞ்சை இளவரசி மங்கல தேவியைத் துரத்திக் கொண்டு வந்து பின் தன்னைக் கண்டதும் ஓடி விட்டதை எண்ணியபடி அமர்ந்திருந்தான் சொக்க நாதன்.

தான் யார் என்பதே தெரியாமல் தன்னை விரும்பும் தஞ்சை இளவரசி மங்கல தேவியை எண்ணி மனம் வருந்தினான்.

தான் இன்னான் என்று தெரிந்தால் அவள் தன்னை நிராகரித்து விடுவாள் என்று மிகவும் மனம் வருந்தினான்.கொடிவீட்டின் பளிங்கு மேடையை ஆத்திரத்தால் உடைத்த சொக்க நாதன் மனதில் ஏதோ ஆறாத ரணம் இருப்பதை உணர்ந்து ஏதும் புரியாமல் அவனை பார்த்தபடி மனம் வாடினாள் இளவரசி மங்கல தேவி.

சொக்க நாதனின் மன ஓட்டம் தன்னைப் பற்றியே என்று அறிந்தால் அதுவும் தன் தந்தையின்

பரம வைரி மதுரை மன்னன் சொக்க நாத நாயக்கன் தான் தன் காதலன் என்பதறிந்தால் அவளின் நிலை எப்படி இருக்கும்? இறைவன் சில சமயங்களில் ஏன் இப்படி பொருந்தாத மனிதர்களை இணைக்கிறான் என்பது பிரபஞ்ச ரகசியம் அன்றோ!!.அதைப்பற்றி எதுவும் அறியாத மனிதன் எல்லாம் தனக்குத் தெரியும் என்று பிதற்றுகிறான்.தன்னை உணர்ந்தவன் ஞானி. எல்லாம் மாயை என்றுணர்ந்தவன் மகாயோகி.

பெற்றோரை இழந்து உடன் இருந்தவர்கள் செய்த துரோகத்தால் மனம் வெதும்பி தன்னை உள்ளன்போடு நேசிக்க ஒரு ஜீவன் கூட இல்லையே என்ற கழிவிரக்கத்தால் பலநாள் தனிமையில் வாடிய சொக்கன் தன் மேல் அன்பைச் சொரிந்த அந்த பெண்ணிடம் தன்னைப் பற்றிய உண்மையை மறைத்தான். அவள் தன் மீது காட்டிய அன்பை இழப்பதற்கு பதில் எத்தனை சாம்ராஜ்யங்களை வேண்டுமானாலும் இழக்கலாம்.உண்மையான அன்பிற்காக ஏங்கிய அவன் மனம் தன் உயிரையும் அவளுக்காக இழக்கலாம்.ஆனால் எதன் பொருட்டும் யார்பொருட்டும் அவளை இழக்க முடியாது என்று எண்ணி மன உறுதி கொண்டான்.

"நீங்கள் இப்படியே என்னைக் கட்டிக் கொண்டு அமர்ந்திருந்தால் ஓடும் நாழிகைகளையும் கட்டி விட்டீர்கள் என்று எண்ணமா "
என்று மெல்லிய குயில் குரலில் அவள் பேசியது கேட்டு

" ம்ம் அப்படித்தான் என்று வைத்துக்கொள்ளேன் "
என்று கூறி இன்னும் இறுக்கி தன்னோடு அவளைச் சேர்த்துக் கொண்டான் சொக்கன்.

அத்தனை கட்டுக்காவல்களையும் கடந்து காவலர்கள் கண்ணில் அகப்பட்டால் அடுத்த நொடியே உயிர் போகும் என்று அறிந்தும் தன்னைக் காண அவன் பட்ட சிரமங்கள் அவள் மனதை நெகிழ்வித்தது.

"நீங்கள் எப்படி அரண்மனை நந்தவனத்துள் நுழைந்தீர்கள்? யாரும் பார்க்கவில்லையா?
என்று மங்கலதேவி வினவிய அதே சமயத்தில் குக்கூ குக்கூ என்று குயிலின் ஓசை கேட்டது.உடனே பரபரப்படைந்த இளவரசி
" நான் செல்கிறேன். என் தோழி மங்கா யாரோ வருகிறார்கள் என்றால் இப்படி சமிங்ஞை செய்வாள் என்றாள்."

தேவி நான் மீண்டும் உன்னைக் காண்பேனோ என்னவோ. நாளை செஞ்சிக் கோட்டை செல்கிறேன். எப்பொழுது வருவேன் என்று எனக்கே தெரியாது. மீண்டும் நான் உன்னைக் காண வரும்போது நாம் முதன்முதலில் சந்தித்தோமே அரசலாற்றங்கரையின் அருகிலிருந்த அந்தச் சோலையில் உனக்காக காத்திருப்பேன் வருகிறேன்"
என்று அவளை அணைத்து தலை உச்சியில் இதழ்பதித்து அந்த இடத்தை விட்டு அகன்றான். சொக்கன்.

சிலைபோல் அமர்ந்திருந்த மங்கலதேவி தன்னை மறந்தாள். தான் அமர்ந்திருந்த கொடிவீட்டை மறந்தாள்.அவள் புறக்கண்கள் திறந்தே இருந்தாலும் அவன் உருவத்தை தவிர அவள் எதுவும் காணவில்லை.

" இளவரசி , தேவி"
என்று தன் தோளை தொட்டு உலுக்கிய அவளுடைய உயிர்தோழியை
" ஆ... மங்கா !! நீயா!! நான் யாரோ என்று....."
" யாரோ என்றா அல்லது உங்கள் அன்பர் அந்த மாவீரர் என்று எண்ணியா? இந்த மங்காவையே மறக்கும் அளவுக்கு உங்கள் அன்பர் என்ன மாயம் செய்தார் தேவி"
என்று தன்னைக் கேலி செய்த தன்உயிர்த் தோழி மங்காவின் கைகளைப் பிடித்துக் கொண்டு

" ஏய் மங்கா அவரை மந்திரவாதி என்றா கூறுகிறாய்?"
என்று கூறி நகைத்தாள் மங்கல தேவி\

." ஓ.. சரியாகத்தான் கூறுகிறிர்கள் என்ன சொக்கு பொடி போட்டாரோ!! எங்கள் தஞ்சை இளவரசி இப்படி ஒரு தவயோகி போல் அமர்ந்து அவரைப் பற்றியே சிந்திக்க "
என்று பொய்யாக வருத்தப்பட்ட தன் ஆருயிர்தோழி மங்காவின் காதை பிடித்து செல்லமாக முறுக்கி

" அடிக்கள்ளி உனக்கும் இதுபோல் நேரும். அப்பொழுது பார்.என்னை விட்டுவிடுங்கள் என்று ஆயிரம் முறை நீ கூறி தோப்புக்கரணம் போட்டாலும் உன்னைக் கேலி செய்யாமல் விடமாட்டேன்"
என்று அவள் கைகளை பிடித்து இழுத்துக் கொண்டு அரண்மனை நோக்கி விளையாடிக் கொண்டே சென்றன, அந்த வெளிஉலகம் அறியாத பூங்கிளிகள்.

கொடிவீட்டின் இருண்ட மூலையில் கோபத்தால் சிவந்த ஒரு ஜோடி விழிகள் இவர்கள் போவதையே வெறித்து பார்த்தது.

செஞ்சிகோட்டை சென்ற சொக்கன் மீண்டும் இந்த வஞ்சியைக் காண வந்தானா?

(தொடரும்..)

# கூவாகம் கூத்தாண்டவர் திருநங்கைகள் – வேலுதரன்

கூத்தாண்டவருக்குக் கடலூர், விழுப்புரத்தில் இருந்து கோயமுத்தூர் வரை பல கோயில்கள் இருந்தாலும் விழுப்புரம் அருகே கூவாகம் கிராமத்தில் உள்ள கூத்தாண்டவர் கோயிலில் வருடம்தோறும் சித்திரை மாதம் நடைபெறும் 18 நாள் திருவிழாவே மிகச்சிறப்பு வாய்ந்ததாகும். இந்த வருட சித்திரைத் திருவிழாவின் முக்கியமான இரண்டு நாள் நிகழ்வையும் காணும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது.

நாட்டின் பல பகுதிகள் மற்றும் வெளிநாடுகளில் இருந்தும் திருநங்கைகள் இங்கு வந்திருந்து விழாவில் கலந்துகொள்கின்றனர். கூத்தாண்டவர் கதாபாத்திரம் மகாபாரதக் காவியத்துடன் தொடர்பு உடையது. பதினெட்டு நாட்கள் நடைபெற்ற மகாபாரதக் குருஷேத்திரப் போரின் நினைவாகவே இங்குத் திருவிழாவும் 18 நாட்கள் நடைபெறுகின்றது. 15வது மற்றும் 16வது நாள் நடைபெறும் நிகழ்வைக் காணவே, திருநங்கைகளுடன் பொதுமக்களும் கலந்து கொள்கின்றனர். சாதாரணமாகச் சாலைகளிலும் வயல் வெளிகளிலும் புழுதி பறக்கும் அமைதியான கூவாகம் கிராமம் திருவிழா நடைபெறும் நாட்களில் மட்டும் மக்களால் நிரம்பிக் காணப்படும். தேர் புறப்பாடு அன்று மனித தலைகளாகவே காணப்பட்டது. விழுப்புரத்தில் தங்கும் விடுதிகள் மற்றும் சாப்பாட்டுக் கூடங்களிலும் திருநங்கைகளின் எண்ணிக்கைகளே





அதிகமாகக் காணப்பட்டது. அப்சரஸ் போன்று தங்களை அழகுபடுத்திக் கொண்டு வலம்வந்தனர். விழுப்புரத்தில் இருந்து முக்கியமான இரண்டு நாள் நிகழ்வுக்கும் சிறப்புப் பேருந்துகள் இயக்கப்பட்டன. திருவெண்ணைநல்லூர் மற்றும் பெரியசெவலை ஆகிய ஊர்களிலிருந்து ஷேர் ஆட்டோக்களும் இயக்கப்பட்டன.

இந்தக் கூத்தாண்டவர் யார்? இவருக்கும் திருநங்கைகளுக்கும் என்ன தொடர்பு? தெரிந்து கொள்ள மகாபாரதத்தைச் சிறிது புரட்டுவோமே. பாண்டவர்களுக்கும் கௌரவர்களுக்கும்





குருஷேத்திரப் போர் ஆரம்பம் ஆவதற்கு முன்பு, பாண்டவர்கள் வெற்றி பெற ஒரு சர்வ லக்ஷணமும் பொருந்திய அழகான குற்றமில்லாத வீரமிக்க ஆண்மகன் ஒருவரை காளிக்குப் பலி கொடுக்க வேண்டும். பாண்டவர் அணியில் அப்படிப்பட்ட ஆண்மகன்கள் அர்ஜுனன், கிருஷ்ணர் மற்றும் அர்ஜுனனுக்கும் வேட்டுவப் பெண் நாககன்னிகை சித்ராங்கதாவிற்கும் பிறந்த அரவான் ஆகிய மூவர் மட்டுமே அதற்குத் தகுதியானவர்கள். அர்ஜுனனும் கிருஷ்ணனும் குருஷேத்திரப் போருக்கு மிகவும் தேவைப்படுபவர்கள். ஆதலால் அரவானை பலி கொடுப்பதாக முடிவு செய்யப்பட்டது. அரவான் மூன்று நிபந்தனைகளுடன் பலிக்குச் சம்மதிப்பதாகக் கூறுகின்றான். அந்த நிபந்தனைகளில். ஒன்று ஒரு பெண்ணை மணம் புரிந்து ஒரு நாள் இரவு இன்புற்றிருக்க வேண்டும். இரண்டாவது **18** நாள் குருஷேத்திரப் போர்களின் நிகழ்வுகளையும் காணவேண்டும்.

மூன்றாவது தனக்குப் பூலோகத்தில் கோயில் எழுப்பி மக்கள் வழிபடவேண்டும். எந்தப் பெண்ணும் அடுத்த நாள் காளிக்குப் பலியாகும் ஒருவரை மணம் முடிக்க வராததால் கிருஷ்ணரே மோகினி அவதாரம் எடுத்து அரவானை மணந்து கொண்டு ஒருநாள் இல்லறத்திலும் ஈடுபடுகின்றார். மறுநாள் அரவானைக் காளிக்கு பலி கொடுக்கின்றனர். அதன் பின்பு குருஷேத்திரப் போர் நடந்த **18** நாட்களும்

அரவானின் தலையை மட்டும் வைத்து கண்கள் மூலமாகக் குருஷேத்திரப் போரை காணும்படி கிருஷ்ணர் செய்கின்றார்.

இந்த வருட சித்திரைத் திருவிழா ஏப்ரல் மாதம் 2ந்தேதி மாரியம்மனுக்குச் சாகை வார்த்தலுடன் (கூழ் வார்த்தல்) ஆரம்பம் ஆனது. சந்தனு சரிதம், பீஷ்மர் பிறப்பு, தர்மர் பிறப்பு, பாஞ்சாலி பிறப்பு, பகாசூரன் வதம், பாஞ்சாலி திருமணம், கூத்தாண்டவர் பிறப்பு, ராஜசூய யாகம், வெள்ளிக்கால் நடுதல், கிருஷ்ணர் தூது, அரவான் பலி, கம்பம் நிறுவுதல் போன்ற நிகழ்வுகள் நடந்தன. அந்த நாட்களில் உற்சவர் கூத்தாண்டவர் கோயிலைச் சுற்றி மட்டுமே வலம் வருவார்.

16ஆம் நாளன்று திருநங்கைகள் தங்களை மணப்பெண் போல அலங்கரித்துக் கொண்டு கோயில் வளாகத்திற்கு மாலையும் கழுத்துமாக வந்தனர். பின்பு தங்களையே மோகினிகளாகப் பாவித்து மானசீகமாக அரவானை மணம் புரிந்து கொள்வதாக எண்ணி பூசாரிகளின் கைகளால் தாலி கட்டிக் கொண்டனர். பெரும்பாலான கடைகளில் மஞ்சள் கயிற்றில் மஞ்சளைக்கட்டி விற்பனை செய்தனர்.





திருநங்கைகள் மட்டும் இன்றி அன்று சிறுவர்கள் மற்றும் பெரியவர்கள் வேண்டுதலுக்காகவும் தாலி கட்டிக் கொண்டனர் (கூவாகப்பகுதி மக்கள் குழந்தை வரம் வேண்டியும், நோய் தீரவும் அரவானை வணங்குகின்றனர். படையல் சாதம் சாப்பிட அவர்கள் வேண்டுதல் நிறைவேறும் என்பது நம்பிக்கை). அன்று இரவு முழுதும் திருநங்கைகள் ஆட்டமும் பாட்டமுமாக இருந்தனர்.

17ஆம் நாள் தேரோட்டம் முக்கிய நிகழ்வுகள் நடைபெறும் நாள். முந்தைய நாள் இரவே தேரின் பாகங்களை ஒன்று சேர்க்க ஏற்பாடுகள் செய்யப்பட்டது. நான்கு சக்கரங்களுடன் மேலே சதுரவடிவாக உயரமான தூண்களைக் கொண்டு வடிவமைக்கப்பட்டது. வேப்ப மரத்தின் இலைகள் வைக்கோல் கொண்டு அரவானின் உருவம் அமைக்கப்பட்டது. கைகள் பக்கவாட்டில் சுழலும் முறையில் உள்ளது. சிரசைத்தவிர மற்ற உறுப்புக்களான புஜங்களும் பதக்கமும் கீரிமேட்டில் இருந்தும், அரசிலை, விண்குடை சிவலியாங்குளம் கிராமத்தில் இருந்தும், பாதம், கைகள் நத்தம் கிராமத்தில் இருந்தும், மார்பு புஜங்கள், கயிறு கடையாணி தொட்டி கிராமத்திலிருந்தும் கொண்டுவரப்பட்டு சுமார் 30 அடி உயர அரவான் தேர் உருவாக்கப்பட்டது. (குறிப்பிடப்பட்ட ஊர்கள் கூவாகத்தைச் சுற்றி உள்ள ஊர்களே).

சிரசு மட்டும் கோயிலிலிருந்து எடுத்துக் கொள்ளப்படுகின்றது. தேரின் பாகங்கள் தெரியாத அளவிற்குப் பூக்களாலும் மாலைகளாலும் அலங்கரிக்கப்பட்டு இருந்தது. அன்று காலை சுமார் 8.30 மணி அளவில் முகத்திரை விலக்கப்பட்டு ஆரத்தி காண்பிக்கப்பட்டது. ஆரத்தி முடிந்த உடன் தேர் கோயிலைச் சுற்றி மாட வீதிகள் வழியாக வலம் வரத் தொடங்கியது. பொது மக்கள் அரவானுக்குப் பூ, மற்றும் வஸ்திரங்கள் (வேஷ்டி) போன்றவற்றை வேண்டுதலுக்காகத் தேரில் அமர்ந்து இருப்பவர்களிடம் அளிக்கின்றனர்.

தேர் கோயிலை வலம் வந்துவிட்டு 11.30 மணிக்கு ஆழிகளம் எனப்படும் பந்தலடிக்கு வருவதாகக் கூறப்பட்டது. ஆனால் மதியம் மணி இரண்டு ஆகியும் தேர் வரவில்லை. அதற்கிடையில் பந்தலடியில் திருநங்கைகள் பூசாரிகளின் கைகளால் வளையல்களை உடைத்தும், தாலியை அறுத்துக் கொண்டனர். பொட்டு பூ ஆகியவற்றை ஒரு கம்பத்தின் மீது வீசிவிட்டு குழுக்களாகச் சேர்ந்து தங்களின் மணவாழ்க்கை ஒரு நாளுடன் முடிந்துவிட்டதை எண்ணி ஒப்பாரி வைத்து அழ ஆரம்பித்தனர். சிலர் குளித்துவிட்டு வெள்ளைப் புடவை உடுத்திக்கொண்டு தன் கணவன் அரவான் காளிக்குப் பலிகொடுக்கப்பட்டதாக விதவைக்கோலம் பூண்டனர்.

தேர் பந்தலடிக்கு வந்தபின்பு பூஜைகள் நடத்தப்பட்டது. பூஜை முடிந்தபின்பு சிரசை மட்டும் தனியாக எடுத்து கூத்தாண்டவர் கோயிலுக்கும் மற்ற உறுப்புக்கள் அந்த ஊர்களுக்கும் எடுத்துச் செல்லப்பட்டன. மறுநாள் தர்மர் பட்டபிசேக நிகழ்வுடன் சித்திரை மாத கூத்தாண்டவர் கோயில் திருவிழா நிறைவுற்றது.

இந்நிகழ்வைக்காண (?) இளம் வயது ஆண்கள் / பள்ளி கல்லூரிகளில் படிக்கும் மாணவர்கள் இங்கு வருகின்றனர். இவர்கள் கூட்டம் தான் அதிகமாகக் காணப்பட்டது. அழகாக இருக்கும் திருநங்கைகளுடன் சேர்ந்து புகைப்படம் எடுத்துக் கொள்வதிலும், திருநங்கைகளைக் கேலி கிண்டல் வம்புக்கு இழுத்தல் போன்ற தகாத செயல்களையே செய்ய முற்படுகின்றனர், போலீஸ் காவலையும் மீறி. சில சமயம் வன்முறைகளும் நடப்பதும் உண்டு என்று கூறுகின்றனர்.



# ஜலகண்டீஸ்வரர் ஆலயம்
## – சிவரஞ்சனி அரவிந்த்




ஜலகண்டீஸ்வரர் ஆலயம் தமிழ்நாட்டில், வேலூர் மாவட்டத்தில் அமைந்துள்ள சிவன் கோயிலாகும்.

வேலூர் நகரின் மையப்பகுதியில் அமைந்துள்ள கோட்டையின் உள்ளே இக்கோயில் அமைந்துள்ளது. இதன் எழிலார்ந்த அமைப்பு கண்ணையும் கருத்தையும் கவர்வதாகும். இதில் கிழக்குப் பக்கத்தில் மட்டுமே நுழைவாயில் உள்ளது. தற்போது கோட்டை அகழியின் மூன்று பக்கங்களில் மட்டுமே தண்ணீர் உள்ளது.

தெற்குப் பக்கத்தில் தண்ணீர் இல்லை. கோட்டையின் உள்ளே மத்திய, மாநில அரசுகளுக்குச் சொந்தமான அலுவலகங்கள் உள்ளன. இதன் வடக்குப் பக்கத்தில் கோயில் அமைந்துள்ளது. இக்கோட்டை 136 ஏக்கர் நிலப்பரப்பில் கட்டப்பட்டுள்ளது. நாயக்கர் காலத்தில் எழுப்பப்பட்ட இதன் ஒரு பாணி விஜயநகரக் கட்டிடப்பாணியின் இறுதி நிலையைக் கொண்டுள்ளது. தெற்கு நோக்கி ஏழு நிலைகளைக் கொண்ட ராஜகோபுரம் அமைந்துள்ளது.

அந்தக் கோபுரம் பிரம்மாண்டமாகவும் பிரமாதமாகவும் அமைந்துள்ளது. அதன் கம்பீரத்தை ரசித்துக்கொண்டே உள்ளே நுழைந்தால் வலது புறத்தில் குளமும், இடதுபுறத்தில் கல்யாண மண்டபமும் உள்ளது. கல்யாண மண்டபத் தூண்கள் மற்றும் கோயிலின் மற்ற தூண்களில் கண்ணைக் கவரும் ஆன்மீக சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. கோயிலின் வெளிப்பிரகாரத்திலும் உள்பிரகாரத்திலும் கோயில் சுவர்களை ஒட்டி ஆறு அடி அகலத்திற்கு அழகிய வேலைப்பாடுகள் கொண்ட தூணைக்கொண்டு கட்டப்பட்ட மண்டபம் முழு நீளத்திற்கும் அமைந்துள்ளது. கோயிலின் வடமேற்கில் வசந்த மண்டபத்தையும் அதை ஒட்டி கிணற்றையும் வடகிழக்கில் வெளிப்பிரகார யாகசாலையும் அடுத்துத் தென்கிழக்கில் உத்சவ மண்டபத்தையும் வெளிப்பிரகார மடப்பள்ளியையும் காணலாம். உள்ளே நுழையும் போது வலம்புரி விநாயகர் அமர்ந்திருப்பதைக் காணலாம்.

வலம்புரி விநாயகரைத் தரிசித்து மேலே சென்றால் கோயிலின் நிர்வாக அலுவலகம் உள்ளது. இதனைத் தொடர்ந்து உட்பிரகார மடப்பள்ளி உள்ளது. அடுத்து 63 நாயன்மார்கள், பிள்ளையார், சப்தகன்னியர், வீரபத்திரர் ஆகியோர் உள்ளனர். இரண்டு பிரகாரங்களை வலம் வந்து மூன்றாம் பிரகாரமான மகாதேவர் சன்னதிக்கு நுழையும் போது நடராஜர் சன்னதி உள்ளது. நடராஜர் சன்னதியிலிருந்து விரிஞ்சிபுரம் அருள்மிகு வழித்துணைநாதர் மார்க்கபந்தீஸ்வரர் கோயில் வளாகம் அருள்தரும் மரகதவல்லி அம்மையார் சன்னதிக்கும் இடையே



சுரங்கப்பாதை உள்ளதாகச் செவிவழிச் செய்தி ஒன்று உள்ளது.

சோமாஸ்கந்தர், வள்ளி தேவசேனா உற்சவமூர்த்திகளைக் கண்டு தரிசித்து மேலும் சென்றால், மிகக் கம்பீரமாகவும் நெடிதுயர்ந்தும் துவாரபாலகர்கள் நின்ற திருக்கோலத்தைக் காணலாம். இவர்களைக் கடந்தால் ஜலகண்டேஸ்வரர் லிங்கத் திருமேனியாக இருப்பதைக் காணலாம். கோயிலின் கிணற்றின் அருகே கங்கா பாலாறு ஈஸ்வரனும், அதன் அருகே கால பைரவரும், நவக்கிரகச் சன்னிதியும், சனீஸ்வரரும், நந்திதேவரும் உள்ளனர். அடுத்து கொடி மண்டபமும் உள்ளது. தொடர்ந்து விநாயகர், வெங்கடேசப்பெருமாள், வள்ளி தேவசேனாவுடன் சுப்பிரமணியர், மாதேஸ்வரி, வைஷ்ணவி, துர்க்கை, லட்சுமி, சரஸ்வதி, கால பைரவர், சனீஸ்வரர், 63 நாயன்மார்கள், நடராஜர், சிவகாமி, அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், பிரம்மா, விஷ்ணு, ஸ்ரீதேவி, பூதேவி, கோஷ்டத்தில் விநாயகர், தட்சிணாமூர்த்தி, மகாவிஷ்ணு, லிங்கோத்பவர் ஆகியோர் உள்ளனர்.

மூலவர் சன்னதியின் முன்பாகக் கொடி மரம் மற்றும் பலிபீடம் ஆகியவை காணப்படுகின்றன. அருகில் நந்திதேவர் உள்ளார். இங்குள்ள மூலவர் ஸ்வரகண்டேஸ்வரர் என்றும், ஜலகண்டேஸ்வரர் என்றும் அழைக்கப்படுகின்றார். இங்குள்ள இறைவி அகிலாண்டேஸ்வரி என்றழைக்கப்படுகிறார். அம்மன் சன்னதி சுவர்களில், விநாயகர், மாதேஸ்வரி, வைஷ்ணவி, பிராஹி, லட்சுமி, சரஸ்வதி ஆகிய தெய்வ விக்ரகங்கள் எழிலோடு பதிக்கப்பட்டுள்ளன. அம்பாள் சன்னதியின் இருபுறமும் கம்பீரமாகத் துவாரபாலகியர் உள்ளனர்







# படவேடு
## – அரவிந்த் கோவிந்தராஜு




தமிழ்நாட்டில் தொண்டை மண்டலத்தில் சக்தி தலங்கள் பல உள்ளன. அவற்றில் திருவண்ணாமலை மாவட்டம், போளூர் வட்டம், அம்மன் கோயில் படைவீட்டில் அமைந்துள்ள அருள்மிகு ரேணுகாம்பாள் அம்மன் திருக்கோயில் அறுபத்து நான்கு சக்தி தலங்களில் தனிச்சிறப்பு வாய்ந்த சக்தி தலமாகப் பகரப்படுகிறது.

இச்சன்னதியில், இவ்வூரின் அருகே ஜமதக்கனி முனிவர் யாகம் செய்த இடத்திலிருந்து பிரதி வருடமும், ஆனி திருமஞ்சனத்தன்று வெட்டி எடுத்து வரப்படும் திருநீறுதான் வழங்கப்படுகிறது. இதனை அணிய பிணிகள் அகலும். இத்திருக்கோயில் அமைந்துள்ள படை வீடு எனும் இக்கிராமம் கிழக்குத் தொடர்ச்சி மலைகளின் (ஜவ்வாது மலைத் தொடர்) அடிவாரத்தில் சுற்றிலும் மலைகளும் பசுமையான வனங்களும் அரனாக அமைந்து மலைகளின் நடுவில் அமைந்து அழகு சேர்க்கின்றன.

சம்புவராய அரசர்கள் காலத்தில் படைவீட்டினை தலைநகரமாகக் கொண்டு ஆட்சிப் புரிந்துள்ளனர். இவர்களது காலத்திலிருந்து அருள்மிகு யோக ராமச்சந்திர சாமி, வரதராஜ பெருமாள், லட்சுமி நரசிம்மசாமி, கோட்டைமலை வேணுகோபால சுவாமி ஆகிய திருக்கோயில்கள் நிர்மாணிக்கப்பட்டும், சிறிய கோட்டை, பெரிய கோட்டை என இரு கோட்டைகளும் அகழிகளும் கட்டப்பட்டுள்ளன. பிற்காலத்தில் கோட்டைகளும் அகழிகளும் சில கோயில்களும் அழிந்துவிட்டன. கலைகள் மற்றும் மதத்தின் பேரில் சம்புவராய மன்னர்கள் கொண்டிருந்த பற்றினைப் படைவீட்டில் உள்ள தொல்பொருளியல் சிதைவுகள் பறைசாற்றுகின்றன.

தொண்டை மண்டலத்து சக்தி தலங்களில் இத்தலம் முக்கியமான ஒன்றாகும். அம்மன் சுயம்புவாய் எழுந்தருளியுள்ளதுடன், பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மும்மூர்த்திகளையும் உடன்கொண்டு பேருருக்கொண்டு உலகில் சக்தியே எல்லாமென எடுத்துக்காட்டி அருள்புரிந்து வருகிறாள். ஞானியர் பலர் தவமிருந்து சித்திகள் பல பெற்றதும் இத்திருத்தலத்தில்தான்.

இங்கு ஆதிசங்கரரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட பாணலிங்கமும், ஜனாகர்ஷண சக்கரமும் அமைந்துள்ளது சிறப்பாகும். ஒருகாலத்தில் 108 சிவாலயங்களும், 108 விஷ்ணு ஆலயங்களும் இவ்வூரில் இருந்ததாகக் கூறப்படுகிறது. இவ்வூர், அரசர்கள் காலத்தில் பட்டிணமாக இருந்ததாகவும், இவற்றுள் அருள்மிகு ரேணுகாம்பாள் அம்மன் திருக்கோயில் மற்றும் அருள்மிகு யோகராமச்சந்திர சுவாமி திருக்கோயில் தவிர இதர திருக்கோயில்கள் அனைத்தும் இயற்கை சீற்றத்தால் அழிந்துவிட்டதாகக் கூறப்படுகிறது.

இத்திருக்கோயில் உட்பகுதியில் ஒரு திருச்சுற்றும், வெளிப்புறம் ஒரு திருச்சுற்றும் நான்கு மாடவீதியுடன் அமைந்துள்ளது. அருள்மிகு விநாயகர்,




அருள்மிகு ஆறுமுகர் தனித்தனி சன்னதிகளில் காட்சி அளிக்கின்றனர். கொடிமரம் நந்தியை கடந்து உள்ளே சென்றால் பரசுராமன் தாயை நோக்கி இருகரம் கூப்பி வணங்கும் நிலையில் வீற்றுள்ளார்.

இத்திருக்கோயிலின் கருவறையில் வேறெங்குமில்லாத வகையில் சிறப்பம்சமாக அன்னை ரேணுகாதேவி (சிரசு மட்டும்) சுயம்பு உருவமாகவும், பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மும்மூர்த்திகள் அரூபங்களுடன் எழுந்தருளியுள்ளார்கள். மேலும் ஆதிசங்கரர் பிரதிஷ்டை செய்த பாணலிங்கமும், சிலா சிரசும், அத்திமரத்திலான அம்மன் முழுத் திருவுருவமும் கருவறையில் அமையப் பெற்றுள்ளது. மும்மூர்த்திகளுடன் எழுந்தருளியுள்ள அன்னை ரேணுகாதேவியை வழிபட மும்மூர்த்திகளையும் வழிப்பட்ட பலன் உண்டு.

படை+வீடு = படைவீடு படைகள் தங்கி இருந்த இடம். அன்னை ரேணுகாதேவி இத்தலத்தில் படையுடன் வந்து அருள்பாலித்ததால் படைவீடு எனவும், இராச கம்பீர சம்புவராயர் எனும் அரசன் தனது படைகளுடன் இத்தலத்தில் தங்கி போரிட்டதால் படைவீடு எனவும் பெயர் பெற்று நாளடைவில் படவேடு எனப் பெயர் மருவி வந்துள்ளது.

அருள்மிகு ரேணுகாதேவி இரைவத மகாராஜனின் மகளாய் பிறந்து ஜமதக்கனி முனிவரை மணம் முடித்துப் பரசுராமன் உள்ளிட்ட நன்மக்களைப் பெற்றெடுத்தாள். ரேணுகாதேவி தன் கணவருக்குப் பணிவிடை செய்துவரும் நாளில் கணவர், பூஜைக்கு நீர் முகந்திட கமண்டல நதிக்கு சென்றாள். அவ்வமயம் வானவீதியில் சென்ற கந்தர்வன் சாயையை நீரிலே கண்டு அவனழகையும் இளமையையும் எண்ணி ஆச்சரியப்பட, நீரில் மண்குடம் உடைந்து, அத்தண்ணீரால் உடம்பு முழுவதும் நனைந்ததை முனிவர் ஞானக்கண்ணால் கண்டு கோபங்கொண்டு, தன் மகன் பரசுராமனை அழைத்து அன்னையின் சிரசை துண்டிக்க ஆணையிட, அதன்படி மகன் அன்னையைச் சிரச்சேதம் செய்கிறார். பின் தந்தையிடம் வந்து, தங்கள் கட்டளையை நிறைவேற்றி விட்டேன் என்றும், தாங்கள் கோபத்தை அடக்கி தயை செய்ய வேண்டும் என்றும், பெற்ற தாயை கொன்ற என் கையையும் வெட்டிவிட்டேன் என்று கூறிய மகனிடம், வேண்டிய வரம் தருவதாகக் கூறினார். பரசுராமனோ பெற்ற தாயை மீண்டும் உயிர்ப்பித்துத் தர கோருகிறார். அவரும் மகன் விருப்பத்திற்கிணங்கி கமண்டல நீரை மந்திரித்துக் கொடுக்க, அவர் அதைப் பெற்றுக்கொண்டு தன் தாய் வெட்டுப்பட்ட இடத்தில் சென்று காலகதியால் அங்கே வெட்டுப்பட்டுக் கிடக்கின்ற சண்டாளச்சி உடலில் தவறுதலாக ரேணுகாதேவியின் தலையை ஒட்டும்படி வைத்து நீரை தெளித்தவுடன் அன்னை சண்டாளப்பெண்ணின் உடம்போடு பிழைத்து நின்று புதல்வனைப் பார்த்து தனக்கு நேர்ந்த வேறுபாட்டைச் சொன்னார்.

பின் தன் தந்தையின் முன் சென்று நடந்தவற்றை விவரிக்கிறார். இது தெய்வச்செயலால் வந்தது. இனி இதை மாற்ற முடியாது எனக் கூறியதனால் அது முதல் அவ்வேறுபட்டவுடலுடன் ஜமதக்கனி முனிவருக்கு அன்னை பணிவிடை செய்துவரும் நாளில் அங்கு வந்த கார்த்தவீரிய அர்ச்சுணன் ஜமதக்கனி முனிவரிடமிருந்த காமதேனுவை தனக்கு வழங்க வேண்டுகிறான். முனிவர் மறுத்ததால் அவரைக் கொன்று, காமதேனுவை கார்த்தவீரிய அர்ச்சுணன் அழைத்துச் சென்றுவிடுகிறான். கணவர் இறந்ததால் ரேணுகாதேவி கணவர் உடலுடன் உடன்கட்டை ஏறினாள். அவ்வமயம்




தெய்வ வசத்தால் மழை பொழிந்தது. அம்மழை நீரால் உடலை நெருப்பு அணைந்து அன்னை கொப்புளங்களுடன் ஆடை இன்றி எழுந்து வேப்பிலை ஆடையைக்கட்டிக்கொண்டு மகன் பரசுராமனை சிந்தித்தாள். உடனே பரசுராமர் வந்து மிக்கக் கோபத்துடன் சென்று கார்த்தவீரியனை கொன்று சினத்துடன் திரும்ப, க்ஷத்திரிய குலம் முழுவதும் அழிக்கச் சாபமிடுகிறார்.

இதனைக் கண்ட சிவபெருமான், பிரம்மா, விஷ்ணுவுடனும் தேவர்களோடும் அவ்விடம் தோன்றி கோபத்தை விட்டுவிடும்படியும், இக்காரியம் விதிப்பயனாலானது என்றும், யாராலும் தடுக்கமுடியாது என்றும் கூறி சாந்தப்படுத்துகிறார்கள்.

பின்னர் ஜமதக்கனி முனிவரை சிவபெருமான் உயிர்ப்பித்தெழ செய்கிறார். அன்னை ரேணுகாதேவி சிவபெருமானிடம் வேண்டியபடி சிரசு மட்டும் பிரதானமாகக் கொண்டு இப்பூவுலகில் பூஜைக் கருஉருவாய் விளங்கவும், உடலின் மற்ற பிரிவு முனிவருடன் சுவர்க்கத்துக்குச் செல்லவும் சிவபெருமான் அருள் வழங்கினார். அவ்வாறே அன்னை ரேணுகாதேவி பூவுலகில் சிரசை பிரதானமாகக் கொண்டு படை வீட்டில் அருள்பாலிக்கிறாள்.

இவ்வூர் வேலூர் - திருவண்ணாமலை நெடுஞ்சாலையில் வேலூரிலிருந்து 32வது கி.மீட்டரிலும் சந்தவாசல் எனும் ஊரிலிருந்து 7வது கி.மீட்டரிலும் உள்ளது.



# பகவதி மலை, வேலூர் – நரசிம்மன், வேலூர்



முற்காலத்தில் பாண்டவர்கள் வனவாசம் வந்த போது. இந்தப் பகுதியில் எங்கும் வறட்சி ஏற்பட்டு. குடிக்க நீரின்றித் தவித்த போது, கல்கி பகவதி அம்மன், தன் இரு குமாரர்களுடன் குறத்தி வடிவில் வந்து, இங்குள்ள தீர்த்தத்தைப் பாண்டவர்களுக்கு அருளி மறைந்ததாகவும், பாண்டவர்கள் அம்மன் தீர்த்தம் பருகி, தாகம் தீர்த்ததாகவும், ஒரு வரலாறு கூறுகிறது.

வேலூர் நகரம் பல வரலாற்றுச் சிறப்புகளைக் கொண்டுள்ளது. குறிப்பாக வேலூர் கோட்டை, கட்டிடக் கலைகளுக்கும், இந்திய சுதந்திர வரலாற்றுக்கும் பெயர் பெற்ற ஊராகும். இவற்றுக்கு அடுத்ததாக வரலாற்று சிறப்புமிக்க ஓம் கல்கி பகவதி அம்மன் ஆலயம், வேலூர் மலைக்கோவிலில் அமைந்துள்ளது. இந்தக் கோவில் 1000 ஆண்டுகளுக்கு மேல் பழமையானது என்பதை இங்குள்ள கல்வெட்டு செய்தி மூலம் நமக்குத் தெரிய வருகிறது.

இக்கல்வெட்டு இராட்டிரகூட மன்னன் (மூன்றாம் கிருஷ்ணன்) கன்னரதேவன் இவனது 26-வது ஆட்சியாண்டில் (கி.பி.965) பொறிக்கப்பட்டதாகும். படுவூர்க் கோட்டத்தைச் சேர்ந்த பங்கள நாட்டின், வட பகுதியில் உள்ள வேலூர் பாடி எனும் இந்த ஊரை, இந்த மலை மீதுள்ள ஈஸ்வரன் கோயிலுக்குத் தானமாகச் சந்திரன், சூரியன் உள்ளவரைக் கொடுத்தான் நுளம்பன் திரிபுவன வீரனாகியவன். அந்நாளில் வேலூர்பாடி என்பதே மருவி வேலப்பாடி என்றானது. இந்த மலைக்குக் கீழ் உள்ள பகுதி வேலப்பாடி ஆகும்.

விஜயநகர அரசர்கள் காலத்தில் வேலூர்பாடி என்பதைச் சுருக்கி வேலூர் என்றும் அழைக்கலாயினர். பின்னாளில் ராயர்கள் என்ற பரம்பரை ஆட்சி செய்ததால் ராயவேலூர் என்றும் அழைத்து வந்தனர். வேலூர் நகரின் பழமைக்கு இந்தக் கல்வெட்டு சான்றே முதன்மையாக உள்ளது. இந்த மலையைக் காலந்தொட்டே பகவதி மலை என்று அழைத்து வருகின்றனர். இந்தப் பழமையான கோயிலில் 2001-ம் ஆண்டு முதல் ஓம் கல்கி பகவதி அம்மன் பிரதிஷ்டை செய்துள்ளார்கள்.

இங்கு ஓம் கல்கி பகவதி அம்மன் லிங்க உருவத்தின் மத்தியில் அமர்ந்து காட்சி தருகிறாள்.

வலப்புறம் ஸ்ரீவிநாயகரும், இடப்புறம் ஸ்ரீமுருகரும் நின்ற நிலையில் காட்சி தருகின்றனர். இவர்களுக்கு முன்பாக ஸ்ரீமுகலிங்கம் அமைப்பில் முகம் உள்ள சிவனாகக் காட்சி தருகிறார் ஈஸ்வரர்.




இந்த அமைப்பு தென்னிந்தியாவில் வேறு எங்கும் இல்லாத வடிவம் ஆகும். பகவதி அம்மனின் கடைசி அவதாரமாக ஓம் கல்கி பகவதி அம்மன் என குறிப்பிடப்படுகிறது.

இந்த மலையில் அழகிய பாறைக்குள் இயற்கையாக உருவாகி உள்ளன. மலைமீது மக்கள் தாகம் தீர்க்கும் அம்மன் தீர்த்தம் வற்றாத சுனை உள்ளது. மன்னர்கள் வணங்கி வழிபட்ட அம்மன் பாதம் (சமணர் பாதம் எனும் சந்தேகம் இருக்கிறது), பாறை விநாயகர், ராஜநந்தி இவற்றை மக்கள் வணங்கி அருள்பெறுகின்றனர். இயற்கையில் மலையே அழகாக அமைந்துள்ளது. அங்கிருந்து பார்த்தால் வேலூர் அழகாகத் தெரியும். மலையேறி செல்ல பழங்காலப் படிக்கட்டுகள் உள்ளன. ஞாயிற்றுக்கிழமை தோறும் சிறப்புப் பூஜை நடைபெறுகிறது.

இங்குள்ள தீர்த்தம் இன்றும் இங்கு வரும்











பக்தர்களின் தாகத்தைத் தீர்க்கிறது. இந்த கோயிலில் குடும்பத்துடன் இறைவன் காட்சி அளிப்பதால் இங்குவரும் பக்தர்களும் குடும்பத்துடன் வந்து வணங்கி அம்மன் அருள் பெறுகின்றனர். இங்குத் தலமரம் கிடையாது. அதற்குப் பதிலாகப் பச்சைக் கொடி எனப்படும் (ஓணான் கொடி) மக்கள் தன் உடலில் சுற்றிவந்து வணங்குகின்றனர். இந்த அம்மனை வணங்கினால் தீராத நோய்கள் தீரும். குடும்பம் செழிக்கும். செல்வம் பெருகும். இங்குள்ள நந்தி அதிக நகைகளை அணிந்துள்ளதால் இந்த கோயிலில் நகைகளை வைத்து வணங்கி எடுத்துச் சென்றால் வீட்டில் அதிகளவில் நகைகள் சேரும் என்பது ஐதீகம். திருமணத்திற்கு வாங்கும் புதிய தாலியும், நகைகளும், ஆடைகளும் இங்கு வைத்து பூஜை செய்து பிறகு வீட்டிற்கு எடுத்துச் செல்கின்றனர்.

அண்ணன் திருமாலின் கடைசி அவதாரமான கல்கி அவதார சக்தியும், கணவர் ஈசனின் சக்தியும் சேர்ந்து ஓம் கல்கி பகவதி அம்மனாக உருவாகியுள்ளதாக எண்ணி மக்கள் இக்கோயிலுக்கு வந்து வழிபடுகின்றனர். வேலூர் நகரம் இந்த மலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளது.



# திப்பு சுல்தான் பிறக்க வழிபட்டத் தலம்
## – சிவசங்கர் சுந்தரம்



அரச பரம்பரையைச் சாராத சாதாரண போர் வீரர் பரம்பரையைச் சேர்ந்த ஹைதர் அலி, மாவிரனாகவும், மாமன்னனாகவும் வாழ்ந்த வரலாறு உடையவர். மைசூர் படையில் பணியாற்றி வந்த ஹைதர் அலி தன் 19ம் வயதில் (கி.பி.1731) ஷாபாஸ் பேகம் என்பவரை மணந்தார். அடுத்த ஆண்டே இந்த தம்பதியருக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. ஆனால் குழந்தை பிறந்த பின் பாக்கவாதத்தால் தாக்கப்பட்டு உடல் நலிவுற்றர் ஷாபாஸ் பேகம். அதனால் தன் கணவருக்கு மறுமணம் செய்து வைக்க முடிவெடுத்து அவரை வற்புறுத்தி, கடப்பா கோட்டை தலைவர் மீர் முயின் உத்தின் மகளான ஃபாத்திமா என்கின்ற பக்குனிஸ்சாவை மறுமணம் செய்வித்தார்.

அடுத்து ஹைதர் அலிக்கு ஆண் வாரிசு பிறக்க வேண்டும் என்று எதிர்பார்த்த தம்பதியருக்கு ஆண்டுகள் பல கழிந்தும் குழந்தை பேறு அமையவில்லை இந்த கவலையில் ஐந்து ஆண்டுகள் கழிந்தன. இனி இறைவனின் அருள் தவிர வேறு வழி இல்லை என்ற முடிவுக்கு வந்தனர் தம்பதியர்.

ஆற்காட்டில் அமைய பெற்ற திப்பு மஸ்தான் அவுலியா என்ற இஸ்லாமிய துறவியின் நினைவிடம் உள்ள தர்காவில் சிறிது காலம் தங்கி மனமுருகப் பிராத்தனை செய்தனர் இருவரும். ஆண்டவன் அருளால் பக்குனிஸ்சா கருவுற்றார்.

பின்னர் 20-11-1750 அன்று இப்போதைய பெங்களூரு விமான நிலையம் உள்ள தேவனஹள்ளி என்ற இடத்தில் ஆண் குழந்தை ஈன்றெடுத்தார். குழந்தை பிறந்த செய்தி வந்தபோது ஹைதர் அலி ஹைதராபாத் நிஜாம் நாசர் ஜங்க்கு ஆதரவாக போரில் ஈடுபட்டிருந்தார். போர்களத்திலேயே தன் முதல் ஆண் குழந்தைக்கு, ஆற்காடு துறவியின் நினைவை போற்றும் வகையில் திப்பு சுல்தான் என்ற பெயரை தீர்மானம் செய்து அறிவிப்பை வெளியிட்டார் ஹைதர்.

ஆற்காடு துறவி திப்பு அருளால் பிறந்ததாக நம்பப்படும் குழந்தையே திப்பு சுல்தான் என்பது பலர் அறிய தகவல். கதை போல் இந்த சம்பவம் தோன்றினாலும், இந்த செய்தி பல புத்தகத்தில் ஆவணப்படுத்தபட்டுள்ளது. இன்றும் ஆற்காடு கலவை செல்லும் சாலையில் திவான் பஜார் என்ற இடத்தில் அமைந்துள்ளது திப்பு அவுலியா தர்கா இதையெல்லாம் கூற தான் யாரும் இல்லை. மேலே கூறப்பட்ட சம்பவம் தகவல் பலகை இந்த துறவியின் நினைவிடத்தில் அமைய பெற்றால் இந்த தலம் இன்னமும் புகழ்பெற கூடும்

# ஆதி திருவரங்கம்
## – சுரேஷ் பூங்குன்றன்






ஆதிதிருவரங்கம் ரங்கநாதசுவாமி கோயில் அல்லது ரங்கநாத பெருமாள் கோயில் சங்கராபுரம் வட்டத்தில் அமைந்துள்ள கோவிலாகும். இது திருக்கோவிலூர் மற்றும் திருவண்ணாமலை ஆகிய ஊர்களுக்கு அருகில் உள்ள ஒரு கோவிலாகும். இக்கோயிலானது திராவிடக் கட்டிடக்கலை கொண்டு இடைக்காலச் சோழர்களால் கட்டப்பட்டதாக நம்பப்படுகிறது, பின்னர், விஜயநகர அரசர்கள் காலத்தில் விரிவாக்கப்பட்டுள்ளது. இக்கோயில் வளாகம் 5 ஏக்கர் பரப்பளவில் உள்ளது. மேலும் இங்கு ஒரு வரலாற்றுக் காலத் தானிய சேமிப்புக் களஞ்சியம் உள்ளது.

இந்த ரங்கநாத பெருமாள் மகாபலிச் சக்கரவர்த்தி மற்றும் ஆழ்வார்களுக்கு முற்பட்டவராக நம்பப்படுகிறது. இக்கோவில், தமிழ்நாடு இந்து சமய அறநிலையத்துறையால் பராமரிக்கப்பட்டு நிர்வகிக்கப்படுகிறது.

இந்து புராணப்படி, சோமுகன் என்ற அரக்கன், தேவர்களிடமிருந்து வேதங்களைத் திருடிச் சென்றுவிட்டார். இதனால் கவலைப்பட்ட முனிவர்கள், விஷ்ணுவிடம் முறையிட்டனர். இதையடுத்து, விஷ்ணு இந்த இடத்தில், ரங்கநாதராக நீரில் இருந்து தோன்றி வேதத்தை மீட்டார். மேலும் அவர் பிரம்மாவுக்கு இந்த இடத்தில் அருள்புரிந்ததாக நம்பப்படுகிறது. வேறு ஒரு கதைப்படி, இந்த இடத்தில் சூரகீர்த்தி என்ற குழந்தையில்லாத ஒரு மன்னன், குழந்தை வரத்திற்காக விஷ்ணுவை வேண்டி குழந்தைப் பேறு பெற்றார். இந்தக் கோவிலில் சந்திரன் தனக்கு ஏற்பட்ட

சாபம் நீங்குவதற்காகப் புஷ்கரணி என்ற குளத்தை ஏற்படுத்தினான்.

இக்கோயிலின் இராஜகோபுரமானது உயரம் குறைந்த மொட்டை கோபுரமாக உள்ளது. மேலும் கோயிலானது உயரமான கருங்கல் சுவர்களால் சூழப்பட்டுள்ளது. இக்கோவில் 2 ஏக்கர் பரப்பளவில், இரண்டு திருச்சுற்றுகளுடன் உள்ளது. கருவறையில் உள்ள ரங்கநாதபெருமாள் திருவுருவம் சயனகோலத்தில் 29 அடி நீளத்தில் கிரானைட் கல்லால் உருவாக்கப்பட்டுள்ளது. தலைப்பகுதியில் ஆதிசேஷன் தன் ஐந்து தலைகளுடன் குடையாக உள்ளார். கால் பகுதியில் ஸ்ரீதேவியும், பூதேவியும் அமர்ந்துள்ளனர் மற்றும் கருடன் வணங்கிய கோலத்தில் உள்ளார். கருவறை முன்பு ஆழ்வார் மண்டபம் உள்ளது. தாயார் ரங்கநாயகிக்குத் தனியாக ஒரு கருவறை அமைக்கப்பட்டுள்ளது.







கோயிலின் தென் கிழக்கு மூலையில் செங்கல்லால் கட்டப்பட்ட வரலாற்றுகாலத் தானிய சேமிப்புக் களஞ்சியம் உள்ளது. இந்தக் களஞ்சியமானது திருவரங்கம், திருவானைக்காவல் ஜம்புகேஸ்வரர் கோவில் மற்றும் பாபநாசம் பாலைவனநாதர் கோவில்களில் உள்ளது போல உள்ளது. இந்தத் தானிய களஞ்சியம் கோயிலுக்கு விவசாயிகள் அளிக்கும் தானியங்களைச் சேமித்து வைக்கக் கட்டப்பட்டிருக்கிறது. கருவறையைச் சுற்றி கோதண்டராமன், அனுமான் மற்றும் கிருஷ்ணர் கோவில்கள் உள்ளன.



# பழமையும் சுவையும் நிறைந்த ஆற்காடு

## – A.T மோகன்




"ஆர்" என்கிற மரங்கள் அதிகம் காணப்பட்டதால் ஆர்க்காடு எனவும், பாலாறும் பொன்னையாறும் சங்கமிக்கும் இடத்தில் ஆறு விதமான மரங்கள் இருந்ததால் ஆற்க்காடு எனவும், அத்தி மரங்கள் அதிகமாக காணப்பட்டதால் ஆற்க்காடு எனவும், ஆறும் காடும் சங்கமிக்கும் இடம் என்பதால் ஆற்க்காடு எனவும், ஆறு விதமான காடுகள் ஒருங்கே இருந்ததால் ஆற்காடு எனவும் வழங்கப்பட்டு வந்ததாக வரலாறு சொல்கிறது.

கி.பி.1000மாவது ஆண்டுகளில் இராஜேந்திரசோழன் ஆட்சிக்காலத்தில் இவ்விடம் திருவழுந்தூர் என அழைக்கப்பட்டது. பின்னர் நவாப்கள் ஆர்க்காட்டை முகமதுபூர் என்று அழைத்தனர்...

ஆற்காடு டெல்லி கேட் நுழைவாயிலின் வரலாறு...

கி.பி.1751ல் ஆங்கிலேயர் இந்தியாவில் முதன்முதலாகத் தடம் பதித்த வெற்றியின் சின்னமாக இராபர்ட்கிளைவ் அவர்களால் ஆர்க்காடு டெல்லி வாயில் கட்டப்பட்டது.

சென்னையில் இருந்து பாலாறு வழியாக ஆற்க்காட்டை நோக்கி வரும் வியாபாரிகள், செல்வந்தர்கள் என அனைவரும் டெல்லி கேட்டில் கப்பம் கட்டி விட்டுதான் ஆற்க்காடு நகருக்குள் நுழைய வேண்டும்.

இராஜுசாஹிப் என்ற அரசன் தலைமையில், பிரஞ்சு வீரர்கள் சுமார் 300 பேர் மற்றும் உள்ளூர் வீரர்கள் சுமார் 11,000 வீரர்களும் சேர்ந்து இராபர்ட்கிளைவ் தலைமையிலான ஆங்கிலேய படைகளைக் கடுமையான எதிர்த்து போர் புரிந்த இடம்.

1751ஆம் ஆண்டுச் செப்டம்பர் மாதம் ஆரம்பித்த உக்கிரமான போர், சுமார் 53 நாட்கள் தொடர்ந்து முற்றுகையிட்டு, நீடித்துப் பின் அக்டோபரில் இராபர்ட் கிளைவ் தலைமையிலான ஆங்கிலேய படை வென்றது. பிரெஞ்சு படை தோற்றது. அதனால் இந்தப் பகுதி முழுவதும் கோட்டை சிதிலங்கள் காணப்படுகிறது. பாலாற்றங்கரை ஓரமாக ASI பாதுகாப்பில் உள்ளது.

பிரெஞ்சு கூட்டுப் படைகளிடம் கத்தி, வேல் கம்பு, வில் போன்றவை இருந்தன. ஆனால் இராபர்ட் கிளைவ் படைகளிடமோ பீரங்கிகள், துப்பாக்கிகள், வெடி மருந்து போன்றவை இருந்தன.

சுமார் 10,000 வீரர்கள் போரில் பலியானதாகச் சொல்லப்படுகிறது. பல போர்களைச் சந்தித்த ஆற்க்காடு "போர் நகரம்" என்று கூட சொல்லலாம் .

இராபர்ட் கிளைவின் போர் வியூகங்கள், போர்



யுக்திகள், போர் தந்திரங்கள் யாவும் பிரெஞ்சு கூட்டுப் படையினரை நிலைக்குலையச் செய்தது. பிரெஞ்சு உடனான முதல் போரில் வெற்றி பெற்றதன் நினைவாகவும், ஆற்க்காடு நவாப்பின் ஆலம்பானா கோட்டையினைக் கைப்பற்றப்பட்டதன் நினைவாகவும், இந்தியாவை அடிமைப்படுத்த டெல்லி நகரை ஆங்கிலேயர் கைப்பற்ற, அச்சாரமாய் அமைந்த ஆற்காடு போர் வெற்றி பெற்றதன் நினைவாகவும், டெல்லி நுழைவாயில் டெல்லிகேட் கட்டப்பட்டது... இந்திய திருநாட்டில் ஆங்கிலேய ஆட்சி அமைவதற்கு முதன் முதலில் வித்திட்ட இடம் தமிழகத்தின் வேலூர் மாவட்ட நிலப்பகுதியான ஆற்க்காடு தான் என்பது குறிப்பிடத்தக்கது.

இந்தியாவில் ஆங்கிலேயர்கள் மிகவும் நன்றியுடன் நினைவு கூறும் ஊர் ஆற்க்காடு தான்... டெல்லி வாயிலை ஒட்டி சுற்றி உள்ள சுவர்கள் இடிந்து கிடப்பதற்குக் காரணம் 1800களின் பிற்பகுதியில் திப்பு சுல்தானின் தாக்குதலால் அப்படி ஆனது என்பது வரலாறு தரும் தகவல்...

டெல்லிகேட் கோட்டை வளாகத்தினுள் பூமிக்கு அடியில் சுரங்கம் குகை இருந்தது. அது இங்கிருந்து வேலூர் வரையிலும் டெல்லி வரையிலும் செல்லும் எனச் சொல்வார்கள்..

ஆற்காடு ஸ்டார் பிரியாணி

வேலூர் மாவட்டம் என்றாலே வரலாறு, கோட்டை கொத்தளங்கள், மிகச் சுவையான பிரியாணி எனப் பெயர் பெற்றது. ஆனால் ஆற்காடு என்றாலே நாவை சப்பு கொட்ட வைக்கும் பிரியாணிக்கும் மக்கன் பேடா எனும் இனிப்புப் பிரசித்தம். மக்கன் பேடாவுக்குப் புகழ் பெற்றது.

ஆற்காடு ஸ்டார் பிரியாணி தான் மிகப் பிரசித்தமான பிரியாணி கடை. நெடுஞ்சாலையிலிருந்து ஆற்காடு பைபாஸ் வழியாக ஆற்காடு பேருந்து நிறுத்தத்திற்குப் போகும் வழியில் பழைய ஜோதி திரையரங்கிற்கு எதிரில் (தற்போது அந்தத் திரையரங்கம் இல்லை இடித்து விட்டார்கள்) ஆற்காடு ஸ்டார் பிரியாணி கடை இருக்கிறது.

காலை சுமார் 11 மணிக்கு ஆரம்பித்து மதியத்துக்குள் அண்டா காலியாகிவிடும். இங்கே குறிப்பிட்ட அளவுக்குத் தான் பிரியாணி செய்வார்கள். அது முடிந்தவுடன் மீண்டும் அடுத்த நாள் தான் பிரியாணி செய்வார்கள். கூட்டம் அதிகமாக இருக்கிறது என்று திரும்பவும் செய்ய மாட்டார்கள். தினசரி மட்டன் பிரியாணி மட்டுமே. ஞாயிறு மட்டும் சிக்கன் பிரியாணியும் சேர்த்துச் செய்வார்கள்.

பெங்களூர், சென்னை போகிறவர்கள்,



வருகிறவர்கள் கூட ஊருக்குள்ளே வந்து பார்சல் வாங்கிக் கொண்டு போவார்கள். சூடு ஆறிய பிறகு கூடச் சுவை குறைவது இல்லை. பிரபல அரசியல்வாதிகளிலிருந்து நடிகர்கள் வரை யார் அந்த ஏரியாவை கடந்து சென்றாலும் இரண்டு பிரியாணி பார்சல் இல்லாமல் போக மாட்டார்கள். அவ்வளவு சுவை. பிரியாணி தவிர வேறேதும் விற்பனை செய்யப்படுவதில்லை என்றாலும், எப்போதும் கூட்டம் நிரம்பி வழியும்.

பார்சல் கட்டும் போது, மசாலாவோடா? இல்லை ப்ளையினா என்று கேட்டால் நீங்கள் என்னவோ ஏதோ என்று நினைத்துவிடாதீர்கள். பிரியாணி கிளறும் போது அடியில் தங்கியிருக்கும் பிரியாணி மசாலா அப்படியே சோற்றுடன் கலந்திருக்கும். நீங்கள் மசாலா பிரியர் என்றால் யோசிக்காமல் தலையாட்டி ம்ம்.. என்று சொல்லிவிடுங்கள்.

அவ்வளவு சுவையாய் இருக்கும். பிரியாணியுடன் இவர்கள் வைக்கும் தாழ்சா,



எலுமிச்சை ஊறுகாய் சுவையோ சுவை, இவர்களுடைய பிரியாணியின் சிறப்பம்சம் என்னவென்றால், வேறு ஏதாவது பிரியாணி என்றால் சாப்பிட்டு முடித்தவுடன் கொஞ்சம் மந்தமாய் இருக்கும். இரவு வரை வேறெதும் சாப்பிட முடியாது. ஆனால் இவர்களுடைய பிரியாணி அப்படிக் இல்லை.

நான் என்னுடைய திருமணத்திற்குப் பிறகு சுமார் 28வருடங்களாக இதன் வாடிக்கையாளர், இந்தக் கடை சுமார் அறுபத்து ஐந்து வருடங்களுக்கு மேலாக இயங்கி வருகிறது. எனக்குத் தெரிந்து, இதன் சுவை மாறவே இல்லை.

காரணம் கை பக்குவம் மட்டுமல்ல, இவர்கள் பயன்படுத்தும் சீரகச்சம்பா அரிசி மற்றும் தங்களது சொந்த தயாரிப்பான வீட்டுமுறை மசாலாவும் தான். எந்த ஒரு காரணம் கொண்டும் பாசுமதி அரிசி, புல்லட் அரிசி, கடைகளில் விற்கும் மசாலாக்கல் பயன்படுத்துவது இல்லை.

பார்சலுக்கு மந்தார இலை எனப் பழமை மாறாமல் அப்படியே உள்ளது. வாய்ப்புக் கிடைப்பவர்கள் ஒருமுறை எங்கள் கடைக்கு வந்து சென்று ரசித்துச் சுவைத்துப் பாருங்கள்.





மக்கன் பேடா:

சரி அடுத்து இனிப்புக்கு வருவோம். அது என்ன மக்கன் பேடா? குலாப் ஜாமுனின் அக்கா போல இருக்கும் இந்த இனிப்பு, சுவையிலும் போட்டி போட முடியாத அளவு மிகப்பெரியதாக இருக்கிறது!

சிறிது மெனக்கெட்டு ஆற்காடு மக்கன் பேடாவை நம் வீட்டிலேயே தயாரிக்கலாமே! வழக்கம் போல எந்த ஒரு இனிப்புக்கும் அளவும், பதமும், அதைவிடக் கூடுதல் பொறுமையும் அவசியம். நமது பாரம்பரிய இனிப்புகள் போல அன்றி மக்கன் பேடா செய்முறை மிகவும் எளிதானது. மேலே பொன்னிறமாகவும் உள்ளே மிருதுவாகவும் வாயில் வைத்ததும் சுவையில் வழுக்கி செல்லும் மக்கன் பேடா தயாரிப்பது, ஜாமூன் செய்வது போன்ற வேலையே எனினும் பதம் அவசியம்.

தேவையான பொருட்கள்:

பால் கோவா
(சர்க்கரை இல்லாதது) - 100 கிராம்
மைதா - கால் கிலோ
ஆப்ப சோடா - ஒரு சிட்டிகை
தயிர் - 100 கிராம்
நெய் - 25 கிராம்
வனஸ்பதி - 50 கிராம்
எண்ணெய் - பொரிக்கத் தேவையான அளவு.
சர்க்கரை மூழ்கும் அளவு தண்ணீர் சேர்த்து ஒரு கம்பி பதத்துக்குப் பாகு காய்ச்சி ஆறவிடவும்.
மைதாவை ஆப்ப சோடாவுடன் (சமையல் சோடா) சேர்த்து சலித்து வைக்கவும்.

பால்கோவா, வனஸ்பதி, மைதா, தயிர் சேர்த்து மென்மையான மாவாகப் பிசையவும்.
பிசைந்த மாவை 5 நிமிடம் ஊற விடவும்.

நெல்லிக்காய் அளவு மாவை எடுத்து மோதகம் செய்வது போலச் செய்து உள்ளே உலர் பருப்புகளின் கலவையை வைக்கவும்.

மாவை மூடி அடுக்கி வைக்கவும்.
கடாயில் (வாணலி) எண்ணெய் விட்டு நன்கு காய்ச்சவும்.

மக்கன் பேடாவை எடுத்து சூடான எண்ணெய்யில் பொன்னிறமாகப் பொரித்து வைக்கவும்.

எண்ணெய் வடிந்ததும் சர்க்கரைப் பாகில் போட்டு நெய் ஊற்றி மூடி வைக்கவும். 5 மணி நேரம் ஊற விடவும். மக்கன்பேடா சுவையாக இருக்கக் கீழ்க்காணும் முறைகளைப் பின்பற்றவும்







பால்கோவாவை கட்டி இல்லாமல் மிருதுவாகப் பிசைந்து கொள்ள வேண்டும். சர்க்கரை ஒரு கம்பி பதம் போதுமானது.

* அதிகம் ஊறவிட அவசியம் இல்லை.
* 5 நாட்கள் வரை வைத்திருந்து சாப்பிடலாம்.
* உலர் பருப்புகள் மெலிதாகச் சீவி கலந்து போடுவது சுவை கூட்டும்.
* ஜாமூன் செய்யும் போது எண்ணெய்யில் எடுத்த ஜாமூனை, உடனே பாகில் போடாவிட்டால், ஜாமூன் உடைந்து விடும். மக்கன் பேடா சூடாகவும் சர்க்கரைப்பாகு சிறிது ஆறியும் இருக்க வேண்டும். மைதா, கோவா சேர்த்த இந்த இனிப்பு உள்ளே உலர் பருப்புகளால் பொதியப்பட்ட, வாயில் இட்டதும் கரையக்கூடிய அருஞ்சுவையுடன் இருக்கும்!

**180** ஆண்டுகளுக்கு முன் ஆற்காடு நவாப்பின் நண்பர் என்ற முறையில் அவர் வீட்டு விசேஷத்துக்குச் சென்றிருக்கிறார் கோவிந்தசாமி செட்டியார். விருந்தில் பரிமாறப்பட்ட ஒரு வகை இனிப்பு அவரை மிகவும் கவர்ந்திருக்கிறது.

இனிப்பு மிட்டாய் கடை நடத்தி வந்த கோவிந்தசாமி, அந்த இனிப்புக்கு இன்னும் சில பல செய்முறைகளால் சிறப்புச் சேர்த்திருக்கிறார். உயர்ந்த வகை உலர் பருப்புகளையும் சேர்த்து அவர் உருவாக்கிய மக்கன் பேடா பிற்காலத்தில் ஆற்காட்டின் அடையாளமாகவே ஆகிவிட்டது.

கோவிந்தசாமி செட்டியாருக்குப்பின் அவர் வழித்தோன்றல்கள் கோவிந்தராஜ், வரதராஜர், வேணுகோபால் செட்டியார் என்று, 182வது வருடத்தில் ஐந்தாம் தலைமுறை இனிப்புக் கடையாகச் சுந்தரம் செட்டியாரால் நடத்தப்படுகிறது.

பொறியியல் படிக்கும் இவரது மகன் சிவசங்கரும் அடுத்தத் தலைமுறைக்கு மக்கன் பேடாவை தொடரத் தயாராக உள்ளார். மக்கன் பேடா என்பது மைதா, கோவா சேர்த்த இனிப்பு... உள்ளே உலர் பருப்புகளால் பொதியப்பட்ட, வாயில் இட்டதும் கரையக்கூடிய சுவையுடன் இருக்கும். பொன்னிறமான மக்கன் பேடாவை தேக்கரண்டியால் சிறிது எடுக்கும் போதே மிருதுவான அதன் உட்புறம் நம் விழிகளை நிறைக்கும்.

'செட்டியார் கடை' என்று பெயர் பெற்ற



இந்தக் கடையின் இனிப்பு பெரியார் முதல் அனைத்து அரசியல், திரைநட்சத்திரங்களையும் கவர்ந்த சுவை. அது மட்டுமல்ல, வெளிநாடுகளுக்கும் பறந்து கொண்டிருக்கிறது. மக்கன் பேடா வாசனை இல்லாத எந்த விசேஷங்களும் வேலூர் பகுதியில் நடப்பதில்லை. இந்தக் குடும்பத்தில் நானும் ஒருவன் என்பதில் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்.





# குரங்குமலை, சமணர் படுக்கைகள்
## –மருத்துவர். குமரன் சண்முகம்




வேலூரில் இருந்து சென்னை செல்லும் தேசிய நெடுஞ்சாலையில் பயணித்து, பூட்டுத்தாக்குச் சந்திப்பில் வலது பக்கம் திரும்பி, மேலக்குப்பம் செல்லும் சாலையில் ஐந்து கிலோமீட்டர் சென்று, சானாரகுப்பம் என்னும் கிராமத்தில் அமைந்துள்ள குரங்கு மலையின் அடிவாரத்தை ஒட்டிய இடத்தில் இருந்து, பொடிநடையாக ஒரு தென்னந்தோப்பை கடந்து, மலையின் அடிவாரத்தில் உள்ள பாறையில் அமைந்துள்ள பல்லடுக்குச் சமணப் படுக்கைகளைக் காணலாம்.

நமது வேலூர் மரபு அமைப்பாளர்கள் ஒரு ஏணியைக் கொண்டுவந்ததால் உயரத்தில் அமைந்துள்ள சமணப்படுக்கைகள் பார்வையிட உதவியது.

மரபு நடையினர் நீண்ட வரிசையில் நின்று ஐந்து பேர் கொண்ட குழுவாக ஏணி மூலமாக மேலேறி உயரத்திலுள்ள சமணப் படுக்கைகளைப் பார்வையிட்டு வேடிக்கையான விதங்களில் புகைப்படங்களை எடுத்துக்கொண்டனர் தைரியமான ஒரு சிலர் பாறைகளின் மேல் ஏறி ஏணிக்கு எட்டாத உயரமான சமணப்படுக்கைகளை பார்வையிட்டனர். அடிவாரத்தில் தலை துண்டிக்கப்பட்ட தீர்த்தங்கரரின் சிலை புல் புதர்களுக்கு நடுவில் காணப்பட்டது.

சமணப்படுக்கைகளைப் பார்வையிட்ட பிறகு, மலை மீது செல்லலாம் என்று கிளம்பினோம். மலை ஏறும் வழியில், புல் புதர்கள் காணப்பட்டாலும் சிரமமின்றி, எல்லா வயதினரும் ஏறக்கூடிய வகையில் மலை ஏற்றம் அமைந்திருந்தது. பாதி வழியில் ஒரு சமணக் குகை காணப்பட்டது.

அக்குகையில் சூரிய ஒளி படாத சுனை காணப்பட்டது. நடைபாதை வழிமாறி படிக்கட்டுகள் மூலமாக மலை ஏற்றம் தொடர்ந்தது. கடைசிக் கட்டத்தில் மிகப் பெரிய பாறையில் சமணர்கள் செதுக்கிய படிக்கட்டுகள் மூலமாக மலையின் உச்சியை அடைந்தோம். அங்குத் திப்புச் சுல்தான் காலத்து மசூதி கூரை இல்லாமல் இடிந்த நிலையில் காணப்பட்டது. இரட்டை நீர் நிரம்பிய சுனைகள் காணப்பட்டன. சமணக் குகைகளும் ஆங்காங்கே காணப்பட்டன. பாறையில் சிந்து சமவெளி நாகரிக குறியீடுகள் காணப்பட்டன. மலையின் உச்சியைச் சுற்றி பல வடிவங்களில் பாறைகள் காணப்பட்டன. பாறைகளின்மேல் குரங்குகள் தாவி தாவி விளையாடிக்கொண்டிருந்தன.













மலையிலிருந்து அடிவாரத்தைப் பார்த்தால் கீழேயுள்ள தென்னந்தோப்புகள், கிராமங்கள், நீர்நிலைகள், சாலைகள், நத்தம் மற்றும் மேலக்குப்பம் மலைத்தொடர்கள் போன்றவை எவ்வளவு அழகாக இருக்கின்றன. அவற்றைக் கண்டுகளித்தோம். மலையைச் சுற்றியுள்ள பாறைகளின் மேல் குரங்குகளைப் போல் தாவி நடந்து சென்று சுற்றியுள்ள இயற்கையை ரசித்தோம். சுனையின் கரையில் அமர்ந்து புகைப்படம் எடுத்துக் கொண்டோம். மாலை சூரியன் அஸ்தமிக்கும் நேரம் வந்துவிட்டதால் அனைவரும் விரைவாகக் கீழே இறங்கினோம்.



# கலையாசிரியருடன் ஒருநாள் – இராசு. சரவணன் ராஜா



ஆதிமனிதன் தன் மனதில் எண்ணியதை, மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ள வேண்டுமெனக் கருதி. அதன் வெளிப்பாடாய். அவன் வசித்த மலைக் குகைகளிலும், பாறை சுவற்றின் மீதும் ஓவியமாக வரைந்தான். இப்படிதான் ஆரம்பித்துத் தொன்றுதொட்டு வழிவழியாகப் பல யுகங்களாகக் கடந்து. மேலும் செழிப்புற்று இன்றுவரை ஓவியக்கலை அழியாமல் வளர்ந்துவருகின்றது.

14ம் நூற்றாண்டில் தமிழ்நாட்டை ஆண்ட விஜயநகர நாயக்கர்கள் காலத்தில், ஓவியக்கலை பல புதிய போக்குகளைக் கைக்கொண்ட போதும். 18ம் நூற்றாண்டில் மராட்டியர்களால் அது பல மாறுதல்களைப் பெற்றது. தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு தமிழகத்தை ஆண்ட மராட்டிய மன்னர்கள் ஆதரித்த கலைஞர்கள் மூலமாக இங்கு அறிமுகப்படுத்திய ‘தஞ்சாவூர் ஓவியங்கள்’ என்று அழைக்கப்படும் ஓவியப்பாணி இங்கு வேர் பிடித்து, தழைத்து வளர்ந்தன. மற்ற ஓவியப்பாணி போல் இல்லாமல் கைவினை கலையும், ஓவியமும் இணைந்து ஒரு புதிய வடிவமாக தஞ்சை ஓவியக்கலை அமைந்தது.

இந்த அரிய ஓவிய பாணியைக் கற்று, அதை மேலும் மேலும் மெருகேற்றும் விதமாகப் பல ஓவியங்கள் வரைந்தும், அந்த ஓவியக்கலையை அடுத்தத் தலைமுறைக்கும் கற்பித்தும் வருபவர்தான் வேலூர், சத்துவாச்சாரியைச் சேர்ந்த திரு. செல்வ கணேஷ். அவரின் தனலட்சுமி தஞ்சாவூர் ஓவியக் கூடத்தில் ஹெரிட்டேஜர் தமிழ் மரபுசார் இதழுக்காக இவ்வரிய கலை நுணுக்கங்களைப் பகிர்ந்து கொள்ளும் ஓர் பிரத்தியேக நேர்காணல்.

வணக்கம் அய்யா, ஹெரிட்டேஜர் தமிழ் மரபுசார் இதழின் வேலூர் சிறப்பிதழுக்காகத் தங்களிடம் கலந்துரையாடுவதில் மகிழ்ச்சி.



**1. ஓவியம் என்பதற்கும் தஞ்சாவூர் ஓவியம் என்பதற்கும் என்ன வேறுபாடு?**

ஓவியங்களில் சுவர் மீது வரையும் ஓவியம், காகிதத்தின் மீது வரையும் ஓவியம், துணி மீது வரையும் ஓவியம் எனப் பல வகையுண்டு. தஞ்சை ஓவியம் என்பது **50%** ஓவியத்தைச் சார்ந்தும், மீதி **50%** கைவினை நுண்கலை கொண்டதாகவும் இருக்கும். ஓவியமும் நுண்கலையும் பிணைந்து இருப்பது தான் இவ்ஓவியபாணியின் சிறப்பு.

**2. ஏன் இதைத் 'தஞ்சை ஓவியம்' என்று அழைக்கிறார்கள்?**

**18**ம் நூற்றாண்டில் மராட்டிய ஆட்சிய காலத்தில், இந்தக் கலை அறிமுகப்படுத்தப்பட்டு, அவர்களின் அரவணைப்பில் வளர்ந்தது. சரபோஜி மன்னர் தஞ்சையை ஆண்ட காலத்தில் இந்த ஓவியபாணி பெரிதாக ஊக்குவிக்கப்பட்டது. இந்த ஓவியப்பாணியின் கருப்பொருள் என்பது இந்து மதம் சார்ந்ததாகவே இருந்தது. கடவுளை விலை மதிப்பு மிக்க பொருளாக காட்டவும், அலங்காரப்படுத்தி வழிபடவும் இந்த முறை உருவாக்கப்பட்டது. இவர்களின் கலை உத்திகளும், பாணிகளும் அங்கே நிலையானதால் இந்த ஓவியபாணியைத் 'தஞ்சை ஓவியம்' என்ற வழக்கு சொல்லே நிரந்தரமாகியது.

**3. இந்த ஓவியம் வரைவதற்குத் தேவையான மூலப்பொருள்கள் பற்றிக் கூறுங்கள்?**

இந்த ஓவியங்கள் வரைய ஆரம்பக்காலத்தில் பலாமரத்தின் பலகைகள் இணைத்துப் பயன்படுத்தப்பட்டன. சிறிய சிறிய பலகைகளை, சட்டங்கள் மூலம் இணைத்து பெரிய அளவில் பலகை ஏற்படுத்தினர். இன்றைய காலங்களில் பிளைவுட் பலகை பயன்படுத்தப்படுகின்றன. அந்த காலத்தில் வைரம், மாணிக்கம், முத்து போன்ற விலையுயர்ந்த கற்களை பயன்படுத்தினார்கள். இப்போது வண்ணக் கண்ணாடி கற்களை ஜெய்ப்பூரிலிருந்து வரவழைத்து அழகுபடுத்துகின்றனர்.

புடைப்பு ஓவியமாகக் காட்ட அந்தக் காலங்களில், வயல்வெளியில் உள்ள நண்டு வலைகளில் உள்ள சிவப்பு மணலும், வஜ்ஜிரம், புளியங் கொட்டையை வறுத்து அதன் மேல் தோலைப் பொடித்து ஒரு கலவையாக்கி ஆபரணங்களைப் புடைப்பாக வெளிக்காட்ட பயன்படுத்தினர். இந்தக் காலத்தில் அது மாற்றமாகி, மென்மையான சுண்ணாம்பு தூளும், கருவேல மரத்தின் பிசினைக் கலந்து அதன் கலவையைப் புடைப்பு சிற்பம் போல்



உருவாக்குகின்றனர்.

பழங்காலத்தில் தூய்மையான தங்கத்தை ஓவியத்தின் ஆபரணங்களின் மீது நேரிடையாக வார்ப்பு முறையில் பூசியுள்ளனர். (இதனால்தான் பழைய தஞ்சை ஓவியங்கள் சிதைந்து காணப்பட்டாலும் அதிக விலைக்கு வாங்கப்படுகின்றது) இந்தக் காலத்தில் தங்கத்தைச் சரிகை பேப்பர் வடிவில் (0.10mm) கனத்தில் மிகவும் மெல்லியதாக ஆபரணங்கள் மீது ஒட்டப்படுகின்றது.

**4. 18ம் நூற்றாண்டில் உருவான ஓவியப்பாணி 21ம் நூற்றாண்டிலும் பிரபலமாக அறியப்படக் காரணமானவர்கள் பற்றிச் சொல்லுங்களேன்?**

இது நல்ல கேள்வி. தஞ்சை முதல் ஸ்ரீரங்கம் வரை பரவலாகக் காணப்பட்ட இந்த ஓவியக்கலை, மெல்ல மெல்ல பல ஆட்சி மாற்றத்தாலும், கலைஞர்கள் போர் காரணமாக இடம்பெயர்ந்ததாலும், மூலப் பொருட்கள் விலை உயர்வாக இருந்ததாலும், பாரம்பரிய கலையை அவர்களின் வாரிசுகள் மறந்ததாலும் மறைந்துவிட்டது. எங்கோ ஓரிரண்டு ஓவியர்கள் மட்டுமே இதை விடாமல் தொடர்ந்து வரைந்துவந்துள்ளனர்.

ராஜா அண்ணாமலை செட்டியாரின் பேரன் குமாரராஜா முத்தையாவின் மனைவி குமார ராணி மீனா முத்தையா அவர்கள் சென்னை கவின் கலைக் கல்லூரியில் பயின்றவர். இந்த ஓவிய முறை பெருமைகளை அறிந்து 1974ம் ஆண்டு, இந்தக் கலையை உயிர்ப்பிக்க, அந்த கலைஞர்களைத் தேடிச் சென்று திரு. இராமானுஜர் என்பவரை ஸ்ரீரங்கத்திலிருந்து சென்னைக்கு தன்னுடன் அழைத்து வந்து, மீண்டும் அவரிடம் இவ்வரிய தஞ்சை ஓவிய கலையைப் பயின்றார். அவர் மூலம் குருகுல கல்விமுறையில் இந்த ஓவியபாணியை மாணவர்களுக்கு பயிற்சி அளித்துள்ளார். அன்று ஆரம்பித்த இந்த பயிற்சி வழிவழியாக இன்றுவரை தொடர்ந்து ஆயிரம் மாணவர்களுக்கு மேலாக தஞ்சை ஓவியர்களாக உருவாக்கி தந்த பெருமைக்குரியவர் திருமதி. குமார ராணி மீனா முத்தையாவை நன்றியுடன் நினைவு கூறுகிறேன்.

**5. உங்களுக்கு ஓவியக்கலை மேல் ஆர்வம் தோன்றியது எப்படி? யார் உங்கள் குருநாதர்?**

நான் 8ம் வகுப்பு முதல் பல்வேறு சிவன் வடிவங்களை அதிகமாக வரைவேன். எனது ஓவிய ஆர்வத்தைக் கண்டு, எனது தந்தை பாரம்பரிய ஓவிய முறையை கற்பிக்கும் குமார ராஜா முத்தையா

ஓவியப் பள்ளியில் சேர்த்தார். இந்த கல்லூரி 1974ல் ஆரம்பித்த போது அங்கே பயின்ற முதலாவது மாணவர் திரு. பாபு சுரேந்தர் என்பவரே என் குருநாதர். 1991 முதல் 1994 ஆண்டு வரை பயின்று இந்த ஓவியக்கலை பற்றிய விவரங்களைத் தெரிந்துகொண்டேன். என்னுடைய ஓவிய திறமையை மெருகேற்றி வெளிக்கொணர உதவிய இடம் இது.

**6. தஞ்சை ஓவியம் வரையும் முறை பற்றி விளக்கமாகக் கூறுங்கள்?**

தஞ்சை ஓவியத்தில் அன்று முதல் இன்றுவரை கடவுள் உருவங்களை மட்டுமே பிரதானமாகக் கொண்டு வரையப்படுகின்றது.

ஓவியத்தில் எந்த இடத்தில் புடைப்பு வேலை, எந்த இடத்தில் வர்ண வேலை, எந்த வகையில் வர்ணம் தீட்டினால் அழகு? ஓவியத்தில் எந்த மாதிரியான கலை நுணுக்கங்கள் தேவை? கற்கள் எந்த வடிவில், எந்த இடத்தில் அமைத்தால் அழகு தரும்? தங்க சரிகையை எந்த இடங்களில் ஒட்ட வேண்டும்? என பல பாகங்களாகப் பிரித்துத் திட்டமிட்டு இவ்வரிய கலையைக் கற்பிக்க வேண்டும்.

முதலில் பிளைவுட் பலகை மேல் வெள்ளை காடா துணியைப் பெவிக்கால் கொண்டு இழுத்துப் பலகை முழுவதும் அழுத்தி ஒட்டி நன்றாகக் காயவிடவும். பின்னர் அதன் மீது சாக் பவுடர், மஞ்சள் கோபி, பெவிக்கால் கலந்து இந்தத் துணி மீது பூசி துணியைச் சமமாக தேய்க்க வேண்டும். இந்த மேல் பூச்சு, ஓவியத்தைப் பிற்காலத்தில் பூச்சி அரிக்காமல் இருக்க உதவும். நாம் விரும்பிய ஓவியத்தை, அந்தப் பலகை மேல் உள்ள துணியில் கார்பன் பேப்பர் வைத்து வரைந்து நகலெடுத்துக் கொள்ளவேண்டும்,

ஆபரணங்கள் வரும் இடங்களில் கண்ணாடி கற்களைப் பெவிக்கால் கொண்டு ஒட்ட வேண்டும். இதன் பின்னர், கருவேல கோந்துடன் சாக் பவுடர் கலந்து புடைப்பு போன்று ஓவியமாகத் தீட்ட வேண்டும். இது காய்ந்த பின்னர் மீண்டும் அதன் மீது புடைப்பாக அலங்கார வேலைகளை நுணுக்கமாகத் தீட்ட வேண்டும். நன்றாக உலர்ந்த பின் புடைப்பு ஓவியம் தீட்டிய இடங்களில் உள்ள அளவை கண்களால் அளந்து அதே போன்று தங்க பேப்பர் வெட்டி, கருவேல பிசின் தடவி விரல்களால் அதை அழுத்தி ஒட்ட வேண்டும். அந்தத் தங்க பேப்பர் இப்போது புடைப்பாக ஒளிரும். இறுதியாக வண்ண கலவைகள் கொண்டு முகம், கை, கால், கண் போன்றவற்றைத் தூரிகை கொண்டு வரைய வேண்டும். நன்றாகக் காய்ந்த பின் நம் விருப்பம் போன்று மரச் சட்டம் கொண்டு கண்ணாடி பிரேம் செய்ய வேண்டும். இப்போது அழகிய தஞ்சாவூர்



ஓவியம் தயார்.

**7. இந்த ஓவியக் கலையை எப்படி மற்றவர்களுக்குப் பயிற்றுவிக்கிறீர்கள்?**

1994ம் ஆண்டு நான் பயிற்சி முடித்த பின் அதே பள்ளியில் சுமார் 5 ஆண்டுகள் ஓவியராகப் பணியாற்றினேன். பின்னர் நான் பிறந்த வேலூரில் இந்தத் தஞ்சை ஓவியத்தைப் பயிற்றுவிக்க வேண்டுமென்று தனலட்சுமி தஞ்சை ஓவியக் கூடம் ஆரம்பித்துக் கடந்த 20 வருடங்களாக ஆயிரம் பேர்களுக்கு மேல் பயிற்சி அளித்துள்ளேன். ஓவியம் வேண்டுபவர்களுக்கு அவர்கள் தேவைக்கேற்ற அளவுகளில் தெய்வ உருவங்கள் வரைந்து தருகிறேன்.

**8. இந்த ஓவிய பாணிக்கு இப்போது வரவேற்பு எப்படி உள்ளது?**

இந்த ஓவிய முறையைக் கற்பதற்குச் சிறப்பான வரவேற்பு உள்ளது. மகளிர் பெருமளவில் ஆர்வம் காட்டுகிறார்கள். விஞ்ஞான வளர்ச்சி அடைந்த இந்தக்காலத்திலும் மக்கள் இக்கலை மீது பெருமதிப்பு வைத்துள்ளார்கள். உள்ளூர் மட்டுமின்றி வெளிநாடுகளிலிருந்தும் ஓவியங்கள் வாங்கி செல்கின்றனர். மனித சக்தி அன்றி இயந்திரம் மூலமாக இதைத் தீட்ட முடியாது என்பதும் ஒரு காரணமாக இருக்கக்கூடும்.

**9.** பல வகையில் இந்த ஓவியங்கள் நீங்கள் வரைந்திருந்தாலும்

உங்களுக்குப் பிடித்த தஞ்சாவூர் பாணி ஓவியம் எது?

எனக்கு மிகவும் பிடித்த ஓவியம் நவநீத கிருஷ்ணன், இந்த ஓவியம் செட்டிநாடு அரண்மனையில் உள்ளது. 100 ஆண்டுகள் பழமையானது.

தமிழக அரசின் மாநில விருது, கலை வளர்மணி முதல் பல்வேறு அமைப்புகள் மூலம் அளிக்கப் பெற்ற பல விருதுகளும், பட்டங்களும், பரிசு தொகைகளும் பெற்றவர் திரு. செல்ல கணேஷ். பேட்டியின் இடையே தன் மாணவர்களுக்குத் திருத்தங்கள், ஓவிய நுணுக்கங்களைச் சொல்வது மட்டுமின்றி அவர்களுக்கு வரைந்தும் காட்டுகிறார். அவர் கரங்களில் உள்ள தூரிகையால் வரைந்த ராமர், கிருஷ்ணர், லட்சுமி, பெருமாள் எனப் பல்வேறு தெய்வ வடிவங்கள் காண்பவர்களைக் கவர்கின்றது. ஓவியக் கலைஞர்களுக்குப் பாராட்டும், நல்ல மதிப்பும் தான் இந்தக் கலையில் அவர்களுக்கு மேன்மேலும் ஆர்வம் ஏற்படச் செய்து, வெற்றிபெற வைக்கின்றது. கலை என்பது ஒரு எல்லையற்ற கடல் போன்றது. இது ஒரு முடிவில்லாத முடிவுரை.



# தென்னகத்தின் பொற்கோவில்

## - ச.சு. நாகராஜன், சித்த மருத்துவ மாணவன்



கல்லூரியில் இரண்டாம் ஆண்டுப் படிக்கிற நாட்களில் குடும்பமாய் அம்மா, , நான் , அண்ணா, அண்ணி, அண்ணியோட அப்பா, அம்மா வந்த சுற்றுலாங்க அது சுயமி, கைப்பேசி அதெல்லாம் சுத்தமா தெரியாத போது சென்ற பயணம் அது.

திருவண்ணாமலையில் அதிகாலையிலேயே சுவாமி தரிசனம் முடித்துக்கொண்டு நேரே வேலூர்போகிற பேருந்தில் ஏறிவிட்டோம்... ரோட்டோர கடையில் வங்கிய இலந்தைப்பழத்தை கொறித்துகிட்டே பயணத்தை ரசித்துகிட்டே வந்தேன். அப்போது எனக்குக் கைப்பேசி வைத்துக்கொள்கிற பழக்கமெல்லாம் கிடையாது...

பயணத்தில் கேட்ட மொழியில் இருந்து வசவுகள் வரை எல்லாமே புதிதுதான். அந்தத் திருவண்ணாமலை, வேலூர் வட்டார மொழி பிரயோகமே கொஞ்சம் வித்தியாசமா தான் இருந்தது. நான் அறிந்தது நாஞ்சில் தமிழ் மட்டுமே. ஆப்போ தான் புரிஞ்சுது தோழமை பிரசன்னாவின் பேச்சிற்குக் காரணம்.

நேரே அரும்பாடு பட்டு மலைகளும், வறண்ட காடுகளையும் , பொட்டல் வெளியும் கடந்த பேருந்து சரியாக மதிய பொழுது 12க்கு மேலே வேலூர் நகரில் கொண்டு சேர்த்தது. வேலூர் நான் படிக்கிற பாளையங்கோட்டைக்குக் கொஞ்சமும் சளைத்தது இல்லை என்பதைப் புரிய நிறைய நேரமெல்லாம் கூடத் தேவைபடல... வெயிலூர் தான் வேலூர் னு ஆனதோ னு யோசிக்கக்கூட வைக்கும் இந்த ஊர்...

நேரே போனது வேலூர் கோட்டை... 136 ஏக்கர் பரந்துவிரிந்த கோட்டை சுற்றிப் பார்க்கவே பல மணிநேரம் ஆகும். ஆனால் எனக்கிருந்த அந்த ஆர்வம் எங்கள் கூட்டத்தில் யாருக்குமே இல்லாததால் அந்தப் பரந்த கோட்டையை 1 மணிநேரம் மட்டுமே பார்க்கமுடிந்தது.

சம்புவராயர் தொடங்கி நாயக்கர் காலம் வரை 16 நூற்றாண்டில் அளவெடுத்துச் செதுக்கிய கோட்டை. 19 நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆங்கிலேயர் கைபற்றிய பின்னும் தன் சிறப்பை இழக்கவில்லை.

1806 சூலை 10 ம் நாள் இங்கு நடந்த " சிப்பாய் கலகம்" வரலாறு பதிவு செய்யத் தவறிய ஆங்கிலேயர்களுக்கு எதிராக இந்திய தேசத்தில்



நடத்த முதல் கிளர்ச்சி. அது ஒடுக்கப்பட்டாலும் **400** வருட வரலாற்றோடு அத்தாட்சியாக அந்தக் கோட்டை இன்றும் உயிர்ப்போடு இருக்கிறது..

அகழி அமைப்புடைய கோட்டை பார்க்கும்போதே அதுவொரு தனித்துவ அழகைக் கொடுக்கிறது. சிறிது நேரம் ஏறியும் இறங்கும் ரசித்துவிட்டு அங்கிருந்த தனித்துவமான சம்புவராயர் பின்னணி கொண்ட ஜலகண்டேஸ்வரா் கோயில் போனால் கோயில் நடை சாத்தப்பட்டிருந்தது. ஆனால் அந்தக் கோயில் கோபுரமும் அதன் நிறமும் உங்களை நின்று ரசிக்கவைக்கும்... நிமிடங்கள் உருண்டோட

தாவரவியல் பித்தான சுற்றி அங்கிருந்த கல்லத்தி மரத்தைப் பார்த்தபொழுது தான் ஒருவித திருப்தியுடன் அவ்விடம் நகர்தாம் நேரே சென்றது சுற்றுலா ஸ்தலம் என்று சொல்வது தான் சால பொருந்தும்... "தென்னகத்தின் பொற்கோவில் " னு சொல்கிற ஸ்ரீ லட்சுமி நாராயணி அம்மன் கோவில் தான் அது.

நேரே **1.40** க்கு ஸ்ரீபுரம் நோக்கிக் கிளம்பினோம்... வழியில் சாலைப் பணிகள் மந்த கதியில் நடந்தேறிக் கொண்டிருந்தது.. சிறிது நேரத்தில் திருமலைக்கோடி கிராமத்தில் அமைந்த ஸ்ரீபுரத்தை அடைந்துவிட்டோம்.

தூரத்திலிருந்து பார்க்க ஏதோ தங்க வண்ணம் போலத் தான் தோன்றியது. அனேக கெடுபிடிகள் பைகள், பொருட்கள், திறன்பேசிகள் எல்லாம் பிடுங்கிவிட்டு வெற்றுகையுடன் கோயிலுக்குள் அனுப்பப்பட்டோம்... சிறிது நேரே காத்திருப்பிற்குப் பின் கூட்டம் மெல்ல மெல்ல நகர்ந்தது பின் பல படிநிலையாக அரைமணி காத்திருப்பிற்குப் பின் நடக்கத் தொடங்கினோம்.. சுற்றுப்பிரகாரத்தைப் பெருவட்டம் சுற்றிச் சுற்றி வரும்படி நட்சத்திர பாதை அமைக்கப்பட்டிருந்தது.

திறன்பேசி கையில் இல்லாத காரணத்தால் பலரும் அங்கே கண்களை உலவ விடுவதை உணரலாம்.

ரம்மியமான சூழல், வளர்க்கப்படும் பறவைகளின் இடைவிடாத சிற்றிய கீச்சோலி, ஆங்காங்கே அமைக்கப்பட்ட செயற்கை நீரூற்றின் அழகு... பச்சை போர்த்திய புல் வெளிகள் வேதத்தில் கூறும் ஏற்கத்தக்க கருத்துகள் , கற்சிலைகள் , சிவப்பு கம்பள வரவேற்பு அந்த இடமே உங்கள் மனதிற்கு ஒரு வித அமைதியே தருவதை உணர்வீர்கள்.

இது வேலூரின் ஆகச் சிறந்த சுற்றுலா ஸ்தலங்களில் ஒன்று என்பதில் எந்த ஐயப்பாடும் இல்லை. சுற்றுகள் எல்லாம் முடிந்து நுழைந்தால் அந்தப் பொற்கோயிலில் நுழைந்தோம்.. எனக்கு

ஏனோ மனம் அந்தக் கோயிலில் லயிக்கவில்லை அந்தச் சுற்றுச்சூழல் அதைவிடவும் அழகானதாக எனக்குப்பட்டது.

கைகளால் இழைத்துச் செய்த 1500 கிலோ தங்கம் வேய்த பொற்கோயிலாக இருக்கலாம். தங்க யானைகளின் சிற்பங்கள், தங்கமயில் சிற்பம், தங்க



மாடம், விமானம் தொடங்கித் தரைவரையிலும் முழுக்க முழுக்கத் தங்கம் இழைந்தோடும் ஸ்தலமாக இருக்கிறது.

அங்கு ஸ்ரீ லட்சுமி நாராயணி அம்மன் என்ற பெயரிலிருந்த தேவி அழகி தான். இந்தக் கோயிலை ஸ்ரீ நாராயணி பீடம் என்ற தன்னார்வ அமைப்பு 350 கோடியில் 2007 யில் அமைத்தது

அந்தத் தங்கம் மின்னும் அரங்கில் நடுவே குளத்தில் எறியப்பட்ட எண்ணற்ற நாணயங்கள் காரணம் அறியாமல் அந்தச் சொர்ண பரப்பில் சொக்கி கிடந்தது அதை அகற்றவும் ஆட்கள் யாருமில்லை. தரிசனம் முடிந்து வெளியே வரும் முன் அந்தத் திருமலைக்கோடி மலையடிவாரத்தில் காணால் ரசித்துக்கொண்டேன் அதன் 130 ஏக்கர் பரப்பளவையும் கண்கள் காணவில்லை. சிறு பிரசாதத்துடன் முடிந்தது எங்கள் தரிசனம் . அது கோயில் தான் என்பதை என் மனம் அறுதியிட்டு ஏற்க மறுத்தது ஆனால் மனம் அமைதியுற ஒரு நல்ல சுற்றுலாத் தலம்.

பொன்னும் பொருளும் இழைத்தால் மட்டும் வருவதில்லை அமைதியும், மனநிம்மதியும். ஆனால் 300 கோடியில் 2007யில் அமைந்த இந்த இடம் மனநிம்மதியையும் ரம்மியமான அமைதியையும் தரவல்லது நீங்களும் வந்து பாருங்கள் இந்தத் தென்னகத்தின் பொற்கோயிலை.

# வள்ளிமலை, கங்க மன்னன் கொடை

## – அ.கார்த்திகேயன் அரூர்



வேலூர் மரபு நடையில், தான் பார்த்த இடங்களைக் குறித்துச் சுவாரஸ்யமான சில தகவல்களை, அலுவலகத்தில் தேநீர் இடைவேளையில் பகிர்ந்த போது, அதனால் கவரப்பட்டு, மரபு நடைக்கும் சுற்றுலாவுக்கும் என்ன வித்தியாசம் என்று காண ஆவலுடன் இந்த மரபு நடையில் கலந்து கொண்டேன்.

காலை. பல்வேறு ஊர்களிலிருந்து முகநூலில் கண்ட நண்பர்கள் சிலரைப் பார்த்து, சுய அறிமுகம் செய்து கொண்டோம். பிறகு எங்கள் பயணம் தொடங்கியது. முதலாவதாக வள்ளிமலையை வந்தடைந்தோம். அங்கே 5ம் நூற்றாண்டில் சமணர்கள் வாழ்விடம், கல் படுக்கைகள், அழகு சிற்பங்கள் என வித்தியாசமாகப் பார்த்ததில் வேறு ஒரு உலகில் இருப்பது போன்ற உணர்வு ஏற்பட்டது. மனம் லேசாகி அமைதியானது. அங்கே கூறியவற்றை இங்கே சுருக்கமாகத் தொகுத்து அளிக்கிறேன். பிறப்பினால் உயர்வு, தாழ்வு காணும் குறுகிய மனப்பான்மை சமணச் சமயத்தில் இல்லை. மேலும், ஒருவருக்கு உணவு, அடைக்கலம், மருந்து, கல்வி என்னும் நான்கு தானங்களைச் செய்வதைச் சமணர்கள் தமது பேரறமாகக் கொண்டிருந்தார்கள். அக்காலத்தில் சேர, சோழ, பாண்டிய, பல்லவ அரசர்களில் பலர் சமணச் சமயத்தில் சேர்ந்திருந்தனர்.





இந்த மதத்தின் செல்வாக்கைக் கண்டு, சமணச் சமயத்தவரல்லாத அரசர்களும், சமணப் பள்ளிகளுக்கும், மடங்களுக்கும் பொன்னையும், பொருளையும் பள்ளிச்சந்தமாகக் கொடுத்து உதவினார்கள். அதுபோல் கங்க அரசன் நன்கொடை கொடுத்து அமைக்கப்பட்டது தான் இந்த வள்ளிமலை சமணர் பள்ளி, என்பதை இங்குள்ள கல்வெட்டு ஆதாரங்கள் தெளிவாக்குகின்றன. இக்குன்றின் கிழக்குப் பக்கத்தில் இயற்கையாக அமைந்துள்ள ஒரு திறந்தவெளி. குகையின் மேலே சமண உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. இந்தச் சமண உருவங்களின் கீழ்க் கன்னட மொழியில் சில எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

இந்த எழுத்துக்கள் மூலம் இங்குள்ள குகையில் சமணச் சிற்பங்களை உருவாக்கியவர் இராசமல்லன் என்ற கங்ககுல அரசன் என்பது தெரிகின்றது. மேலே உள்ள சமண உருவங்களின் கீழ்ப் பொறிக்கப்பட்டுள்ள எழுத்துக்களில் ஒன்று 'அஜ்ஜ நந்தி பட்டாரர் இந்த பிரதிமையைச்செய்தார்' என்றும், இன்னொரு எழுத்தில் 'ஸ்ரீ பாணராயிரின் குருவாகிய பவணந்தி பட்டாரரின் மாணவராகிய தேவசேனபட்டாரரின் திருவுருவம்' என்றும், மற்றொரு வரிசையில் 'பாலசந்திரபட்டாரது சீடராகிய அஜ்ஜநந்தி பட்டாரர் செய்த பிரதிமை' என்று கூறுகின்றன. மேலும் தரையில் காணப்படும் கல் படுக்கைகளில் உள்ள கல்வெட்டுகள் தேய்ந்து காணப்படுகின்றன. பண்டைய காலத்தில் இந்த இடம் சமணர்களுக்கு உரியதாய் இருந்தது தெளிவாகிறது.

பிறகு மேலும் பல இடங்கள் அந்த மரபு நடையில் நாங்கள் பயணித்தோம் என்றாலும், என் மனம் மிகவும் விரும்பிய இடம் இதுதான். கலந்து கொள்ளாமல் தவிர்த்திருந்தால், ஏதோ ஒன்றை இழந்திருப்பேன் என்றே எண்ணத் தோன்றுகிறது. நம் மனம் புத்துணர்ச்சி அடைய இது போன்ற மரபுநடையில் கலந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணமே மேலோங்கியது. வேலூர் மரபு நடை ஏற்பாட்டாளர்களுக்கு நன்றி.





# கடத்தப்படவிருந்த நாயக்கர் கால கல்யாண மண்டபம்

## – திருமதி. கலைசெல்வி சரவணன். வேலூர்



புராண பெருமை கொண்ட ஊர் வேலூர். அதில் இரத்தினமாக ஒளிர்கின்றது இக்கோட்டை. வறண்ட நிலத்தின் நடுவே, சுற்றிலும் நீர் சூழ்ந்த அகழியுடன் எகமுகதுர்க சாஸ்திரப்படி ஒரே வாயிலுடன் 136 ஏக்கர் நிலப்பரப்பில், கம்பீரமாக எழுந்து நிற்கும் கலைக் களஞ்சியம். கலைஞர்களின் கற்பனைக்கும், சிற்பத்திறனுக்குச் சாட்சியாக விளங்குகிறது இக்கோட்டை.

அசாதாரணமான எழு நிலை உடைய ராஜகோபுரம், கோயிலின் உள்ளே நுழையும் முன் பக்தர்களை, ஒரு சில நிமிடங்களாவது நின்று பார்க்க வைக்கும். இதன் வாயில் 4.15 மீட்டர் அகலமும், 7.15 மீட்டர் உயரமும் கொண்டு இரு பெரும் மரக் கதவுகளுடன் அமைக்கப்பட்டுள்ளது. ராஜகோபுரமா? இல்லை சிற்பக்கூடமா? என்று பார்ப்போரைத் திகைப்பில் ஆழ்த்துகிறது.

சுவரெங்கும் புராணங்கள் விவரிக்கும் விஷயங்களை அந்த சிற்பங்களில் செதுக்கியிருக்கிறார்கள். பல யுகங்களுக்குள் புகுந்து புராண சம்பவங்களைக் கண்ட பிரமிப்பை இராஜகோபுரம் அளிக்கிறது. நகராமல் தயங்கி நிற்கும் நம் கால்களை இயக்கி கோயிலுக்குள் நுழைய வேண்டும்.

வேலூர் கோட்டை கல்யாண மண்டபம்:

தமிழகத்தில் அமைந்துள்ள எண்ணற்ற மண்டபங்களில் சிறந்த ஆறு மண்டபத்தைச் சிற்பக்கலை அறிஞர்கள் வரிசைப்படுத்திக் கூறுகின்றனர்.

1. மதுரை ஆயிரம் கால் மண்டபம்,
2. திருநெல்வேலி நெல்லையப்பர் கோயில் மண்டபம்,



3. கிருஷ்ணாபுரத்தில் அமைந்துள்ள மண்டபம்,
4. சுசீந்திரம் கோயில் மண்டபம்,
5. பேரூர் கோயில் மண்டபம்,
6. வேலூர் ஜலகண்டேஸ்வரர் ஆலயத்தில் உள்ள இந்த மண்டபம்.

விஜய நகர காலத்திய சிற்பக்கலைக்குச் சான்றாக நிற்கின்றது இத்திருமண மண்டபம். இங்கிருந்து ஆலயம் தொடங்குகிறது.

ஒரே திசையில் மண்டபத்தை முழுமையாகப் பார்க்கும்படியான வாசல் அமைப்பும், முதல் வரிசையில் 8 தூண்கள் வீதம் முதல் தளத்தில் மூன்று வரிசையில் 24 தூண்களும், இரண்டாம் தளத்தில் 8 தூண்களும், மூன்றாவது தளத்தில் 14 தூண்களும் ஆக மொத்தம் 46 தூண்கள் உள்ளன.

முதலில் அமைந்த 8 தூண்களும், நம் முதற் பார்வையிலேயே உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் கலையழகுடன் அமைந்துள்ளன. இத்தூண்களின் முன்புறமாகப் பாயும் நிலையில் குதிரை வீரர்கள், யாளி மீது அமர்ந்த வீரர்கள் என உயிர்ப்பான சிற்பங்களைக் கொண்டுள்ளன.

இந்தப் போர் வீரர்கள் அணிவகுப்பை பார்க்க மெய்சிலிர்க்கும், ஒரே கல்லில் அனைத்து உருவங்களையும் வடித்திருப்பது சிறப்பு. அருகே நின்று பார்த்தால் கல்லை இழைத்துச் செய்த நுணுக்கம் புரியும்.

ஒவ்வொரு தூணும் கீழ், நடு, மேல் எனும் மூன்று பாகங்களாகப் பிரிக்கப்பட்டு, அம்மூன்று பகுதிகளின் நான்கு பக்கங்களிலும் கலையழகு மிளிரும் புடைப்புச் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன. சிற்பக்கலையில் இதற்கு மேல் செய்ய முடியுமா என்று கற்களைக் கொண்டு காவியம் படைத்துள்ளார்கள்.

சைவ வைணவச் சிற்பங்கள் பாகுபாடின்றிப் பரவலாக அமைந்துள்ளன. இராமர், கிருஷ்ணர், பெருமாள், நரசிம்மர், அனுமார், நடராசர், பைரவர், தட்சிணாமூர்த்தி, வீரபத்திரர், இலக்குமி, உமையாள் என பல்வேறு தெய்வ வடிவங்கள் தனித்தனியாக இடம்பெற்றுள்ளன.

சமூக வாழ்வியல் சிற்பங்களில் காணப்படுகின்றன அவைகளில் குறவன், குறத்தி, வேடுவன், வேடுவச்சி ஆகியோரின் சிற்பம் அக்கால நாகரீகத்தை விளக்குகிறது. இவை தவிர மலர்கள், மரங்கள், பறவைகள், விலங்குகள் என பல்வேறு இயற்கைக் காட்சிகளும் செதுக்கப்பட்டுள்ளன.
நூறா, ஆயிரமா..... எத்தனை சிற்பங்கள் என எண்ணி மாளவில்லை.

சிற்ப சாஸ்திரத்தின் நேர்த்தியில் சிற்பிகள் பிரமிக்கவைக்கிறார்கள்.

கல்லிலே கலை மிளிரும் மாபெரும் கல்யாண மண்டபம் இது, மேல்நாட்டு புதைபொருள் ஆராய்ச்சியாளர் திரு.லாங்கர்ஸ்ட் என்பவர் "மதுரையிலும், வேறு சில இடங்களிலும் உள்ள புகழ் வாய்ந்த ஆயிரம் கால் மண்டபங்களை விட, இம் மண்டபம் அளவில் சிறியதாக இருந்தாலும், இது தென்னிந்தியாவிலேயே மிகுந்த கலையழகு வாய்ந்த மண்டபம்" என குறிப்பிட்டுள்ளார்.

மூன்றாவது உயர்ந்த தளத்தின் நடுவே சுமார் ஒரு மீட்டர் உயரமுள்ள மேடை, ஒரு ஆமையின் முதுகின் மேல் அமைக்கப்பட்டது போல் வடித்துள்ளனர். இம் மேடையின் கீழ்ப்பகுதியில் சுற்றிலும் எண்திசைக் கடவுளர்களும்,மேடையைத் தாங்கி நிற்கும் நாகங்களும், யானைகளும், பிற தேவதைகளும் வரிசையாக, அழகிய சிற்ப வடிவில் காண்பதற்கு அரிய கலைக்காட்சியாக அமைக்கப்பட்டுள்ளது. இந்த மண்டப விதானத்திலும் விந்தையான சிற்பங்கள் அமைந்துள்ளன. தாமரை மலர் விரிந்த நிலையில், தலைகீழாக வைத்தது போன்ற அமைத்து, அதன் இதழ்களைத் தங்களது வாயினால் கொத்தி நிற்கும் கிளிகள், வட்ட வடிவில் அமைத்துள்ள விதம் எழுத்தில் அடங்காத காட்சி,



நேரில் கண்டு ரசிக்க வேண்டிய சிற்ப விந்தை இது.

இந்த மண்டப சுவரின் கீழ்ப்பகுதியில் உள்ள சிற்பங்களில் கண்ணையும் கருத்தையும் கவருவது, ஒரே தலையும், இரு உடலமைப்பும் கொண்ட யானையும், காளையும் சேர்த்து அமைந்த அரியகலை உருவமாகும்.

சுவர்கள் முழுமையாக அற்புதமான சிற்பங்கள் இடம் பெற்றுள்ளன. கல்லில் கவிபாடும் கல்யாண மண்டபம் என இதைக் கூறுவது பொருத்தமே.

இதன் அழகின் சிறப்பினை உணர்ந்த ஆங்கிலேய தளபதி ஒருவர் இந்த மண்டபத்தைத் தனித்தனியாகப் பிரித்துக் கப்பலில் லண்டனுக்கு எடுத்து சென்று பிரைட்டன் கலைக்கூடத்தில் வைக்கத் திட்டமிட்டார். ஒவ்வொரு பாகத்திற்கும் தனித்தனி எண்கள் கொண்ட வரைபடமும் தயாரிக்கப்பட்டது.

லண்டனுக்கு இதனை ஏற்றி செல்ல வரவழைக்கப்பட்ட கப்பல் வரும் வழியில் கடலில் மூழ்கிவிட்டதால், இத்திட்டம் கைவிடப்பட்டு மண்டபம் காப்பாற்றப்பட்டது. கவிழ்ந்து போன கப்பலுக்கு நன்றி.



# 152 வது ஆண்டில் வாலாஜா நகராட்சி

## – ந.ச.நடராசன்




கிழக்கிந்திய படைத்தளபதி இராபர்ட் கிளைவ், 1751ல் ஆற்காட்டை கைப்பற்றினார். இந்தப் போரில் உறுதுணையாக இருந்த முகமது அலி 1754-ல் "ஆற்காடு நவாப்"-ஆக முடிசூட்டப்பட்டார். இவருக்கு "வாலாஜா" (WALAJAH) எனும் பட்டமும் வழங்கப்பட்டது. இதற்கு "கௌரவம் வாய்ந்தவர்" என்று பொருள்.

ஆற்காடு நவாபாக முடிசூட்டப்பட்டதின் நினைவாக ஒரு நகரை நிர்மாணிக்க முகமது அலி முடிவு செய்தார். இவருக்கு ஆலோசகராக இருந்தவர் ராயாஜி என அழைக்கப்பட்டவர். இருவரும் கலந்தாலோசித்து, ஆங்கிலேய அரசின் ஒப்புதல் பெற்று பிரெஞ்சுப் பொறியாளர் வெர்டினன்ட்-டி-வவுட்ஸ் என்பவரிடம் நகர நிர்மாணப் பணிகளை ஒப்படைத்தனர்.

பாண்டிச்சேரி நகரை நிர்மாணித்தவரும் இந்தப் பொறியாளர்தான். வாலாஜா நகரம் அப்போதைய **Great Western Trunk Road**ல் சென்னையிலிருந்து **110** கிலோ மீட்டர் தொலைவில் அமைக்கப்பட்டது. கிழக்கு மேற்காகச் செல்லும் நெடுஞ்சாலை நகரத்தை சரிபாதியாகப் பிரிக்கின்றது/ மற்ற தெருக்கள் நெடுஞ்சாலைக்கு இணையாகவோ அல்லது இதன் கிளையாகவோ அமைக்கப்பட்டுள்ளது.

மக்களின் தண்ணீர்த் தேவைகளுக்காக நகரெங்கும் 21 குளங்களும் நூற்றுக்கணக்கான கிணறுகளும் அமைக்கப்பட்டிருந்தன. நகரம் அமைக்கப்பட்ட போது வீட்டின் கழிவு நீர்ப் பாதைகள் தெருப்பக்கம் அமைக்காமல் பின்பக்கம் அமைத்துள்ளனர். எவ்வளவு மழை பெய்தாலும் வெள்ளநீர் துளியும் தேங்காத வண்ணம் நகரமைப்பு உள்ளது. இதற்குக் காரணம் பீடம் போன்ற மேடான இடத்தினை நகரம் அமைக்கத் தேர்ந்தெடுத்ததே ஆகும். சுருங்கச் சொல்வதானால் ஆங்கிலேயர், நவாப், ராயாஜி, ப்ரெஞ்சுப் பொறியாளர் ஆகிய நால்வர் கூட்டணியால் உருவாக்கப்பட்ட "ஸ்மார்ட் சிட்டி" என வாலாஜாவைக் கூறலாம்.

வேலூர் மாவட்டத்தில், வாலாஜா, இராணிப்பேட்டை, ஆற்காடு ஆகிய மூன்றும் அடுத்தடுத்து உள்ள நகராட்சிகளாகும். ஆங்கிலேயர் மற்றும் நவாபுகளின் காலத்தில் ஆற்காடு தலைநகராகவும் இராணிப்பேட்டை படைத்தளமாகவும் வாலாஜாபேட்டை வணிக கேந்திரமாகவும் இருந்தன. தமிழகத்திலேயே முதல் நகராட்சியாக உருவானது வாலாஜாபேட்டையே ஆகும். அப்போதைய ஆங்கில அரசால் **02.11.1866**ல் வாலாஜா நகரம் "நகராட்சியாக" உருமாறியது.

வடஆற்காடு மாவட்டத் தலைநகராகச் சித்தூர் இருந்த போது மிகப் பெரிய வணிக நகராக வாலாஜா




விளங்கியது. பாக்கு, பருத்தி, வாழை, வெல்லம், அரிசி மற்றும் தானிய வகைகளுக்கெனத் தனித்தனி மண்டிகள் அமைந்திருந்தன. பாக்குப்பேட்டை, பஞ்சுப்போட்டை, காகிதக்காரத் தெரு, அரிசிக்காரத் தெரு, வெற்றிலைக்காரத் தெரு எனப்படும் இப்போதை தெருக்களின் பெயர்கள் இதனைத் தற்போதும் வாணிகப் பெருமைகளைப் பறைசாற்றி வருகின்றன. ஸ்வர்ண செட்டிப் பேட்டையில் அக்காலத்தில் தங்க வியாபாரம் நடைபெற்றது என்பதிலிருந்து வாலாஜாவின் பழங்காலச் செழுமையை அறியலாம்.

இதன் தற்போதைய பரப்பளவு **2.64** சதுர மீட்டர்களாகும். பத்தாண்டு கணக்கெடுப்புகளின் படி **2011**ல் இதன் மக்கள் தொகை **32001** ஆகும். எனினும் தற்கால நகரமயமாதலினால் இத்தொகை இருமடங்காகியிருக்கலாம் எனக் கருதப்படுகிறது. அண்மையில் நடந்த **2016** சட்டமன்றத் தேர்தலின் போது **25** வாக்குச் சாவடி மையங்களில் **25,812** பேர் வாக்களிக்கத் தகுதி பெற்றனர். இவர்களில் **19,524** பேர் அதாவது **75.63** சதவீத வாக்காளர்கள் தங்களின் வாக்கைப் பதிவு செய்தனர்.

**1903**-லேயே மகளிருக்கான தனிப் பள்ளியைத் துவக்கிய பெருமை இந்த நகராட்சிக்குள்ளது. அதே போல் அப்போதைய ஒருங்கிணைந்த சித்தூர் மாவட்டத்திலேயே முதல் அரசு மருத்துவமனை இங்குதான் கட்டப்பட்டது. தத்துவ அறிஞர் டாக்டர். இராதாகிருஷ்ணன் அவர்களும், தமிழறிஞர் டாக்டர். மு.வரதராசனார் வாலாஜாவில் கல்வி பயின்றுள்ளனர். தற்போது, நகராட்சியின் சார்பில் இரண்டு இடைநிலை பள்ளிகளும் இரண்டு ஆரம்பப் பள்ளிகளும் நடத்தப்பட்டுவருகின்றன.

இந்நகரின் பாரம்பரியத் தொழிலாகப் பட்டு நெசவு, பிரம்புத் தொழில், கம்பளி நெசவு ஆகியனவற்றைக் குறிப்பிடலாம். மதுரையிலிருந்து புலம் பெயர்ந்த சௌராஷ்டிர மக்கள் பட்டு நெசவை மேற்கொண்டனர். ஆற்காடு நவாப் குடும்பத்தினர்க்கான பிரத்தியேக அலங்காரத் துணிகளை **(Susis, Gulbadans, Kallidar etc.,)** நெய்து தந்தவர்கள் இவர்களே. தற்போதும் இவர்களின் பட்டு நெசவுப்பணி தொடர்கின்றது. இவர்களால் உருவாக்கப்பட்ட "வாலாஜா டெரிகாட்டன்" இன்று வழக்கத்தில் இல்லை என்றாலும் அப்போதைய தமிழக மக்களால் பெரிதும் விரும்பி அணியப்பட்டது.

பட்டு நெசவிற்கும், முந்தைய தொழில் பிரம்புத் தொழில் ஆகும். ஆரம்பத்தில் பிரம்புக் கூடைகளும் தட்டுகளும் செய்யப்பட்டன. ஆனால் தற்போது அத்தகைய சிறு பொருட்கள் உற்பத்தி நிறுத்தப்பட்டுத் தேநீர், முக்காலி, நாற்காலி, ஷோபா செட், அலங்கார ஊஞ்சல் போன்ற விலையுள்ள பொருட்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. ஆரம்பக் காலத்தில் தமிழகக் காவல் துறையினர் வைத்திருந்த பிரம்புத் தடுப்பு வாலாஜாவில் வடிவமைத்து வழங்கப்பட்டதேயாகும்.

மிருதுவான கம்பளம் **(Pile Carpets)** மற்றும் முரட்டுக் கம்பளங்கள் **(Druggets)** ஆகியவற்றைத் தயாரிப்பதில் உச்சத்திலிருந்த இந்நகரம், மூலப் பொருள் பற்றாக்குறை மற்றும் கூலியாட்கள் கிடைக்காமை ஆகியவற்றால் கம்பளி உற்பத்தி முற்றிலும் வழக்கொழிந்துவிட்டது.

சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான ஸ்ரீ தியாகப் பிரம்மத்தின் பாடல்களை ஏட்டில் எழுதி வைத்த பெரும்பணியைச் செய்தவர் இவரது பிரதம சீடர் வெங்கட்டரமணப் பாகவதர் ஆவார். ஸ்ரீ தியாகராஜரின் முக்திக்குப் பின் வாலாஜா வந்து சேர்ந்த வெங்கட்டரமணப் பாகவதர் இங்கு மடத்தை ஏற்படுத்திச் சங்கீதப் பணியையும் தொடர்ந்தார். இவர் வாழ்ந்த தெருவிற்கு இவரது பெயரே சூட்டப்பட்டுள்ளது.

சமயக்குரவர்கள் நால்வர் போல் சுதந்திரப் போராட்டத்தில் "வாலாஜா நால்வர்" என அழைக்கப்பட்ட திரு.கே.ஆர்.கல்யாணராமய்யர், ஜமதக்னி, சுந்தரவரதன், ஆக்கூர் அனந்தாச்சாரி ஆகிய நால்வரும் விடுதலை வேள்வியை நடத்தியதும் வாலாஜாவில் தான். இவர்கள் பித்துக்குளி முருகதாஸ் அவர்களோடு இணைந்து துவக்கிய தீனபந்து ஆசிரமம் இன்றும் காந்தி வித்யாலாயா மூலம் இலவச உறைவிடக்கல்வியை ஏழை எளியோர்க்கு வழங்கி வருகின்றது.

மஞ்சள் காமாலைக்குப் பச்சிலை வைத்தியம் கொடுத்து குணப்படுத்துவது இந்த ஊரின் சிறப்பானதாகும். இராமகிருஷ்ணன் என்ற ஆசிரியரால் துவக்கப்பட்ட இம்மருத்துவப் பணி அவரது குடும்பத்தாரால் இன்றும் தொடர்கிறது. துவக்கத்தில்




ஞாயிறு மட்டுமே பச்சிலை மருந்து தரப்பட்டன. ஞாயிறன்று பல்லாயிரம் பேர் கூடுவதால் தற்போது வாரத்தின் எல்லா நாட்களிலும் அளிக்கப்பட்டு வருகிறது. இதற்கென நிர்ணயிக்கப்பட்ட தொகை, கட்டணம் ஏதுமில்லை பத்து ரூபாய்க் கொடுத்தாலும் பெற்றுக் கொள்கின்றனர்.

பழங்காலக் கிராமிய நடனங்களில் ஒன்று 'கொக்கேலி கட்டை'. ஐந்தடி கொண்டே உருட்டுக் கட்டையை காலில் கட்டிக் கொண்டு ஆடுவதுதான் இந்த நடனம். பன்னெடுங் காலமாக இன்று வரை இந்தக் கொக்கேலி கட்டை நடனம் இவ்வூர் கலைஞர்களால் ஆடப்பட்டுவருகிறது.

பொதுவாக ஒரு கட்டடம் இரும்பு அல்லது மரத்தைக் கொண்டு கட்டப்படும். ஆனால், ஆற்காடு நவாப் முகமது அலியால் இங்குக் கட்டப்பட்ட மசூதி இவை இரண்டுமில்லாமல் கட்டப்பட்டதாகும். இதில் ஒரே நேரத்தில் 3000 பேர் தொழுகை நடத்த இயலும். மசூதியின் எதிரே உள்ள குளத்தில் மசூதியின் முழுப் பிம்பமும் தெரிகின்றது.

மூஸ்லீம் ஆட்சியாளரால் உருவாக்கப்பட்ட நகரம் என்றாலும் தெருவுக்குத் தெரு ஆலயங்கள் அமைந்துள்ளன. ஆலயமில்லாத தெருவே இந்நகரில் இல்லை. மத நல்லிணக்கத்திற்கு எடுத்துக்காட்டாக இந்நகர மக்கள் விளங்குகின்றனர். இந்துக் குழந்தைகளுக்கு உடல் நலம் சரியில்லை என்றால் மசூதியில் சென்று ஊதிக் கொள்ளுவதும், முஸ்லீம் குழந்தைகளுக்கு அம்மை கண்டுள்ளது என்றால் படவேட்டம்மன் ஆலயத்தில் வைத்துப் பராமரிப்பதும் இங்குச் சர்வ சாதாரணம். இந்து முஸ்லீம் எனப் பாகுபாடில்லாமல் கூட்டாக இணைந்து தொழில் செய்வதும், இந்து விழாக்களுக்கு முஸ்லீம் அன்பர்கள் சேவை புரிவது இங்குப் பாரம்பரியமான விஷயம். பேருந்து நிலையத்திற்கு அருகிலேயே இருக்கும் அரசு நூலகம் அமைந்துள்ள 3000 சதுர அடி பரப்பளவுள்ள இடம் அப்துல் முனாப் சாசிப் ஒரு முஸ்லீம் அன்பரால் 1952ல் தானமாக வழங்கப்பட்டது.

தென்னிந்தியாவில் முதல் இருப்புப் பாதை சென்னை இராயபுரம் முதல் வாலாஜா ரோடு வரை அமைக்கப்பட்டதாகும். 01.07.1856 அன்று ஐந்து பெட்டிகள் கொண்ட நிலக்கரி இன்ஜின் கொண்டு இயக்கப்பட்ட இரயிலில் 300 பேர் பயணம் செய்தனர். தற்போது இரண்டாம் நிலை நகராட்சியாக உள்ள வாலாஜா நகராட்சியின் நூற்றாண்டு விழா 1966ல் அப்போதைய முதல்வர் பேறிஞர் அண்ணா அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

150வது ஆண்டு விழாவை 2016 ல் சில அரசியல் காரணங்களுக்காக மிகவும் எளிமையாக கொண்டாடியது இருக்கிறது இந்நகராட்சி.

# யானைக் காதலன் (பகுதி 4)

இரா. ஜகதீஷ்



போன மாத இதழில் என் வாழ்வில் நான் பார்த்த முதல் யானையான கேசவன் பற்றியும், யானைகள் இந்த உலகிற்கு எவ்வளவு முக்கியம் வாய்ந்தவை என்பது பற்றியும், தமிழ் என்னும் உலகின் தொன்மொழி யானை என்ற உயிரியை எவ்வளவு காதலித்து இருக்கிறது என்பதைப் பற்றியும் பார்த்தோம்.

பாரதிதாசனின் அவளும் நானும் என்ற கவிதையைப் போல, யானையும் நானும் என்ற வகையில் இந்தக் கட்டுரை நீண்டு கொண்டே இருக்கிறது. இது நான்காவது அத்தியாயம், யானை என்ற உலக நிலவாழின் மிகப்பெரிய உயிரியை என் பேனா முனை வாசகர்களுக்கு ஏதோ ஒரு சிறிய தாக்கத்தையாவது விதைக்கும் என்ற நம்பிக்கை தான், தும்பிக்கை பிடித்த என் கையை நகர்த்துகிறது.

யானை காதல் என்றால் நான் யானையுடன் இருப்பது மட்டுமல்ல, இந்த உலகம் யானையுடன் வாழ்வதை அனுபவிப்பது, அதையும் எழுதும்போது தான் இந்த யானைக்கான உலகம் விரியத் தொடங்கும் அப்படி உலகின் யானைகளைப் பற்றியும் இனி என் பேனா பேசத் தொடங்கும்.

கேசவன், யானை என்ற பிம்பத்தை என் கண்முன் காட்டியவன் என் வாழ்வில் இன்னும் ஒரு கேசவன் இருக்கிறான் அவன் கஜராஜன் என் ஆஸ்தான கடவுள் இன்றும் அவனை வணங்கித்தான் எல்லாவற்றையும் தொடங்குகிறேன் இந்தக் கட்டுரை முதற்கொண்டு, வாழ்வியலுக்கு வயுவோம். பார்த்தசாரதி கோவிலிலிருந்த யானைதான் என் வாழ்வின் முதல் யானை என்று கடந்த கட்டுரைகளைப் படித்தவர்களுக்குத் தெரியும் , அவன் பெயர் கேசவன் அவன் எங்கள் தெருக்களில் கம்பீரமாக வந்த போது மொட்டை மாடியிலிருந்து பயம் கலந்த குதூகலத்தோடு வேடிக்கை பார்த்தவன் நான், மாடியில் இருந்து இறங்கி வரப் பயம் தடுத்தது ஒரு நாளும் இரங்கி வந்து தொடவோ, ரசிக்கவோ மனம் விரும்பியதே இல்லை. ஆனால் காதல் இருந்தது அதைப் பயம் மறைத்தது, எல்லாப் பயமும் ஒருநாள் உடையும் அப்படியான நாள் ஒன்று வந்தது.

அம்மா சொன்னர் "எவ்வளவு நாள்தான்டா மேல இருந்தே பாப்ப, இந்தக் காச யானைக்குக் கொடுத்து ஆசீர்வாதம் வாங்கிக்க நல்லா படிப்புவரும்",



இந்தியத்தின் ஊட்டி வளர்ப்பு தானே என் தாயும், "நீயும் வா நா போறன்" என்ற பயத்தின் மொழியோடு அம்மாவின் முந்தானை பிடித்து நடந்து சென்றேன். பெரிய உருவம், ஆம் மாடியிலிருந்து பார்த்ததை விடப் பெரிதாகத் தான் இருந்தது , இன்னும் பயம் கூடியது முன்பை விட இருக்கமாக அம்மாவின் முந்தானையை இருக்கமாகப் பிடித்துக்கொண்டேன்.

"காச கொடுடா" அதட்டினால் அம்மா அந்த நொடி யானையைக் காட்டிலும் அவள் வார்த்தை மிரட்டியது. கைகள் நடுங்கக் காசை நீட்டினேன் தும்பிக்கையால் பிடுங்கி கொண்டு தலையைத் தடவியது கேசவன். பயத்தில் அந்த நொடி உறைந்து தான் இருந்தது. விட்டால் போதுமெனக் குடுகுடுவென மாடியை ஏறினேன். மாடியில் இருந்து மீண்டும் பார்த்தேன் எனக்கு இருந்த எந்த பதட்டமும் கேசவனுக்கு இருந்ததாகத் தெரியவில்லை. ஒன்றும் தெரியாதவனைப் போல அசைந்தாடி கண்ணிலிருந்து மறைந்தான் கேசவன். எனக்கோ ஒலிம்பிக்கில் இந்தியாவிற்குத் தங்கம் வாங்கித் தந்ததைப் போல் ஒரு பெருமை, யானையைக் கிட்ட பார்த்து காசு கொடுத்து ஆசீர்வாதம் வாங்கிடன்ல, இந்த வரிகளைப் படிக்கும் போது பல வளர்ந்த இந்தியக் குழந்தைகளுக்குக் கர்வம் தானாக எட்டிப்பார்க்கும்.

இப்படி ஒரு கேசவன் பூதமாகவே தெரிந்தான் என் வாழ்நாள் முழுக்க அதை மாற்றும் வகையில் யானை என்ற புரிதல் வரும்போது இன்னும் ஒரு கேசவன் பெயர் என் வாழ்வில் அடிபட்டது. அவன் பேரைக் கேட்கும் பொழுது பயம் வரவில்லை. மாறாக அவன் தான் கடவுள் போலும் என்று தோன்றியது. அப்படியே ஒட்டிக்கொண்டான். இன்றும் கடவுளாய் என்னைப் பின்தொடர்கிறான் கேசவன் வாருங்கள் அவன் கதையைப் பார்ப்போம்.

கஜராஜன் குருவாயூர் கேசவன் (1904 - டிசம்பர் 2, 1976) தென் இந்தியாவில், குறிப்பாகக் கேரளாவில், மிகவும் புகழ் பெற்ற மற்றும் மக்களால் போற்றப்பட்ட கேரளத்து குருவாயூர் கிருஷ்ணர் கோயில் யானை.

நான் பிறக்கும் பொழுது இவன் பெயர் கூடக் காற்றில் கரைந்து தான் இருந்தது. யானை என்ற புரிதல் தொடங்கும் பொழுது குருவாயூரில் உள்ள இவன் சிலையையாவது பார்த்து விட வேண்டும் என்ற எண்ணத்தில் தேடி ஓடிய காலமும் உண்டு. இன்று எங்க பூஜை அறை தொடங்கி என் படுக்கை அறையின் கதவிலும் கூட இவனே காட்சி அளிக்கிறான். அப்படி என்ன அதிசயத்தை நிகழ்த்திவிட்டான் கேசவன் என்ற உங்களின் மனவோட்டம் புரிகிறது வாருங்கள்



பார்ப்போம் கேசவன் புகழை.

நீலாம்பூர் நாட்டு ராஜவம்ச குடும்பத்தினர் இந்தக் கேசவன் என்ற பெயருடன் கூடிய யானையை **1916** ஆம் ஆண்டில் குருவாயூர் கோவிலுக்கு நன்கொடையாக அளித்தனர். இதுபோன்று கேரள நாட்டில் கோவில்களுக்கு யானையை நன்கொடையாகக் கொடுப்பது ஒரு வேண்டுகோளை நிறைவேற்றுவதற்காக அளிப்பது பரம்பரையாகக் காணப்படும் ஒரு வழக்கமாகும். நிலம்பூர் பெரிய ராஜாவால், மலபார் சச்சரவிலிருந்து தனது பொருள்கள் மீண்டும் கிடைத்ததற்குக் காணிக்கையாகக் குருவாயூரப்பனுக்குக் கேசவன் நன்கொடையாகத் தரப்பட்டான்.

இப்படி நன்கொடையாகப் பெறப்படும் யானைகள் குருவாயூர் கோவிலில் யானைகளுக்கென்றே ஒரு சரணாலயம் உருவக்காப்பட்டு அங்கே யானைகள் நன்கு பராமரிக்கப்பட்டு வருவதோடல்லாமல், அவை நன்கு வளர்க்கப்பட்டும் பயிற்சிகள் அளிக்கப்பட்டும் வருகின்றன, மேலும் புன்னத்தூர்கோட்டையில் அமைந்த இந்தச் சரணாலயத்தில் தற்பொழுது கூட **64** யானைகள் பராமரிக்கப்பட்டு வருகின்றன என்பது கூடுதல் தகவல்.

கஜராஜன் கேசவன் **3.2** மீட்டர் உயரத்துடன் கம்பீரமான தோற்றம் கொண்டவன். மிகவும் கனிவான, பணிவான யானையாக மட்டும் அல்லாமல், குருவாயூரப்பனிடம் மிகவும் பக்திகொண்டவனாகவும் காணப்பட்டான்.

அத்துடன் தனக்கே உரிமையான சில உயர் பண்புகளையும் பெற்றிருந்தான். குருவாயூரப்பன் திடம்பை ஏந்தி தன் மேல் அமர வருபவர்களுக்கு மட்டுமே கேசவன் தன் முன்னங்கால்களைத் தாழ்த்தி ஏற உதவுவான். ஆலவட்டம், குடை, சௌரி போன்றவற்றை ஏந்தி நிற்போர், பின்னங்கால் துணை கொண்டே ஏற உதவுவான். தனி மனிதனாகத் தன் பாகன் கூட தன் மேல் ஏறி அமர அனுமதித்ததில்லை கேசவன்.

குருவாயூருக்கு வந்த புதிதில் கேசவன் யானை அழகு இல்லாததும், குறும்புத்தனம் கொண்டதும், யானைப்பாகன் ஆணைக்குப் பணியாமல் இருப்பதில் விருப்பமுள்ளதாகவும் இருந்தது. அக்காலத்தில் அதனைப் பயித்தியம் பிடித்த யானை என்றே வழங்கி வந்தனர். அந்தக் கருத்தை எல்லாம் உடைத்து யானைகளில் எல்லாம் சிறந்த யானை கஜராஜனாக மாறினான் கேசவன்.

**1976** டிசம்பர் **2** இல் நவமி அன்று தங்கத்திடம்பு ஏற்றப்பட்ட கேசவன் யானை உடல் நடுக்கம் கண்டது. கால்நடை மருத்துவர்கள் விரைந்து வந்து மருந்து கொடுத்த பின்னரும் எதுவும் உண்ண மறுத்தான் கேசவன். மறுநாள் தசமி அன்றும் நின்றவாறே இருந்தது. தசமி இரவு விளக்கு ஆரம்பித்த மேள சப்தம் கேட்டதும் தண்ணீரைத் தன் துதிக்கையில் ஏந்தி குளித்தது. யானையின் பக்தியை மெச்சும் வகையில், "குருவாயூர் ஏகாதசி" என போற்றப்படும் தலை சிறந்த வழிபாட்டு நாள் அன்று, குருவாயூர் கேசவனின் உயிர், உடலை விட்டுக் கோவில் வளாகத்தில் பிரிந்தது. பக்தர்கள் ஏகாதசி விரதம் அன்று உண்ணாமல் இருப்பது போலவே, அன்றைய நாள் முழுவதும் கேசவன் உணவு எதுவும் உட்கொள்ளவில்லை.

மேலும் மாலை வேளையில் இறக்கும் தறுவாயில் கோவிலின் நடையை நோக்கி தும்பிக்கையை உயர்த்திக்கொண்டு இறைவனிடம் தனது வணக்கத்தைச் சமர்பித்துக் கொண்டு, வணங்கும் பாணியில் தனது உடலைப் புவியில் அர்ப்பணம் செய்துகொண்டே, கேசவனின் உயிர் பிரிந்தது.

இப்படியாக இரண்டு கேசவனும் என்னை ஆட்கொண்டார்கள், இன்னும் இருக்கிறது இருவரின் கதையும் இணைந்து பயணிப்போம் யானைகளோடு. யானை காதல் தொடரும்.

இரா.ஜெகதீஷ்

# பழந்தமிழகத்தின் கடல்வணிக வழிகள்

## முனைவர். ஜோ. பிரின்ஸ்



கடல்வழிகள்

கடல்வழிகளைப் பற்றித் தமிழ் இலக்கியத்தில் குறைவான செய்திகள் கிடைத்துள்ளன. நெய்தல் திணைப் பாடல்களில் மீனவர்களைப் பற்றியும், மீன் சீவும் பாண்சேரிகளின் தலைவர்களைப் பற்றியும் கூறப்பெற்றுள்ளது. அகத்திணைப் பாடல்கள் கிழக்கு, மேற்குக் கடற்கரைகள் பற்றியும் குறிப்பிடுகின்றன. நெய்தல் பாடல்கள் கடல் வாணிகத்தைப் பற்றியோ அல்லது யவனக் கப்பல்களைப் பற்றியோ கூறவில்லை. கடல்வழிகளைப் பற்றி வெளிநாட்டார் குறிப்புகளிலிருந்து செய்திகளைத் தொகுக்கும் நிலையில் அமைந்திருக்கிறது.

பெரிப்ளுஸ் என்ற நூலும், பிளினியின் நூலும், தாலமியின் நூலும் கடல்வழிகள் பற்றிய செய்திகளை விளக்கமாகக் கூறியுள்ளன. அந்நூல்களில் கூறப்பெறும் செய்திகளைக் கொண்டே கடல் பெருவழிகளையும், கடல் பயணத்தையும் பற்றி விளக்கப் படுகின்றது. பிளினியின் நூலில் இந்தியக் கடல்களான அரபிக்கடல், இந்தியப் பெருங்கடல் ஆகியவற்றில் உருவாகும் சூறைக்காற்றுகளைப் பற்றி விளக்கமாக எழுதியுள்ளார். பண்டைக் காலத்தில் யவனக்கடல் மாலுமிகள் இந்தியக் கடல் சுறாமீன்களை; பற்றி மிகவும் அஞ்சினர். சுறாமீன்கள் மிகப்பெரிய கப்பல்களையும் தாக்கும் பலம் கொண்டவை. பார்ஹீத்தில் வடிக்கப்பெற்றுள்ள சிற்பம் ஒன்றில் ஒரு சுறாமீன் பெரும் படகினை விழுங்குவதுபோல சித்தரிக்கப் பெற்றுள்ளது. ‘அகநானூற்றில் மீன்கள் கப்பல்களைத் தாக்குவதுபற்றிக் கூறப்பட்டிருக்கிறது’. பெரிய ஈட்டிகளை எறிந்து சுறாமீன்களைத் துரத்தினர்கள் என்று வெளிநாட்டார் குறிப்புகள் கூறுகின்றன. அக்கடல்வாழ் உயிரினங்கள் சில குதிரைத்தலைகளையும் சில கழுதைத் தலைகளையும் கொண்டிருந்தன. யவனர்கள் இத்தகைய மீன்களைக் கூச்சலிட்டுத் துரத்த முயன்று தோல்வியுற்றனர்.

கி.பி. முதல் நூற்றாண்டிற்கு முன் கடல் பயணம் கரையோரமே நிகழ்ந்து கொண்டிருந்தது. மேற்குக் கடற்கரையில் புறப்பட்ட கப்பல் பருகச்சம் சென்று அங்கிருந்து மெக்ரான் வழியாக ஈரான் கடற்கரை ஓரமே பயணம் செய்தது. பின்னர் பாரசீக வளைகுடாவை அடைந்து எகிப்து நாட்டின் செங்கடலைச் சென்றடைந்தது. ‘அலெக்சாண்டிரியா’




செங்கடலில் சிறந்த துறைமுகமாகவும் விளங்கியது. அந்நகரம் ஆசியா, ஐரோப்பா, ஆப்பிரிக்கா ஆகிய பகுதிகளிலிருந்து வந்த வாணிகர்கள் வாழும் துறைமுகப்பட்டினமாகவும் விளங்கியது.

அலெக்சாண்டிரியா துறைமுகம் ஆரம்பத்தில் அராபியர், சோமாலியர் ஆளுகையில் இருந்தது. ஆனால், அகஸ்டஸ் காலம் முதல் உரோமானியர் ஆளுகைக்குள் வந்தது. உரோமானியர் ஆளுகையில் கீழ் வந்த பின் அலெக்சாண்டிரியாவுக்கு இந்திய வாணிகர்கள் செல்லும் வாய்ப்பினைப் பெற்றனர்.

கி.பி.முதல் நூற்றாண்டில் ஹிப்பாலாஸ் என்ற மாலுமி தென்மேற்குப் பருவக்காற்றினை அறிந்து கப்பல்களை நடுக்கடலில் செலுத்தும் தன்மையினை உருவாக்கினார். அதனால் கடல் ஓரமே கப்பல்களைச் செலுத்தும் முறை மாறி நடுக்கடலில் கப்பல்களைச் செலுத்தும் முறை உருவானது.

ஹிப்பாலாஸ் தென்மேற்குப் பருவக்காற்றின் தன்மையை அறிந்ததால் அக்காற்றிற்கு ‘ஹிப்பாலாஸ்’ என்று யவனர்கள் பெயரிட்டிருந்தனர். கரையோரமே செய்த கடற்பயணத்தினால் இருபத்தொன்பது வாரங்களில் உரோமிலிருந்து இந்தியாவுக்கு வந்து சேர்ந்தனர். ஆனால் தென்மேற்குப் பருவக்காற்றின் இயல்பறிந்த பின் நடுக்கடல் வழியாக மேற்கொண்ட பயணம் பதினாறு வாரங்களில் முடிந்துவிட்டது. யவன வாணிகர்கள் ஜீலை மாதத்தில் பயணத்தைத் தொடங்கி செப்டம்பர் மாதத்தில் செங்கடலை அடைந்தனர். பின்னர் அங்கிருந்து மழைக்காலத்தில் புறப்பட்டு அரபிக்கடல் வழியாக இந்தியாவுக்கு எளிதில் வந்து சேர்ந்தனர்.

பட்டு வழி

சீனர்கள் நான்காயிரம் ஆண்டுகட்கு முன் பட்டுப்புழுவிலிருந்து பட்டு நூலை உருவாக்கக் கற்றுக் கொண்டனர். பட்டு உற்பத்தியின் இரகசியத்தை சீனர்கள் வேறு யாருக்கும் கற்றுத் தரவில்லை. அதனால் யவனர்கள், அராபியர்கள், பாரசீகர்கள் முதலிய நாட்டினர் சீனத்திற்கே சென்று பட்டினை வாங்கிச் சென்றனர். அவர்கள் பட்டு வாங்க சீனாவுக்குச் சென்று வந்த வழி ‘பட்டுப் பெருவழி" என்று அழைக்கப் பெற்றது. அப்பெருவழி மட்டுமின்றி தென்கிழக்காசியக் கடற்கரை, மலேய தீபகற்பம், பர்மா கடற்கரை முதலியவற்றைத் தொட்டுக் கொண்டு கிழக்கிந்தியக் கடற்கரை ஓரமே சென்று தென்னிந்தியாவின் மேற்குக் கரை வழியாக செங்கடலைச் சென்றடைந்த மற்றொரு கடல் பட்டு வழி நிலை பெற்றிருந்தது.

அப்பெருவழிகள் (பட்டு வழிகள்) பட்டு வாணிகத்திற்கு மட்டுமின்றி பண்டைய நாளில் நாடுகளில் ஏற்பட்ட அரசியல் மாற்றங்கள் பற்றிய செய்திகள், ஓலைகள், பிற செய்திகள் முதலியவற்றைக் கொண்டு செல்லும் வழியாகவும் செயல்பட்டன. கடல் வழியாகச் சென்ற கடல் பட்டு வழி வாணிகம் செழிக்கக் காரணமாயிற்று. சீனத்துப் பட்டினை விரும்பும் மேலைநாட்டினருக்கு தமிழ் வாணிகர்கள்



சீனர்களிடமிருந்து பட்டினை வாங்கி விற்றுப் பயனடைந்தனர். சாவகநாட்டு வழியாக சீனத்துப் பட்டு தமிழகத்திற்கு வந்தது. அவ்வழி கடல்வழி உருவாகக் காரணமாயிற்று எனக் கூற முடிகிறது.

## வங்கக் கடல் வழிகள்

சங்க இலக்கியத்தில் காழக நாட்டு வாணிகம் மட்டும் கூறப்பட்டிருக்கிறது. தமிழகம் மேலை நாடுகளுடன் வாணிகத் தொடர்பு கொண்டிருந்ததைப் போலவே கீழை நாடுகளுடனும் கப்பல் வாணிகத் தொடர்பு கொண்டிருந்தது. மணிமேகலையில் கீழ்த்திசைக் கப்பல் வாணிகம் பற்றிய செய்தி காணப்படுகின்றது. வழிகள் பட்டுப் பெருவழியாக உருவாகி கீழை நாடுகளுடன் வங்கக் கடல் வழியாக வாணிகம் நடைபெற்றது.

தென்கிழக்காசிய நாடுகளிலும் கிழக்கிந்தியத் தீவுகளிலும் கி.பி.2 ஆம் நூற்றாண்டு முதலே வாணிகம் செய்தனர். கம்போடியா, சம்பா, சயாம், ஜாவாத் தீவுகள் முதலிய நாடுகளில் கி.பி.2 ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகள் கிடைக்கின்றன. அக்கல்வெட்டுகள் சமஸ்கிருத மொழியிலும், கிரந்த எழுத்திலும் பொறிக்கப் பெற்றுள்ளன. தென்னிந்தியாவிலிருந்து சென்றவர்கள் அக்கல்வெட்டுகளைப் பொறித்திருக்க வேண்டும்.

கிழக்குக் கடற்கரையிலிருந்த கொற்கை, மருங்கூர்ப்பட்டினம், புகார், எயிற்பட்டினம், மாமல்லை, வசவசமுத்திரம் ஆகிய ஊர்களிலிருந்து தென்கிழக்காசிய நாடுகளுக்கும், கிழக்கிந்தியத் தீவுகளுக்கும், ஈழத்திற்கும் கடல் வழியாகவே சென்று வாணிகம் செய்தனர்.

## மாலுமி திசை அறி கருவி

பண்டை நாளில் தமிழ் மாலுமிகள் திசையை அறிவதற்கு ஒரு விலங்கினைப் பயன்படுத்தினர். தேவாங்கு என்றொரு விலங்கு பற்றிய மருத்துவ நம்பிக்கைள் பல உள்ளன. அவ்விலங்கு கடல் மாலுமிகளுக்குத் திசை அறி கருவியாக பயன்பட்டுள்ளது. தேவாங்கு கதிரவன் ஒளியைத் தாங்கிக் கொள்ளும் தன்மையற்றது. அதனால் அவ்விலங்கு கிழக்கு நோக்கியோ, மேற்கு நோக்கியோ அமரும் இயல்புடையதன்று. வடக்கு நோக்கி அமரும் தன்மையுடையது. அவ்விலங்கு ‘வடக்கு நோக்கி’ என்று மலையாளத்தில் பெயரிட்டு அழைக்கப் பெறுகின்றது. கப்பலில் சென்ற பண்டைய மாலுமிகள் திசையை அறிவதற்கு அவ்விலங்கினை ஒரு கருவியாகப் பயன்படுத்தினர் என்பது புலனாகின்றது.

## கடற்கொள்ளையர்

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் ஆகியோர் கடற்கொள்ளைக் காரர்களைத் தாக்கிப் புறமுதுகிட்டு

ஓடச் செய்தனர். 'சேரன் செங்குட்டுவன் கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் என்றே பெயரிட்டு அழைக்கப்பட்டுள்ளான்.அப்பெயர் கடற்கொள்ளையில் ஈடுபட்டிருந்த கடம்பர்களைத் தோற்கடித்துப் பெற்ற வெற்றிச் செய்தியை உறுதிப்படுத்துவதாக அமைந்துள்ளது. மேலும் சேரமன்னர்கள் கடற்கொள்ளைக்காரர்களைத் தோற்கடித்து யவனக் கப்பல்கள் தடையின்றி தமிழகக் கடற்கரைக்கு வந்து செல்ல வழிவகுத்தனர். கடற்கொள்ளைக்காரர்கள் பற்றி வெளிநாட்டார் குறிப்புகளிலும் செய்திகள் உள்ளன. பெரிப்ளுஸ் என்ற நூலிலும், பிளினி, தாலமி ஆகியோரின் நூல்களிலும் மேற்குக் கடற்கரையில் கடற்கொள்ளைக்காரர் மிகுதியான தொல்லை கொடுத்தனர் என்ற செய்தி காணப்படுகின்றது.

கொங்கணப் பகுதியில், கடற்கொள்ளைக்காரர்கள் மிகுந்திருந்தனர். ஆகையால் யவனர்கள் பல கப்பல்களில் வந்தபோது ஒவ்வொரு கப்பலிலும் யவன வீரர்களைக் கொண்டு வந்தனர். தென்னிந்திய மன்னர்கள் யவனர்களின் இச்செயல்பாட்டில் விருப்பமில்லாததால் யவனக்கப்பல்களில் ஒன்று மட்டுமே ஒரு பயணத்தின் போது அனுமதிக்கப்பெறும் என்று ஆணையிட்டனர். ஒரே சமயத்தில் ஒன்றிற்கு மேற்பட்ட கப்பல்களை அனுமதிக்கவில்லை. அதனால் யவனர்கள் இருநூறு அல்லது முந்நூறு டன் எடை கொள்ளக்கூடிய பெரிய கப்பல்களைக் கட்டத் தொடங்கினார்கள்.

கப்பல்

சங்க இலக்கியத்திலும் காவியங்களிலும் கப்பல் வகைகள் கூறப்பெறுகின்றன. ஆனால் கப்பல் கட்டும் தொழில் பற்றிய செய்தி கூறப்படவில்லை. பண்டைத் தமிழகத்தில் கப்பல் கட்டும் தொழில் நிலைபெற்றிருந்த தன்மை பற்றி வெளிநாட்டார் குறிப்புகளில் செய்திகள் கிடைத்துள்ளன. கப்பல்களைப் பற்றியும், தோணிகளைப் பற்றியும், தமிழ் இலக்கியத்தில் கூறப்பெற்றுள்ளது. 'நீரில் மிதக்கும் கலங்களுக்கு நாவாய், வங்கம், பஃறி, அம்பி, திமில், தோணி போன்று பல பெயரிட்டுள்ளனர்'. அவற்றில் பஃறி கடற்கரை ஓரமாகச் செல்லும் தன்மையுடையவை. வங்கம், நாவாய் ஆகியவை நெடுந்தொலைவுக் கடற்செலவுக்குப் பயன்படுத்தப் பெற்றன.

தமிழ் இலக்கியத்தில் 'யவனர் தந்த வினைமான் நன்கலம் பொன்னொடு வந்து கறியோடு பெயரும்' என்று கூறப்பெற்றுள்ளது. தமிழகக் கடற்கரைக்கு யவனக் கப்பல்கள் பொற்காசுகளுடன் வந்து மிளகினை ஏற்றிச் செல்லும் என்று பொருள் கொள்வின் தமிழர்கள் தங்கள் பண்டங்களை யவனக்கப்பல்கள் மூலமே ஏற்றியனுப்பினர் என்று கருத முடிகிறது.

வெளிநாட்டார் குறிப்புகளிலும் பண்டைத் தமிழ்க் கப்பல்களைப் பற்றிய குறிப்புகள் கிடைத்துள்ளன. அத்துறையில் யவனர்களுக்கும், அராபியர்களுக்குமிடையில் வேறுபாடுகள் இருந்துள்ளன. யவனர்கள் கப்பல் கட்டும் போது பலகைகளில் துளையிட்டுப் பொருந்தாணிகளை அடித்து இணைத்துள்ளனர். ஆனால் அரேபியர்கள் பலகைகளை மெழுகினாலும், தென்னை அல்லது பனை நாறினாலும் இணைத்துக் கப்பல்களை உருவாக்கியுள்ளனர். இந்தியக் கப்பல்களும் அராபியக் கப்பல்களைப் போலவே கட்டப்பெற்றன. இதனை வலியுறுத்தும் சான்றுகள் பார்ஹீத் தூபியிலிருந்து கண்டெடுக்கப் பெற்றுள்ளன. ஆனால் இந்தியாவில் வேறு முறையும் பயன்பாட்டிலிருந்தமை வலியுறுத்தப் பெறுகின்றது. பண்டை நாளில் அம்முறைப்படி பலகைகளில் முனைப்பகுதிகள் ஒன்றுடன் ஒன்று பொருத்தி மர ஆணிகளில் இணைக்கப்பெற்ற கப்பல்களை உருவாக்கினர்.

பெரிப்ளுஸ் என்ற நூலில் 'கொடும்பா', 'திரப்பகா' முதலிய கப்பல்கள் பருகச்சத்திலிருந்து கடல்வழியே செலுத்தப்பெற்ற செய்தி கூறப்பட்டிருக்கின்றது. 'கொடும்பா' என்பது தற்காலத்திய 'கொடியா' என்று அறிஞர்களால் கருதப்பெறுகின்றது. அக்கப்பல் இருநூறு டன் எடையுள்ள பொருட்களை ஏற்றிச் சென்றுள்ளது. அதே நூலில் 'சங்காரா' என்ற மற்றொரு கப்பலைப் பற்றிய செய்தி காணப்படுகின்றது. அந்நூலில் 'கொலந்தியா', 'போண்டா' என்ற கப்பல் வகைகளும் கூறப்பெறுகின்றது. முதலில் கூறப்பெற்ற சங்காரா என்பது சங்கடம் என்பதன் திரிபு என்று கொள்ளப் பெறுகின்றது. இச்சான்றுகளின் மூலம் பல்வேறு பெயர்கள் கொண்ட கப்பல்கள் இருந்துள்ளன என்ற உண்மை தெளிவாகிறது.

சங்ககால கலங்கரை விளக்கம்

கடல் வழியாகப் பயணம் செய்பவர்கள் இரவு நேரத்தில் கடற்கரை நகரங்களின் இருப்பிடத்தை எளிதில் அறிந்து கொள்ள ஒளிவிளக்கினை வைத்து அறிந்து கொள்ளுகின்றனர். அதுபோலவே பண்டை நாளில் உயர்ந்த மாடங்களைக் கட்டி அதன்மீது கட்டைகளைத் தீயிட்டு வெளிச்சத்தை உண்டாக்கினர். அவ்வெளிச்சத்தினை 'மாடவொள்ளெரி' என்று சங்க இலக்கியம் குறிப்பிட்டுள்ளது.

'கோடுயர் திணிமணல் அகன்றுறை நீகான்
மாடவொள்ளெரி மருங்கறிந்து ஒய்யா

கலங்கரை விளக்கம் பற்றியும் கூறப்பெற்றிருக்கின்றது.

'வானம் ஊன்றிய மதலை போல
ஏணி சாத்திய வேற்றருஞ் சென்னி
விண்பொர நிவந்த வேயா மாடத்து



இரவின் மாட்டிய இலங்குசுடர் ஞெகிழி
உரவுநீர் அழுவத்து ஓடுகலம் கரையும் துறை'

கலங்கரை விளக்கம் மிக உயரமாகக் கட்டப் பெற்றிருந்த செய்தி அப்பாட்டடிகளால் விளங்குகின்றது. மாடத்தின் உச்சியில் ஏறி தீமூட்டுவதற்கு ஏணிப்படிகள் இருந்துள்ளன. சிலப்பதிகாரம் கலங்கரை விளக்கம் என்று கூறும். மாமல்லபுரத்தில் இராமாநுசர் மண்டபத்தின் மீதுள்ள கட்டடம் கலங்கரை விளக்கமாகலாம் என்பர். எனவே, பண்டைக் காலத்தில் கடல் வழியாக வரும் வாணிகர்களுக்கு இரவு நேரங்களில் கடற்கரையை அறிந்து கொள்ள தீமூட்டி ஏற்படும் வெளிச்சத்தினை உண்டாக்கியுள்ளனர் என்பதை அறிய முடிகின்றது.

# மரபு முறைப்படி கேப்பை களி
## – கோவிந்தபாடி சண்முகம்

சோர்வை போக்கும் கேப்பை களி(அ)ராகி களி மரபு முறை படி செய்வது எப்படி?



நண்பர் கோவிந்தபாடி சண்முகம் அவர்களது அழைப்பை ஏற்று அவர்களது இல்லம் சென்று இருந்தோம், எங்களது வேண்டுகோளுக்கு இணங்க அவர்களது பாட்டி கேப்பை களி செய்து கொடுத்தார்கள் சுவையோ அருமை , மண் பானையில் களி கிண்டுவது தனிக்கலை.

இரண்டு குச்சிகளை வைத்து நாம் பானையை உடைத்து விடுவோம் அவர்கள் மிக நேர்த்தியாக விறகு அடுப்பில் சமைத்தது அருமை.

தேவையானவை:

ராகி மாவு - 1 கப்,
சாதம் - 1/2 கப்,
தண்ணீர் - 2 கப்,
உப்பு - தேவையான அளவு,
நெய் - தேவையான அளவு.



**செய்முறை:**

ஒரு பானை அல்லது பாத்திரத்தில் நீரை கொதிக்க வைத்து அதில் உப்பை சேர்க்கவும்,
பின்னர் சாதம் மற்றும் தேவையான அளவு நெய்யை சேர்க்கவும்,

அதன் பின்,ராகி மாவை அதனுடன் சேர்த்து நன்றாக இறுகும் வரை வேக விட்டு பிறகு கட்டி கட்டாமல் கிண்டி விடவும்

சூடு ஆறிய பின்பு உடல் சோர்வை போக்கும் கேப்பை களி(அ)ராகி களி தயார்,

இதனை புளி குழம்பு மற்றும் கருவாட்டு குழம்புடன் வைத்து சாப்பிடலாம்.

**நன்மைகள்:**

எடையை குறைக்க உதவுகிறது, லும்புகளை வலுவாக்குகிறது, சர்க்கரை நோயாளிகளின் சர்க்கரை அளவை கட்டுப்படுத்த உதவுகிறது, கொழுப்பை குறைக்கிறது, இரத்த அலுத்தத்தை கட்டுபடுத்துகிறது. உடல் ஆரோக்கியம் காக்க பாரம்பரிய உணவு வகைகளை உண்போம்..

# சாத்தனூர் கல்மரம்
## –புவியியலாளர். சிங்கநெஞ்சம் சம்பந்தம்



பெரம்பலூர் மாவட்டத்தின் சிறப்புகளுள் ஒன்றான சாத்தனூர் கிராமத்தில் உள்ள கல்மரத்தை முதன் முதலில் கண்டறிந்து உலகிற்கு தெரிவித்த ஐயா எம்.எஸ்.கிருஷ்ணன் அவர்களின் நினைவு தினத்தை முன்னிட்டு கல்மர பூங்காவில் உள்ள அவரது உருவப்படத்திற்கு சிறார்கள், சாத்தனூர் மற்றும் புதிய பயண நண்பர்கள் மலர் தூவி மரியாதை செய்தனர்.

கல்மர பூங்காவிற்கு வரும் சுற்றுலாப் பயணிகளுக்குத் தேவையான அடிப்படை வசதிகளை மேம்படுத்துதல், அருங்காட்சியகம் மற்றும் பயணியர் மாளிகையை பயன்பாட்டிற்கு கொண்டு வருதல், கல்மர பூங்காவின் சிறப்புகளை அனைவருக்கும் கொண்டு செல்லுதல், உள்ளிட்ட கோரிக்கைகளை முன்வைத்து இந்நிகழ்ச்சி நடத்தப்பட்டது.

சாத்தனூர் கல்மரப் பூங்காவில் கிராம மக்களும் இளைஞர்களும், திரு எம்.எஸ். கிருஷ்ணன் அவர்களுக்கு மலரஞ்சலி செலுத்தும் படங்களையும், கல் மரம் பற்றிய துண்டறிக்கைகளை அச்சிட்டு பார்வையாளர்களுக்கு வழங்கும் காட்சியையும் கண்டு, உதவித் தலைமை இயக்குனர் (Deputy Director General) திரு A.Kundu அவர்கள் மிகவும் மகிழ்ச்சி அடைந்தார். கிராம மக்களை வெகுவாகப் பாராட்டினார்.

அங்குள்ள அருங்காட்சியகத்தை விரைவில் செயல்பாட்டிற்குக் கொண்டுவர வேண்டும் என்றும், திருவக்கரையில், கல்மரங்கள் கிடைக்கும் இடங்களில் செம்மண் குவாரிகளை இனி அனுமதிக்கக் கூடாது என்றும் கேட்டுக் கொண்டேன். ஆவன செய்வதாக சொல்லியிருக்கிறார்.

சரி, சாத்தனூர் கல்மரங்கள் பின்வரும் கட்டுரையில் காண்போம்.

"நீ கல்லாகப் போகக் கடவாய்', தவறு செய்த (?) மனைவியை சபித்தார் முனிவர். உடனே முனிவரின் மனைவி கல்லாக மாறிவிட்டார். பின்னர் இராமர் காலடி பட்டுக் கல்லாக இருந்த அகலிகை மீண்டும் பெண்ணாக மாறினாள். இது இதிகாசக் கதை. கற்பனைக் கதைதான். உண்மையாக இருக்க வாய்ப்பு இல்லை. ஆனால் காலத்தின் கோலத்தால் மரங்கள் கல்லான நிகழ்வுகள் புவியியல் வரலாற்றில் பூமியின் பல பகுதிகளில் பல்வேறு காலங்களில் நிகழ்ந்திருக்கின்றன. அப்படிக் கல்லாக மாறிய மரங்கள்



தமிழ்நாட்டில் "கல்மரங்கள்" (Fossil Wood) என்றே அழைக்கப்படுகின்றன. நம் நாட்டில் கல்மரங்கள் அதிகமாக உள்ள மாநிலம் நம் தமிழ்நாடுதான்.

சரி , மரம் எப்படிக் கல்லாக மாறுகிறது ? சாதரணமாக மரம் மண்ணில் புதையுண்டு போகும் போது, மண்ணில் உள்ள நுண்ணுயிரிகளால் அவை மட்கிப் போகும் வாய்ப்புகளே அதிகம். மாறாக, அந்த மரம் புதையுண்ட இடத்தில் மேலும் மேலும் படிவங்கள் படியும் போது அதனால் ஏற்படும் அழுத்தம் மற்றும் வெப்பம் காரணமாக மரம் தகன நிலைக்கு உட்பட்டு குமைந்துபோய் கரியாக மாறக் கூடும். நிலக்கரி, பழுப்பு நிலக்கரிப் படிவங்கள் இப்படித்தான் உருவாகியுள்ளன.

இதனை CARBONAISATION அல்லது கரியாக மாறுதல் எனக் குறிப்பிடலாம். மூன்றாவதாக மண்ணில் புதைந்த மரம் மட்கிப் போகும் முன்னால் அந்த மரத்திலுள்ள செல்களின் இடைவெளிகளிலும், செல் அடுக்குகளின் இடைவெளிகளிலும், நிலநீர் புகுந்து விடுகிறது. அந்த நீரில் கரைந்துள்ள சிலிகா அந்த இடைவெளிகளை ஆக்கிரமித்து தாவரப் பொருளான செல்லுலோசை இடமாற்றம் செய்து விடுகிறது.

இந்த நிகழ்வின் போது மரத்தின் அமைப்பு உருக்குலையாமல் அப்படியே காப்பாற்றப் படுகிறது. மரம் கல்லாக சமையும் இந்நிகழ்வு "PETRIFICATION" (PETRA MEANS ROCK) என்று அழைக்கப்படுகிறது. நிலநீரில் கரைந்துள்ள கனிமங்களின் தன்மைக்கேற்ப கல் மரத்தின் நிறம் மாறுபடுகிறது. சாத்தனூர் கல் மரம் சிலிகாவால் ஆனதால் இது பழுப்பு நிறத்தில் உள்ளது.

சாத்தனூர், அரியலூர் படுகையில் அமைந்துள்ளது. அரியலூர் படுகையிலுள்ள படிவப்பாறைகளில் பல்வேறு வகைப்பட்ட தொல்லுயிர் எச்சங்கள் (FOSSILS) ஏராளமான அளவில் கிடைக்கின்றன. இவற்றில் மிகப் பெருபாலானவை கடல்வாழ் உயிரினங்களின் எச்சங்களே ஆகும். இதன் வாயிலாக, தற்போது இப்பகுதிக்கு நூறு கி.மீ. கிழக்கில் உள்ள கடல், சுமார் 12 கோடி ஆண்டுகளுக்கு முன் இப்பகுதியில் இருந்திருக்கிறது என அறிய முடிகிறது கல்மரம் உள்ளிட்ட பலவகையான தொல்லுயிர் எச்சங்கள் அரியலூர், விருதாச்சலம், புதுச்சேரி, திருப்பெரும்புதூர், சிவகங்கை போன்ற பகுதிகளில் நெடுங்காலமாகவே கிடைத்து வருகின்றன. நம் முன்னோர்கள் நிச்சயமாக இவற்றைக் கண்டிருப்பார்கள். ஆனால் இவற்றைப் பற்றியக் குறிப்புகள் நமக்குக் கிடைக்கவில்லை.

அரியலூர் மாவட்டத்தில் வாரணவாசி என்று ஒரு கிராமம். வாரணம் என்றால் யானை; சோழ மன்னர்களின் யானைப்படை இங்கேதான் இருந்தது; அதனால்தான் இந்தப் பெயர் என்று சிலர் கருதுகிறார்கள் . மாறாக, வாரணம் என்றால் கடல்; கடலில் வாசம் செய்யும் உயிரினங்களின் படிமங்கள் இங்கே உள்ளதால் இது வாரணவாசி என்று அழைக்கப்படுகிறது என்பாரும் உளர். இதைத் தவிர இலக்கியங்களிலோ அல்லது வரலாற்று செய்திகளிலோ தொல்லுயிர் எச்சங்கள் பற்றிய குறிப்புகள் எதுவும் நமக்குக் கிடைக்கவில்லை.




1840 ஆம் ஆண்டி வெளிவந்த **MADRAS JOURNAL OF LITERATURE AND SCIENCE (Vol: 12)** எனும் இதழில், **'Observations on the fossilised beds near Pondicherry and the district of South Arcot'** எனும் தலைப்பில் **C.T, Kaye** எனும் அறிஞர் எழுதியுள்ள கட்டுரையில் தன்னிடம் திருச்சி பகுதியிலிருந்து கிடைத்த கல்மரத்துண்டு ஒன்று இருப்பதாக மகிழ்சசியோடு குறிப்பிடுகிறார். இதுதான் இந்தப் பகுதியில் கிடைக்கும் கல்மரங்கள் பற்றிய முதல் பதிவு.

இந்திய புவியியல் துறை **1851** ஆம் ஆண்டு துவங்கப்பட்டாலும் ஏழு ஆண்டுகள் கழித்துதான் தமிழகத்தில் முறையான புவியியல் ஆய்வுகள் துவங்கின. தொல்லுயிர் எச்சங்கள் அறியப்பட்ட பகுதிகளான புதுச்சேரி, விருதாச்சலம், அரியலூர் போன்ற பகுதிகளில் **Henry Francis Blanford** அவர்களின் தலைமையின் கீழ் பணிகள் மேற்கொள்ளப்பட்டன. ப்ளான்ஃ போர்ட் **(BLANFORD-1862)** மற்றும் இராபர்ட் ப்ரூஸ் ஃபுட் **( ROBERT BRUCE FOOTE-1873)** ஆகியோர் இங்கே ஆய்வுகள் நடத்தி, இங்குள்ளப் படிவப் பாறைகள் பற்றியும் அவற்றில் பொதிந்துள்ள பழமையான தொல்லுயிர் எச்சங்கள் பற்றியும் உலகிற்கு எடுத்துரைத்தனர். அன்று முதல் அரியலூர் பகுதி **"PARADISE OF PALAEONTOLOGISTS"** என்றே அழைக்கப்படுகிறது.

இவர்களது ஆய்வறிக்கை இந்திய புவியியல் ஆய்வுத்துறையின் நினைவேடுகளில் **(Memoirs of Geological Survey of India , Vol. IV 1862)** வெளியிடப்பட்டுள்ளது. இந்த அறிக்கையில், சரடமங்கலம், கருடமங்கலம், ஆனை ப்பாடி போன்ற பகுதிகளில் கல்மரத்துண்டுகள் கிடைப்பதாகக் குறிப்பிடும் **Blandford,** மழவை பகுதியில் சுமார் எட்டைரை அடி நீள கல்மரத்துண்டு ஒன்றைக் கண்டதாகவும் ஆனால் இது சுமார் **25** அடி நீளமும் மூன்றடி விட்டமும் கொண்ட கல்மரத்தின் எஞ்சிய பகுதியே என்றும் எழுதியிருக்கிறார். தொடர்ந்து, வேறொரு பகுதியில் சுமார் **6** அடி நீளமுள்ள கல்மரம் ஒன்றினைக் கண்டதாகவும் இவர் பதிவுசெய்துள்ளார். இவர் குறிப்பிடும் இந்த **6** அடி நீளமுள்ள மரம் எங்கே உள்ளது என்று தெரியவில்லை.

இந்திய புவியியல் ஆய்வுத்துறைக்கு தலைமையேற்ற முதல் இந்தியர் எனும் பெருமை பெற்ற எம். எஸ். கிருஷ்ணன் தனது **Geology of India and Burma (1942)** எனும் நூலில் அரியலூருக்கு பத்து கி.மீ. மேற்கேயுள்ள சாத்தனூர் எனும் கிராமத்திற்கு **7** கிமீ. வடக்கே ஓடைப்படுகை ஒன்றில் தான் கண்டுபிடித்த கல்மரம் **86** அடி நீளமும் **56** அங்குல விட்டமும் கொண்டிருந்ததாகக் குறிப்பிடுகிறார். கருடமங்கலம் கிராமத்திற்கு தென்கிழக்கே நிறைய கல்மரத்துண்டுகள் கிடைப்பதாக அவர் பதிவு செய்திருக்கிறார்.

சாத்தனூர் கிராமத்தின் அருகே உள்ள வரகூர், ஆனை ப்பாடி, அழுந்தளையூர், சாரதாமங்கலம் போன்ற கிராமங்களின் அருகே உள்ள ஓடைப் படுகைகளில் சில மீ. நீளமுள்ள கல் மரங்கள் கண்டுபிடிக்கப்பட்டாலும் தற்போது சாத்தனூர் அருகே உள்ள **18** மீ. நீளமுள்ள கல்மரம்தான் இந்தப் பகுதியில் கண்டுபிடிக்கப்பட்ட மிக நீளமான, மிகப் பெரிய கல்மரம் ஆகும். அருகே உள்ள ஆனைப்பாடி ஓடைப் படுகைகளில் காணப் படும் 'அம்மோனைட்' எனப்படும் கடல் வாழ் உயிரினத்தின் தொல்லுயிர் எச்சங்கள் , சுமார் **12** கோடி ஆண்டுகளுக்கு முற்பட்ட கிரிடேஷியஸ் காலத்தை சேர்ந்தவை. (இவைகளில்

சில கார் சக்கரம் அளவிற்கு பெரிதானவை) எனவே இந்தப் பகுதி சுமார் 12 கோடி ஆண்டுகளுக்கு முன் கடலின் கீழ் இருந்தது என்பது புலனாகிறது. ஆற்றில் அடித்து வரப்பட்ட பெரிய அடிமரம் கடலில் சேர்ந்து, மேலே மேலே படிந்த படிவங்களின் அடியில் சிக்கி கல்லாக சமைந்தது (PETRIFICATION) என்பது தெளிவு. மணல் பாறைகளில் பதிந்து பூமிக்கு அடியில் இருந்த சாத்தனூர் கல்மரம், ஓடைகளில் ஓடிவரும் தண்ணீரால் மேலேயுள்ள மண் அரிக்கப்பட்டு, அதனால் வெளிப்பட்டிருக்கிறது. ஆய்வின் போது கிடைத்த தடையங்களின் அடிப்படையில், இந்த அடிமரம் சுமார் 26 மீ. இருந்திதிருக்க வேண்டும் என்றும், ஓடை நீரால் அடித்த் செல்லப்பட்டது போக எஞ்சியுள்ள 18 மீ. பகுதியே தற்போது நாம் பார்ப்பது. என்றும் தெரிய வருகிறது. இந்தக் கல்மரம் ஜிம்னோஸ்பேர்ம் (GYMNOSPERM) எனப்படும் "பூக்காத-கனிதரா' தாவரங்கள் பிரிவில் "கோனிஃபர்" (CONIFER) எனப்படும் கூம்புடை பிரிவை சார்ந்தது. 12 கோடி ஆண்டுகளுக்கு முன் 'கிரீடேஷியஸ்' காலகட்டத்தில் இவ்வகைத் தாவரங்களே பூமியில் பெருகி இருந்தன. பின்னர் 'ஆஞ்சியோஸ்பேர்ம்' எனப்படும் பூக்கும் / கனிதரும் மரங்கள் தோன்றின.

தற்போது சாத்தனூர் - அரியலூர் பகுதிகளில் கடலும் இல்லை ,பெருங்காடுகளும் இல்லை. இப்பகுதி இன்றைக்கு கடலிலிருந்து 100 கி.மீ. மேற்கே தள்ளியுள்ளது. ஆனால் 12 கோடி ஆண்டுகளுக்கு முற்பட்ட 'கிரீடேஷியஸ்' காலகட்டத்தில் இப்பகுதி கடலின் கீழ் இருந்தது என்பதை இங்கே கிடைக்கும் கடல்வாழ் உயிரினங்களின் தொல்லுயிர் எச்சங்கள் (MARINE FOSSILS) உறுதி செய்கின்றன. அன்றைய கடற்கரையை அல்லது சற்று தள்ளியோ இருந்த நிலப்பகுதியில் 60-70 அடி உயரமுள்ள மரங்கள் இருதிருக்க வேண்டும். அந்த மரங்கள் ஆறுகளால் அடித்து வரப் பட்டு, கடலை அடைந்து, கடலுக்கு அடியில் படிந்த படிவங்களோடு சேர்ந்து படிந்து, கல்லாக சமைந்திருக்க வேண்டும். பிற்காலத்தில் புவியியல் மாற்றங்களால் கடல் பின்னே செல்ல தற்போது இந்தக் கல் மரங்களும் ஏனைய தொல்லுயிர் எச்சங்களும், நிலப் பகுதியில் புதைந்து கிடக்கின்றன. ஆறுகளிலும் ஓடைகளிலும் மண் அரித்து அடித்து செல்லப் படும்போது, இவை வெளிப்படுகின்றன

கடந்த 2017 ஆம் ஆண்டு, சாத்தனூரில் இருந்து சுமார் 17 கி.மீ. தூரத்தில், திருச்சி மாவட்டம், லால்குடி தாலுக்காவில் தாப்பாய் கிராமத்திற்கு வடகிழக்கே (வரகுப்பை கிராமத்திற்கு தெற்கே), 1.24 மீ. நீளமும் 80 செ.மீ. விட்டமும் கொண்ட கல்மரம் ஒன்றை இந்திய புவியியல் ஆய்வுத்துறையைச் சேர்ந்த புவியியலாளர்கள் கண்டு பிடித்திருக்கிறார்கள். இந்தப் பகுதி அரியலூரிலிருந்து 32 கி.மீ. தூரத்திலும், பெரம்பலூரிலிருந்து 38 கி.மீ. தூரத்திலும் உள்ளது. இவையனைத்தும் 12 கோடி ஆண்டுகளுக்கு முன், கிரிடேஷியஸ் காலத்தில் வாழ்ந்த கனிதரா/ பூக்காத தாவர வகையை சார்ந்த CONIFER MARANGAL குறிப்பிடத்தக்கது.

அரியலூரைச் சுற்றியுள்ள சாத்தனூர், ஆனைப்பாடி வரகூர் ஆகிய இடங்களில் மட்டுமின்றி, விழுப்புரம் மாவட்டம் திருவக்கரை, கடலூர் மாவட்டம் நெய்வேலி, புதுவை காலாப்பட்டு மற்றும் விருதாச்சலம் பாரூர் ஆகிய இடங்களிலும் கல் மரங்கள் கிடைக்கின்றன. இராஜஸ்தான் மாநிலம் பொக்ரேன் பகுதியிலும் கல்மரங்கள் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. உலக அளவில் அரிசோனா கல்மரக் காடுகள் மிகவும் புகழ் பெற்றவை.

சாத்தூர் கல் மரத்தின் சிறப்பு மற்றும் முக்கியத்துவம் கருதி, இந்திய புவியியல் ஆய்வுத் துறை இதற்குக் கல்மரப் பூங்கா (National Fossil Wood Park) எனப் பெயரிட்டு, தேசிய நினைவுச் சின்னமாக அறிவித்துள்ளது. இந்த இடம் வேலியிட்டு பாதுகாக்கப் பட்டு வருகிறது. ஓடை அரிப்பால் வெளிப்பட்ட இந்தக் கல்மரம், எதிர் காலத்தில் ஓடை வெள்ளத்தினால் அகற்றப்பட்டு விடக்கூடாது என்பதற்காக, செயற்கைக் கால்வாய் அமைத்து ஓடை திருப்பி விடப்பட்டுள்ளது. கல்மரம் பற்றிய புவியியல் குறிப்பு ஒன்றும் இத்துறையினரின் அறிவிப்புப் பலகையில் காணப்படுகிறது. பாதுகாப்பிற்காக பணியாள் ஒருவரும் இருக்கிறார்.

சென்னை - திருச்சி நெடுஞ்சாலையில் (N.H. 45), பெரம்பலூரில் இருந்து, ஆறு கி.மீ. தெற்கே சிறுவாச்சூர் எனும் ஊர் உள்ளது. அங்கிருந்து கிழக்கே செல்லும் சாலையில் 14 கி.மீ. பயணித்தால் சாத்தனூரை அடையலாம். அண்மைக்காலத்தில் சாத்தனூர் கல் மரத்தின் சிறப்பு பற்றி அறிந்த தமிழக அரசின் சுற்றுலா துறை , சிறுவாச்சூர்- சாத்தனூர் சாலையை செப்பனிடும் பணியை மேற்கொண்டது. சாத்தனூரில் கல்மரத்திற்கு அருகே ஓய்வு விடுதி ஒன்றும் கட்டப் பட்டது.

பத்து கோடி ஆண்டுகள் பழமையான கல்மரத்தைப் பாதுகாத்துவரும் இந்திய புவியியல் ஆய்வுத் துறையின் பணி பாராட்டிற்குரியது. உலகின் பல பகுதிகளிலும் உள்ள புவிஅறிவியல் அருங்காட்சியகங்களை, அரியலூர் பகுதியில் கிடைத்த தொல்லுயிர் எச்சங்கள் அலங்கரிக்கின்றன. கல்மரங்கள் மிக அரிதாக பூமியின் சில பகுதிகளில் மட்டுமே கிடைக்கின்றன. இவை பூமியின் வரலாற்றுப் புத்தகத்தின் ஏடுகள். இவற்றை முறையாக பாதுகாக்க வேண்டியது நமது கடமை.

# அர்மாமலை ரகசியம்

## —இராசு. சரவணன் இராஜா, வேலூர்

அரும்பாவி மலை (அர்மாமலை) என்ற சமணர்கள் வாழ்விடம் பேரணம்பட்டு, பழைய திருப்பத்தூர் வாணியம்பாடி சாலையில்,தென்னம்பட்டுக் கிராமத்தைக் கடந்த பின் (15 கி.மி) ஊர் எல்லையில் இருந்து, சாலை என்று ஏதுமில்லாத, காய்ந்த வாய்க்கால் வழியாக 2 கி.மி,நடந்தால் இந்த மலைக் குகை தெரிகின்றன.1960ல் கண்டறியப்பட்டுள்ளது.

எல்லாச் சமணத் தடங்களைப் போல் இங்கும் படிகள் ஏறிச் செல்ல வசதியாகச் செதுக்கப்பட்டுள்ளன. சுமார் 50 படிகள் கடந்தால், மரங்களின் பின்னால் மறைந்திருக்கும் இயற்கையாக அமைந்துள்ள பிரம்மாண்ட குகை. 80 மீட்டர் நீளம், 10 மீட்டர் அகலம், 3 மீட்டர் உயரம். இன்று ஆட்டுப் பட்டியாக உள்ள இந்த இடம்,8ம் நூற்றாண்டில் சமணர்கள் வாழ்ந்து இருந்தனர்.மாணவர்கள் அங்கே இருந்தனர் என்பதற்குக் கல்வெட்டு ஆதாரங்கள் உள்ளன.

பல்லவர் காலக் குடவரைகளில் இருபுறமும் உள்ள துவாரபாலகர் சிற்பங்கள் இங்கே உடைக்கப்பட்ட நிலையில் சிதறிக் கிடந்தன, (தேடிச் சேர்த்துப் புகைப்படம் எடுத்தேன்)இங்குள்ள சிறப்பு,குகை



விதானத்தில் தீட்டப்பட்டுள்ள சித்திரங்கள் தான்.

சிவப்பு, பச்சை,நீலம்,மஞ்சள், கருப்பு, வெண்மை வர்ணங்களில்,அன்னம், குளத்தில் தாமரைகள்,நீர் மறைந்திருக்கும் இலைகள், யானை,குதிரை மேல் ஆண், பெண் சித்திரங்கள் ,சிதைவுற்று, வர்ணம் மங்காமல் கண்களைக் கவர்கின்றன.

அர்மாமலை சித்திரகாரர்கள், பாறை விதானத்தில் எப்படி வரைந்தனர் என்பதைத் தெரிந்து கொள்வோம். முதலில், பாறை சுவரை சமமாகச் செய்து கொண்டார்கள், அதன் பின் மண்ணும், சுண்ணாம்பும் சேர்த்து சுவர் மேல் பூசினார்கள், பொளிந்த பாறை மேல் காரை நன்றாகப் பிடித்துக் கொண்டது, பிறகு அதைத் தேய்த்துத் தேய்த்து வழுவழுப்பாக்கி,அதன் மேல் வர்ணம் குழைத்துச் சித்திரங்கள் வரைந்துள்ளார்.

இத்தகைய அழியா வர்ணத்தின் இரகசியம் என்ன? இன்றைய துணிகளிலும்,காகிதத்தில் அச்சடிக்கும் வர்ணம் மட்டும் மங்கிவிடுகின்றதே,இந்த குகை ஓவியங்கள் மங்காத மர்மம் என்ன?

பச்சிலைகளையோ, கிழங்குகளையோ,



அல்லது வேறு இரசாயன சேர்க்கையினாலோ செய்யப்பட்ட வர்ணம் மங்கத் தான் செய்யும். ஆனால் மலைப் பாறைகள் சில இயற்கையிலேயே வர்ணங்கள் கொண்டவை, அந்த வர்ணங்கள் மங்குவதில்லை, மறைவதுமில்லை. அந்த கால ஓவியர்கள் அத்தகைய இயற்கை வர்ணப் பாறைகளைப் பொடியாக்கி எதோ ஒரு இரகசிய பச்சிலை சாற்றுடன் கலந்து சேர்த்த வர்ணமானது இப்போதும் அழியாமல் இருக்கின்றது.

வருடங்கள் பல கடந்தால் காரைகள் பல இடங்களில் பெயர்ந்தும்,பல இடங்களில் பாறையோடு பெயர்க்கப்பட்டு ஓவியங்கள் களவாடப்பட்டுள்ளது. மீதம் உள்ள சொற்ப இடங்களில் உள்ள சித்திரங்கள் மட்டுமே இன்றளவும் வர்ணம் மங்காமல் காணக் கிடைக்கின்றன.

சித்தனவாசல், அஜந்தா போன்று புகழ்பெற்று இருக்க வேண்டிய இடம் இன்று அழிக்கப்பட்டும் ,அலட்சியப்படுத்தப்பட்டும்,காண்போர் இல்லாமல் மறைந்து கிடக்கிறது, குகை ஓவிய ஆர்வலர்கள் மீதம் இருப்பவை அழியும் முன் காண்பது நலம்.



# தனிமைப் படுத்தப்பட்டக் கலைப் பொக்கிஷம், சக்கரமல்லூர்

## –அன்புமணி, A.T மோகன்




தமிழகத்திலுள்ள 122 கஜப்ருஷ்ட (யானையின் பின்புற வடிவம்) விமான சிவாலயங்களில் ஒன்றான திருசக்கரஅமுதூர் சக்கரமல்லூர் அருள்மிகு ஸ்ரீ திரிபுர சுந்தரி அம்பாள் சமேத ஸ்ரீ திருக்கண்டீஸ்வரர் ஆலயம். ஆற்காடு அடுத்த சக்கரமல்லூர் எனும் ஊரில் உள்ளது,

கோயில் முழுமையாக கல்வெட்டுகள் , அழகிய சிற்பங்கள் என மிகவும் அருமை ஆனால் உள்ளூர் மக்களின் பார்வையில் இதன் பெருமை படவில்லை.

கஜப்ருஷ்ட அமைப்பு இந்த கோயிலில் பச்சைகல்லால் செய்யபட்டு இருப்பது மிக சிறப்பு.. காஞ்சிபுரத்திலிருந்து ஆற்காடு செல்லும் பல வழிகளுள் ஒன்று பாலாற்றை கடந்து அதையொட்டி வடஇலுப்பை, பூதூர், புதுப்பாடி மார்க்கமாய் செல்வதாகும்.

பூதூருக்கும் புதுப்பாடிக்கும் இடையே உள்ள சக்கரமல்லூர் , சக்கரமூதூர் என்று சாசனங்களால் அறியப்பட்டு



சிவபராக்ரம லீலைகளில் 36 ஆன காமதகன நிகழ்ச்சியை காட்டும் முக்கண்ணனின் நாமம் தாங்கிய ஈசன் உறைவிடமாகும்.கரும்பு வில் வளைத்து கரும்பு நானேற்றிட்டுப் பஞ்ச பானங்களை சிவன்மீது பிரோகித்தான் காமன் என்ற புராணத்தை ஒட்டி இப்பிரதேகம் முழுதும் ஒரே கரும்பு தோட்டம்தான்.

இங்கே இகோயில் முழுமையாக சோழர்கால கல்வெட்டுகள், 1233 வருடத்திய கோப்பெருசிங்கன் தெலுங்கு கல்வெட்டு , 1230 வருடம் மூன்றாம் இராசராசன் கோயிலுக்கு கொடை கொடுத்த கல்வெட்டு சாசனம் என கோயில் முழுக்க கல்வெட்டுகள் காணப்படுகின்றன.







கோயில் சிற்பங்கள் மிக நுனுக்கமான வேலை பாடுகளுடன் கானப்படுகிறது. இகோயில் சோழர், பல்லவர் கால கட்டுமானங்களுடன் கானப்படுகிறது.. இகோயில் உள்ளூர் மக்களால் சரிவர பராமரிக்க படுவது இல்லை,

கோயில் முழுக்க வவ்வால் எச்சங்கள் ஆனால் ஒரே ஒரு பூசாரி மட்டும் தொடர்ந்து பூசைகள் செய்து வருகிறார்.







# குரக்குத்தளி நாயனார்

## – சதீஷ் விவேகா





இயந்திரமாய் இயங்கும் டாலர் சிட்டியில் அனைவரும் எறும்பைப் போல் சுறுசுறுப்பாய் இயங்கிக் கொண்டிருக்கும் மாலைவேளை. நானும் என் நண்பரும் முன்னோரின் பெருமையையும் அவர்களின் வரலாற்றின் தொன்மையையும் தாங்கி நிற்கும் சர்க்கார் பெரிய பாளையத்தில் ஸ்ரீ சுக்ரீஸ்வரர் கோவிலுக்கு கிளம்பினோம். திருப்பூரிலிருந்து ஊத்துக்குளி போகும் சாலையில் அமைந்துள்ளது, கூலிபாளையம் என்ற மற்றொரு பெயரும் இதற்கு உண்டு.

பேருந்து நிறுத்தத்திலிருந்து கொஞ்ச தூரம் மேற்கே சென்றால் நகரத்தின் நெரிசலையும்.. இரைச்சலையும் தாண்டி அமைதியாய் அவ்விடத்தில் வீற்றிருக்கிறார் அன்பின் உருவான குரக்குத்தளி நாயனாராய் சுக்ரீஸ்வரர்.

மாலை நேரத்தில் கோவில் திறப்பதிற்கு முன்பே நாங்கள் சென்று விட்டோம் ... எங்கள் இருவரைத் தவிர யாரும் கோவிலுக்கு அருகில் இல்லை .. அர்ச்சகரின் வருகைக்காக காத்திருந்தோம் ... தெற்குப் பார்த்த வாயில் அமைப்புடன் மிகச் சாதரணமான கம்பிக் கதவைக் கொண்டிருந்தது ஆலய நுழைவாயில்... வழக்கமாய் அமையப் பெற்றிருக்கும் கிழக்கு கோபுரம் இல்லை ..

கம்பியின் வழியே கோவிலின் அழகை ரசித்துக் கொண்டிருந்தேன்.. ஆதவனின் பொன்னிறக் கதிர் சிவப்பு நிற விமானத்தில் பட்டுத்தெறித்து புது பரிணாமத்தில் அழகை அள்ளிக் கொடுத்துக் கொண்டிருந்தது.. அதில் லயித்து நின்று கொண்டிருந்தோம். சிறிது நேரத்தில் குருக்கள் வந்துவிட்டார்.. கோவிலைத் திறந்ததும் வாயிலை வணங்கி உள் நுழைந்தோம் இருவரும்.

விநாயகரை வணங்கி ஆலயத்தை வலம் வரத் துவங்கினோம் .. மூன்று லிங்க மூர்த்திகளும் சிறு குகைகள் போன்ற சன்னதியும்.. சுப்பிரமணியருக்குத் தனி சன்னதியும் மூலவர் சன்னதியையும் அம்மன் சன்னதியையும் சுற்றி அழகுற அமையப்பெற்றிருந்தது. கோவிலை வலம் வந்தபடி அனைத்தையும் வணங்கி வந்தோம். மூலவரின் வெளிச் சுற்றுச்சுவர் முழுவதும் கல்வெட்டுக்களால் நிறைந்திருந்தது.. எங்களுக்கு கல்வெட்டு படிக்கத் தெரியவில்லை என்றாலும் அதை கவனித்து படியே வந்தோம் ஒரு இடத்தில் சுந்தர பாண்டிய தேவர்க்கு என்ற பெயர் மட்டும்



விளங்கியது. இதையறியும் ஆவல் மேலோங்கியது.

பின் நந்திதேவரை வணங்கி வந்தோம் இரண்டு நந்திதேவர் சிலை இருந்தது முன்னால் இருக்கும் நந்திதேவர் சிலைக்கு காதில்லாமல் ஊணமாக இருந்தது.. அதற்கு அடுத்து பின்னால் இருக்கும் சிலை அங்க லட்சணத்துடன் அழகாய் இருந்தது.. ஏன் இப்படி என்று ஒரு கணம் சிந்தித்த மனம் மூலவரை பார்க்கும் ஆவலில் நந்திதேவரிடம் உத்தரவைப் பெற்று வேகமாய் உள்ளே நுழைய ஆவல் கொண்டது.

அளவான உயரத்துடன் அழகுடன் வீற்றிருந்தார் "கொங்கிற் குறும்பில் குரத்துத்தளியாய்" என சுந்தர மூர்த்தி நாயனாரால் பாடபட்பட்ட சுக்ரீஸ்வரர். கிழக்கு முகம் பார்த்தபடி லிங்க ரூபனாய் பிறையும், நீரும் ,சந்தனமும், நடுவில் குங்குமும் சூடி அலங்காரமில்லாமல் அம்சமாய் அருள்பாளித்து அமர்ந்திருந்தார்... பார்த்த கணத்திலே ஈர்த்தெங்களையும் ஆட்கொண்டார்..

கருவறைக்கு வெளியே அர்த்த மண்டபத்தில் விநாயகர், வலப்புறத்தில் சுக்ரீவர், யோக நிலையில் அமர்ந்திருக்கும் சனி பகவான், யோக நிலையில் சனி பகவானை இங்கு தான் நான் பார்க்கிறேன் அதனால் நின்று கண்டு வணங்கிவிட்டு வெளியே வந்தோம்.

அன்னையோ ஆவுடைநாயகி என்ற திருநாமத்தில் கிழக்கு நோக்கி அருள்பாளித்துக் கொண்டிருந்தார்... முன் மண்டபத்தில் அகழ்வாராய்ச்சியில் கிடைத்த சிலைகளை வைத்திருந்தார்கள். அனைத்தையும் பார்த்து வெளியே வந்தோம்..

குருக்கள் தனியாக அமர்ந்திருந்தார் அவரிடம் சென்று என்னை அறிமுகப்படுத்திக் கொண்டு சுக்ரீஸ்வரர் கோவில் பற்றிய சில சந்தேகங்களைக் கேட்கலாமா ஐயா? என்றேன் கேளுங்கள் என்றார்.. இங்கிருக்கும் நந்திதேவர் காதறுந்த நிலையில் இருக்கிறாரே ஐயா ஏன்?என்றேன்.

தலபுராணத்துடன் தொடர்புடையது தம்பி.. முன்னொரு காலத்தில் இங்கிருந்த நந்திதேவர் அருகில் இருந்த தோட்டத்திற்கு சென்று வேளாண் பயிரை தினமும் மேய்ந்து வந்திருக்கிறார் ... அதனால் கோபமுற்ற விவசாயி ஒருநாள் நந்திதேவர் மேய்ச்சலில் இருக்கும் சமயத்தில் கையோடு பிடித்து அவரின் காதுகளை அறுத்து விட்டார் .. மறுநாள் கோவிலுக்கு மக்கள் வழக்கம் போல் செல்கையில் நந்திதேவருக்கு காதில்லாமல் அவ்விடத்திலிருந்து

ரத்தம் நிற்காது வருவதைப் பார்த்து அதிர்ந்து போனார்கள். ஆனால் அவர்களால் என்ன செய்தும் ரத்தம் வழிவது மட்டும் நிறுத்த முடியவில்லை.

விவசாயிக்கு நம் தோட்டத்தில் மேய்ந்தது நந்தி தேவர் தான் என்பதை அறிந்து தன்னுடைய தவறுக்கு மன்னிப்புக் கேட்டு பழைய நந்தியை அகற்றி மற்றொரு நந்தியையும் பிரதிஷ்டை செய்ய முயற்சித்துள்ளார் .. பழைய நந்தியை அகற்ற முடியாமல் அதற்கு முன்புறத்தில் புதிய நந்தியை பிரதிஷ்டையும் செய்து விட்டார்... மறுநாள் ஊனமான நந்தி முன்புறமும் புது நந்தி பின்புறமும் இருந்திருக்கிறது... ஈசனே விவசாயின் கனவில் தோன்றி ஊனமுள்ளதால் அதுவும் உயிர் தான் எனவும், இனி பழைய நந்தி தான் முன்புறம் இருக்க வேண்டும் மற்றதெல்லாம் அதற்கு பின்னால் தான் என்று கூறியுள்ளார்.. அதனால் தான் இன்றுவரை இரட்டை நந்தியுடன் உள்ளது இவ்வாலயம் என்றார் குருக்கள்.

ஐயா இக்கோவிலில் பஞ்சலிங்கம் உண்டு கேள்விப்பட்டேன் மூன்று தானிருக்கிறது மற்ற இரண்டு எங்குள்ளது ஐயா என்று கேட்டேன் .. சரிதான் தம்பி மூன்று லிங்கம் சுற்றிலும் உள்ளது.. மூலவரோடு சேர்த்து நான்கு மற்றொரு லிங்கம் தல விருட்சமான வில்வ மரத்தைக் காட்டி அதன் கீழ் உள்ளது என்றார்.. மரத்தின் கீழா ஐயா என்றேன் ஆச்சரியமாய்...ஆம் அங்குதான் தம்பி என்றவர், இந்தக் கோவிலின் கீழ் இதேபோன்ற அமைப்பில் மற்றொரு கோவில் இருக்கிறது, இதை தொல்லியல் துறையின் அகழ்வாய்வின் போது கண்டுபிடித்தார்கள் என்றும் கூறினார் ... ஆச்சரியமாய் இருந்தது ஆனால் அதை அகழ்வாய்வு செய்து காட்சிப்படுத்தினால் நன்றாக இருக்குமே என்ற ஆதங்கமும் இருந்தது...

இவ்வாலயத்தின் மூலவருக்கு சுக்ரீஸ்வரர் பெயருக்கும் காரணமுண்டு ராமயண காலத்தில் சுக்ரீவர் தன் அண்ணன் வாலியைக் கொன்றதின் பாவத்தைப் போக்க இங்கு ஈசனை பிரதிஷ்டை செய்து வழிபட்டதால் மூலவரான ஈசனுக்கு சுக்ரீஸ்வரர் என்ற திருநாமம் உண்டாயிற்று .. அதற்கு சான்றாக மூலவரின் தெற்குப்புறச் சுவற்றில் புடைப்பு சிற்பமாக சுக்ரீவர் லிங்கத்தை வழிபடுவது போல் சிலையுண்டு பாருங்கள் என்றார் குருக்கள்.. இன்னும் விளக்கமாய் அறிந்து கொள்ள வேண்டுமெனில் தலைமை குருக்களிடம் கேட்டு தகவல்களைப் பெற்றுக் கொள்ளுங்கள் ஆனால் இன்று அவர் வரமாட்டார் நாளை வாருங்கள் பார்க்கலாம் என்றார்...

ஐயா உங்களின் பெயர் என்றேன் சங்கர் என்றார்.. அவருக்கு நன்றி தெரிவித்துக் கொண்டு நேராய் தல விருட்சம் இருக்கும் இடத்திற்கு விரைந்தோம் அங்கிருக்கும் ஈசனை வணங்க..

சுவற்றில் புடைப்புச் சிற்பமாய் இருந்த சுக்ரீவரையும் தரிசித்து விட்டு .. மூலவருக்கு நேர் எதிரில் கிழக்கு முகமாய் அமைந்திருந்தது பத்ரகாளி அம்மன் சன்னதி அவரையும் வணங்கி .. பின் கோவிலின் வடப்புறத்தில் இருக்கும் காலபைரவரை வணங்க வந்தோம் தெற்கு நோக்கி இருந்தது அவர் சன்னதி மிகப் பழமையான புடைப்புச் சிற்பம் வடிவில் இருந்தது அவர் உருவம் .. அவரே உணர்த்தினார் கோவிலின் பழமையை ...

இங்கு மூலவர் மற்றும் அம்பாளின் சன்னதிகளைத் தவிர அனைத்து சன்னதிகளும் சிறு குகையமைப்பில் உள்ளது.. தொல்லியல் துறையினர் 2500 காலம் பழமையானது என்று கூறுகிறார்கள்.. ஒருசிலர் ஆயிரம் வருடம் தொன்மையான கோவில் என்கிறார்கள்.. ஆனால் குருக்கள் கூறியதிலிருந்தும் மூலவரின் பெயரை வைத்துப் பார்க்கும் பொழுது இருயுகம் கண்ட கோவிலாய் இருக்குமோ? என்றும் தோன்றுகிறது ... எவ்வளவு பழமை சிறப்பானதாய் இருந்தாலும் நாம் போற்ற வேண்டும் அதை நாம் பேண வேண்டும் ..இதைச் செய்யாது நாம் பெருமை பேசுவது தவறு தான்..

இன்னும் கல்வெட்டு பெருமையை தாங்கி நிற்கும் கோவிலுக்கு வழிபட மக்களின் எண்ணிக்கையோ சொற்பமாய் உள்ளது.. அங்கிருக்கும் சங்கர் குருக்களிடம் எப்பொழுது எல்லாம் அதிக கூட்டமிருக்கும் ஐயா என்றேன் .. பிரதோஷத்திற்கு ஓரளவு வருவார்கள் ... அதிகமான கூட்டமென்றால் ஆருத்திராதரிசனம் அன்று தான் தம்பி நல்ல கூட்டாமாய் இருக்கும்.. சிறப்பு பூஜைகள் ..அன்னதானம் என விமர்சையாகவும் நடக்கும் .. மற்றநாளெல்லாம் இன்றுபோல் தானிருக்கும் என்றார் ...

அவரின் பேச்சிலிருந்து ஆதங்கமும் வருத்தமும் தெரிந்தது.. நம் முன்னோர் கட்டிய கோவில்கள் அனைத்தும் வழிபடும் தலங்கள் மட்டுமல்ல , நம் பண்டைய நாகரீகத்தையும்.. கலாச்சாரத்தையும் உலகிற்கு உரக்கச் சொல்லும் மாபெரும் கலை பொக்கிஷங்கள் ... அதை நாம் போற்ற வேண்டும்.. இத்தலத்திற்கு முடிந்தால் ஒருமுறையேனும் வாருங்கள் ... சுக்ரீஸ்வரர் , ஆவுடைநாயகியின் அருள் பெற்று செல்லுங்கள்...

சுந்தரமூர்த்தி நாயனாரின் பாடல்

கொங்கில் குறும்பில் குரக்குத்தளியாய் குழகா குற்றாலா
மங்குல் திரிவாய் வானோர் தலைவா வாய்மூர்

மணவாளா
சங்கக் குழையார் செவியா அழகா அவியா அனல் ஏந்திக்
கங்குல் புறங்காட்டு ஆடீ அடியார் கவலை களையாயே.

பொழிப்புரை :

கொங்கு நாட்டில் பாலை நிலத்தில் உள்ள குரக்குத்தளி முதலிய தலங்களில் எழுந்தருளியிருப்பவனே, மூப்படையாதவனே, வானத்தில் திரிபவனே, தேவர்க்குத் தலைவனே, வாய்மூரில் மணவாளக் கோலம் உடையவனே, சங்கக்குழை பொருந்திய காதினையுடையவனே, அழகனே, எஞ்ஞான்றும் அவியாது எரிகின்ற நெருப்பைக் கையில் ஏந்திக்கொண்டு, இரவில் புறங்காட்டில் ஆடுகின்றவனே, உன் அடியாரது மனக் கவலையைப் போக்கியருளாய்..

வணிகக் கல்வெட்டு

பண்டைய காலம் தொட்டே தென்னிந்தியாவில் கிரேக்கர்கள், ரோமானியர்களுடன் வாணிகம் நடந்தற்கான ஆதாரங்கள் நிறைய உண்டு. அதிலும் குறிப்பாய் கொங்கு நாட்டில் வாணிகம் நடந்ததிற்கான மிகப்பெரும் சாட்சியாய் இக்கல்வெட்டு உள்ளது... கடந்த முறை இக்கோவிலைப் பற்றி பதிவிட்ட பொழுது திரு. **Kaliyappan srinivas** அவர்கள் இக்கல்வெட்டைப் பற்றி கூறினார் ... இணையத்தில் தேடினேன் இதில் வரும் தகவல் நம் கொங்குப் பகுதியின் வணிகத்தின் நிலை எவ்வளவு உச்சத்தில் இருந்திருக்கிறது என்பதைக் காட்டியது ...

இக்கல்வெட்டைப் பற்றி சுருக்கமாய்க் கூறினால் அறுபத்து நான்கு வணிகக் குழுவினர் ஒன்றாய் இணைந்து வைகாசித் திருநாள் அன்று குரக்குத்தளி நாயனாருக்கு திருவிழா எடுத்ததை விளக்கமாய்க் கூறுகிறது... வணிகக்குழுக்கான மெய்கீர்த்தியுடன் ஆரம்பிக்கும் கல்வெட்டானது வாசிக்க வாசிக்க ஆச்சரியத்தைத் தருகிறது ... அறுபத்து நான்கு வணிகக்குழுவினரும் ஒன்றாய் சேர்ந்து விழா எடுக்க ஒப்புதல் கொடுத்ததிற்கு சாட்சியாய் அவர்களின் வணிகக்குழுவின் பெயர் அவர்களின் பெயரையும் (கையொப்பம்) பதித்துள்ளார்கள் என்றால் எந்தளவுக்கு இங்கு வணிகம் ஒற்றுமையுடன் செழித்து நடந்திருக்கும் என்பதை நமக்கு உணர்த்துவதோடு மட்டுமில்லாமல் பிரமிப்பையும் தருகிறது... இனி அக்கல்வெட்டையும் விளக்கத்தையும் பார்ப்போம் ...

**1.** ஸ்வஸ்தி சுந்தரபாண்டிய தேவற்கு யாண்டு **4** வது ஸ்வத்தி ..னா ஸ்ரீபஞ்ச சதவிரசாத
நாலெக கண லக்குனலக்கும் இலா விருதவழ் கதிர் ஸ்ரீ வாசுதேவ சகாயாய கண்டளி....
மூலபத்தி ..மென்ஸ்ரீஐ பொற்பரமேஸ்வரிக்கும் பட்டாரகிக்கும் ஸ்ரீ பகவதிக்கும் மாதேவிக்கும்
பசூராகி நிகமாக தெந்தமிழ் வடகலை தெரிந்துணர்ந்து நீதி சாத்திர நிபுணராயிந
சொல்லால் விளிதுரைத்து வன்சொல்லால் மறங் கடிந்து சமத்தா

**2.** ராகா பரிமண்டலத்து சந்திராதித்தவரை தழைத்தோங்கி இந்திராதிதேவர் களித்துரைத்து
வாதராசன் காற்றசைப்ப வருணராசன் நீர்தெளிப்ப தேவரான பதமென்னத் திருவுடனெவிளங்கா
நின்ற சலக கணசம்பந்தராகி நீதி உத்தமகுண பண்டிதர்களாய்ச் சமையத்து வளர்கின்ற
இமையப் பேர்மலைப் ஏழ்கடலளவை யுடுத்த எடுத்தாவி பெண்டிகையுமுள்ள தலம் பகமந்தனமாக

**3.** நாவலன் தீவென்று நன்னாடா பொன்திகழ் *பூம்புகார் திருவாரூர் புகழ்படலம் கொடுங்கொளூர்
நாமம் புகழும் திருபடமும் *எழில் பாச்சில் பாட்ட... புர மற்றுமென்பட்ட பதியனைத்தும்
விருப்புடந் விளங்கு லித்தோர் பின்னிரண்டு மொழியாத பன்னிரண்டு நகரமிவை பழசாகப்
படையோர் *கொங்கி லொன்பது மாநகரங்கள் குடிகொண்டங்கி நிதுரைத்து தேவர்
மதிதொட்டோங்கு *மாட வீதிப் பதிநெட்டு

**4.** பட்டணமும் *முப்பத்திரண்டு வேளாபுரமும் *றுவத்தினான்கு(**64**) கடிகைத் தாவளமுநீ தாவளத்
திருந்து குளமை வளர்க்கும் *செட்டியுஞ் *செட்டி வீரபுத்திரர்களும் *மலைமண்டலத்து பல
நகரங்களும் நான்கு திசைப் பதிநெண் விடியத்தொமும் *பதிநென் விஷயப் *பெரு நீரவியா(ர்) ரொமுந்
*திசையாயிரத்தஞ் நூற்றுவரொமும்
* ஐந்நூற்றுவன்
*பெருநீரவியாரொமும் எங்குள்ள
* நாட்டு செட்டு
* தளச் செட்டிகள்

**5.** நம் மக்கள் அறுபத்து நான்கு முனையும் மமுன்வீர கொடிய யாரொமும் செங்கொல முன்கைவும்
செம்பொற் பசும்பை யெ தெய்வாகவுஞ் *சித்திர மெழியேணையாகவும் கீழ்ப்பால் ஐந்நூற்று வன்
பெருங்கோவில் குறைவறக் கூடி நிறைவரி நிரைந்து இசையப் பேசி எம்மின உந்து அமயச்
செய்த சமய தன்ம காரியமானது மாசி மாதம் முதல் பிரசொழ வளநாட்டு முகந்தனூர் ஆளுடையார்
திருகுரங்குத்தளி ஆளுடைய னாயி நாற்

**6.** குசை *(வை)காசித் திருநாள் எழுந்தருளிவிப்பதாக

பட்டின பகுதி தட்டிக்குடுத்த பரிசாவது *நான்கு திசையை சாத்து *இறங்கு சாத்து நடக்கும் சரக்குகளுக்கு *மிளகு எக்கு பொதி ஒன்றுக்கு பணம் ஒருமாவும்
*புடவைகட்டு ஒன்றுக்குப் பணம் இரண்டு மாவும்
*நூல் பொதி ஒன்றுக்குப் பணம் இரண்டு மாவும்
*பாக்கு பொதி ஒன்றுக்கு பணம் அரைமாவும்
*பசும்பை யொன்றுக்குப் பணமரை மாவும்
*கழுதை மெல் வரும் பண்டங்......

**7.** யுளக்குங்களுஞ் சரக்குகளும் பணமரைமாவும் தான்யங்களுக்குப் பணங்காணயும் றுக்கும் பண்டங்களுக்குப் பணம் ஒரு மாவும்
*ஆனைக்குப் பணம் ஒன்றும்
*குதிரைக்கு பணமரையுஞ்
*சந்தனக் கட்டுக்கு பணங்காலும்
*வீடுபுடவை சமக்கட்டுகளுக்கு பணங்காலும்
*செக்கள் கிடாக்களுக்கு விழுக்காடும் மற்றும் எ(வ்) லகை சுங்கம் தீரும் பண்டங்களுக்கு
ஒன்றுக்கு .....

**8.**ழியாமல்திரக்கடவதாகவும் இப்படிக்கு வயிராகிகளும் சமயக் கணக்கனும் பலவட்டைகளிலும் தண்டிப்பு குந்த முதல் கொண்டு
ஒரு குறையற திருநாள் எழுந்தருளுவிக்கவும் திருநாள்
எழுந்தருளுவிக்கும் பொது முதலியாரும் தெவர்கன்மிகளும் நாவ்யற்கு
கண்டெச் சுவர நாயனார் திருமுகம் வயிராகிகள் கைய்யிலே வாந்து
.... இட வகையும் காட்டி இ(வை) களுக்கும் கடுவதென ... ச்ச ...ரும்
த.... முனை ... க்கும் எவம நாள்தோறும்.

வணிகக் குழுவின் பெயர்கள்: பதினென் விஷயத்தார்.. பெருநீரவியார்.. திசையாயிரத்து நூற்றுவர்.. ஐந்நூற்றுவர்.. சித்திமேழிகள்.. செட்டிகள்.. நாட்டுச்செட்டிகள் முதலிய வணிகக் குழுவின் பெயர்கள் குறிப்பிட்டுள்ளது..

பதினெட்டு வணிக பட்டணமும்.. முப்பத்திரண்டு வேளாபுரமும்.. அறுபத்து நான்கு கடிகை தாவளமும் ( கடிகைத்தாவளம் என்பது பாதுகாப்பு நிறைந்த வணிக நகரத்தைக் குறிக்கிறது) .. பூம்புகார், திருவாரூர், கொடுங்கொளூர், எழில் பாச்சில் முதலிய பன்னிரண்டு நகரமும்.. மலை மணடலங்கள் ( மலை மண்டலம் கேரள நாட்டை உணர்த்துகிறது) மற்றும் கொங்கு நாட்டில் ஒன்பது மாநகரங்கள் பற்றிய குறிப்பும் வருகிறது ...

பொருட்கள் ஏற்றுமதிக்கு ஏறு சாத்து, இறக்குமதிக்கு இறக்கு சாத்து எனவும்



குறிப்பிடுகிறார்கள் .. மிளகு எக்கு பொதி ஒன்றுக்கு பணம் ஒரு மா (மா - தங்கத்தின் எடை) புடவை கட்டு, நூல் பொதிக்கு பணம் இரண்டு மாவும் ( அன்றே திருப்பூருக்கும் நூலுக்கும் சம்பந்தம் இருந்திருக்கிறது பாருங்கள் ) ... பாக்கு பொதிக்கு அரை மாவும்.. பசும்பை பொதிக்கு (தோளில் சுமந்து செல்லும் மூட்டை) அரைமாவும்..

கழுதைக்கு பணம் ஒன்றும், யானைக்கு பணம் ஒரு மாவும், குதிரைக்கு பணம் அரை மாவும், செக்கள்(சேக்கள்- காளைகள்), கிடாக்கள் மேல் செல்லும் பண்டங்களுக்கு பணம் ஒரு மாவும் , சந்தனக்கட்டு, வீடுபுடவைகளுக்கு கால் பணமும் சுங்கவரியை வணிகக் குழுக்கள் விதித்திருக்கிறது.. அதை அனைத்து வணிகக்குழுவும் ஏற்றுக் கொள்ளும் வகையில் அனைவரும் கையொப்பம் இட்டிருக்கிறார்கள் ...

யார் யார் கையொப்பம் இட்டிருக்கிறார்கள் :-

இப்படிக்கு பதினெண்விஷயப் பெருநிரவியார் குழுவைச்சேர்ந்த
சுந்தரப்பெருமாள் எழுத்து.

இப்படிக்கு ஆட்கொண்ட நாயநார் எழுத்து

இப்படிக்கு பிள்ளை நாட்டு செட்டி எழுத்து.
இப்படிக்கு ஏராளபுரத்து வியாபாரி கூத்தன் கண்ணன்

எழுத்து.

இப்படிக்கு காறயூர் உடையான் பெரியய்யதேவன்..

இப்படிக்கு ஏருளபுரத்து வல்லூர் உடையான் கையிலாயன் ஆன வணிகை மாதா.

இப்படிக்கு அரிவியூரான் கலசைப் பாடி உடையான்

இப்படிக்கு திருவிரபசூரமுடையான் காளை பெருமான்.

இப்படிக்கு நாவலூர் உடையார் திருநிலை அழகியான் அதிரை வீசாலெவன்.

இப்படிக்கு திருமலை நாட்டு வாரண வாசிப் பெருந்தெருவில் சோணாடயன புரத்து பெருமங்கலமுடையான் உலகன் உய்யவந்தான் சேரமான் தோழன்..

இப்படிக்கு திருவாலூர் இவணங்குடையான் தொண்டகநாயன் பெரிய்யநாயன்.

இப்படிக்கு வணிகையராதித்தன்.
நாவலூர் வியாபாரி

இப்படிக்கு இவங்குடையான் திரு அண்ணாமலைப்பெருமாள்.

இப்படிக்கு பாண்டி மண்டலத்து சுந்தரபாண்டியபுரத்து சிரியப்பிள்ளை.

இப்படிக்கு வெள்ளூரான கோதண்டராமபுரத்து பால்வாய் உடையான் சொக்கனார்.

இப்படிக்கு மீமலை இராசெந்திர சோழப் பெருந்தெருவில் அவையா உடையான் மாதுயரந்தீர்த்தான் சுந்தையன்.

இப்படிக்கு ஜெயங்கொண்டசோழபுர முதலிகைப்பள்ளியுடையான் நீராலமுடையான் பொசிவாசிகொண்டான்.

இப்படிக்கு விக்கிரமசோழபுரத்து மாத்தூர் உடையான் பஞ்சநெதிவாணன்.

இப்படிக்கு பாண்டி நாட்டு சுந்திர பாண்டி புரத்து திருஞானசம்பந்தன்.

இப்படிக்கு பாண்டிமண்டலத்து சீகல்லபுர நாட்டு குலசேகரபுரத்து பேர் இலத்துடையான் சீகைமுடையான் அந்தியும் பகலும் ஆடுவான்.

இப்படிக்கு ஏராளபுரத்து வியாபாரி மாணிக்கன் புந்தியில் உறைவான்

இப்படிக்கு குலவாய் நாட்டு சுந்தரபாண்டியபுரத்து மங்கலமுடையான் ஓதாதுணந்தான்.

இப்படிக்கு பாண்டிமண்டலத்து நகர மத்தெலிங்க குலகாலபுரமான் குலோத்துங்கசோழ பட்டணத்து வெளியாற்றூர் உடையான்.
உத்தமாண்டன் சொக்கனார்

இப்படிக்கு பாண்டிமண்டலத்து நகரம் தெலிங்ககுலகாலபுரமான.... ரத்து வாணபுரத்து பாம்பையன் உடையான் அருள்பெற்ற நம்பியான் ஆடும் பெருமாள்

இப்படிக்கு கொடும்பாளூர் மணிக்கிராமத்து வெண்ணை சொக்கனான அழகிய சொக்கன்.

இப்படிக்கு இராசேந்திர சோழபுரத்து உடையான் பொன்னப்பிள்ளை

இப்படிக்கு கொடும்பாளூர் மணிக்கிராமத்து தனபாலன் திரு... யார்.

இப்படிக்கு பாண்டிமண்டலத்து நெடுபரமுடையான் சொக்கனார்
இப்படிக்கு பாண்டிமண்டலத்து சுந்தரபாண்டியபுரத்து உய்யக்கொண்டான் பெரிய்ய நாயன்

இப்படிக்கு தொண்டைமானார் இராச சோழபுரத்து வல்லியூர் உடையான் நடத்துன் உலகுதொழ நின்றான்

இப்படிக்கு வத்தன் உடையான்பிள்ளை திருவானன் ஆன திருஞானசம்பந்தன்

இப்படிக்கு தாமரைப்பூண்டி உடையாள் சூரியனாள சம்பந்தப்பெருமாள்

இப்படிக்கு கங்கைகொண்டசோழபுரத்து கொளம்பாக்கமுடையான் ஆருர செந்தன்

இப்படிக்கு மாணக்காண்டான்

இப்படிக்கு கருவூருடையான் வஞ்சிமாநகர் திருக்காளத்தி உடையான்

இப்படிக்கு பதினெண்விஷயத்தாரில் உடையான் திருவானைக் காவுடையான்

இப்படிக்கு கட்டியடையான்

இப்படிக்கு அம்பலத்தாடுவான்
இப்படிக்கு கருப்பூர் உடையான் இளையான் அம்பலத்தாடுவான்

இப்படிக்கு இராசராச வளநாட்டு இராசேந்திர சோழப் பெருந்தெருவில் அரசுருடையான் அடிகள் சமையச்சக்கரவத்தி நீலைகண்டன்

இப்படிக்கு பாண்டிமண்டலத்து ஐபொழில் விக்கிரமசோழபுரத்து வெண்டவளந்தான்

இப்படிக்கு நற்பழநியுடையான் அடிகள் ஆழ்வாள் பெருங்கருணை பெருமாள்
திரிபுவனமாதேவியுடையான் பெரியான்

இப்படிக்கு பாண்டிமண்டலத்து கொடும்பாளூர் தம்பிராந் தோழன்

இப்படிக்கு எறிபடநல்லூர் வடபாடியில் சேந்தமங்கலமுடையான் சிய்யன் தேவன் சுந்தரப்பெருமாள்

இப்படிக்கு சுந்தரசேகரபுரமான தேசிஉகந்த பட்டணத்து மருதநாதபுரமுடையான் சுந்திரதேவப்பெருமாள் ஆன திருவிடையான்

இப்படிக்கு வெள்ளூர் உடையான் பெரிய்யான் சொக்கனார்

இப்படிக்கு அய்ந்நூற்றுவன் பெருநிரவியார் வியாபாரி மணிய்ய சக்கரவத்தி

இப்படிக்கு வடக்கிலூரான வீரபாண்டியபுரத்து வியாபாரி சேந்தன் சேந்தநாந அமரதேவன்

இப்படிக்கு உய்ய வந்தான்
இப்படிக்கு கதாபுரத்து கோட்டைக்கரைஉடையான் வண்ணாகக் குறியான் சக்கரவத்தி அழகியான்

இப்படிக்கு பாண்டிமண்டலத்து தெகிபட்டணமுடையான்

இப்படிக்கு கூத்தன் சக்கரவர்த்தி தனசந்... மண்டலத்து கொடும்பாளூர் சேரமான் தோழன்

இப்படிக்கு கொடும்பாளூர் வணிக்கிராமத்து வியாபாரி ஆண்டக்கன் சொக்கனார்

இப்படிக்கு பாண்டிமண்டலத்து கீழ்க்குண்டாற்று வீரநாராயணபுரத்து திரு.. உடையான் அரங்குள .. பெருமாள்
இப்படிக்கு ...ழாப்பள்ளியுடையான் கயிலைப்பெருமாள்

இப்படிக்கு பெருமாள்மலை பெருமாள்

இப்படிக்கு நாப்பழனி உடையான் அரசன் மணியனான மாறி ஆடுவான் (மாறி ஆடுவான் என்பது கால் மாற்றி ஆடும் நடராசப்பெருமானைக் குறிப்பதாகலாம்)

இப்படிக்கு பாண்டிமண்டலத்து இராசநாராயணபுரத்து திருவெண்பூர் உடையான் தேவன் திருவானமாமலை உடையான்

இப்படிக்கு கண்ணனூருடையான் பெரியான் அமரகோன் சமைய மந்திரி அமர்கோன் (சமைய மந்திரி=கூட்டம் கூடுவோர்) சாங்கியன் கீழையான் அறப்பித்தந் திருஅண்ணாமலை உடையானான சூரியன்

இப்படிக்கு களத்தூர் கிழவன் இம்மைய் திருவான்கள.... ப்பிள்ளை கண்ணார் அமுதன் கூத்தன் தேவன்

இப்படிக்கு புழங்குடையான் சந்திரன்

இப்படிக்கு அழகியபாதன்

இதில் நான்கு வணிகர்களின் கையொப்பம் வட்டெழுத்தில் இருக்கிறது .. பழமையையும் பெருமையும் தாங்கி நிற்கிறது இவ்வாலயம் .. இது கொங்கு பகுதியின் மிக உயர்ந்த வரலாற்று பொக்கிஷம் ...

நீர் மேலாண்மை:

இந்த பூமியில் முக்கால் பகுதி நீரால் சூழப்பட்டிருந்தாலும் இன்றைய அறிவியல் ஆய்வாளர்களும் சமூக ஆர்வளர்களும் கூறும் ஒற்றைக் கருத்து மீண்டும் உலகப்போர் வருமால் அது தண்ணீர்க்காகத் தான் வரும் என்று கூறியிருக்கிறார்கள்.

இது அவர்களுடைய மேம்போக்கான அறிக்கை அல்லது ஆய்வு எனக் எடுத்துக் கொள்ளாமல் சற்று கூர்ந்து சம காலத்தை எடுத்து நோக்கினாலே நமக்கு நன்கு விளங்கும்.. தேசிய அளவில் சிந்திநதியை பங்கிடுவதில் இந்தியா பாகிஸ்தானுக்கிடையே ஒப்பந்தமும் அதில் அடிக்கடி ஏற்படும் பிரச்சனைகளும். காவிரி நீரை பங்கிட்டுக் கொள்வதில் நமக்கும் கர்நாடகாவிற்கும் ஏற்படும் சச்சரவுகளுமே இதற்கு சான்றாய் கொள்ளலாம். ஆனால் நம் முன்னோர்களிடத்தில் இருந்த தொலைநோக்கிப் பார்வை இன்று உள்ளதா என்றால் உடனடியாக யோசிக்காமல் சொல்லலாம் இல்லை



என்று.

கல்லணை இரண்டாயிரம் வருடத்திற்கு முன்பு கட்டப்பட்டது. அந்த அணையில் தேக்கப்படும் நீரானது ஐந்து வழியில் பிரித்து தென்கத்தை நெற்களஞ்சியமாக உருவாக்கி இருக்கிறார்கள் என்றால் மிகையில்லை. அடுத்து வீரநாரயண ஏரி, கங்கை கொண்ட சோழபுரத்திலுள்ள சோழ கங்க ஏரி, கொங்கு பகுதியில் சாமளாபுரக்குளம், சூலூர் குளம் இப்படி கூறிக் கொண்டே போகலாம் .. சரி இதற்கும் இந்த பதிவிற்கும் என்ன சம்பந்தம்?!!! இருக்கிறது . வாருங்கள் பார்ப்போம் ..

சுந்தரபாண்டியரின் 22 வது ஆட்சி ஆண்டில் பேரூர் நாட்டில் வெள்ளலூரில் செம்படவன் பிள்ளையானுக்கு (என்பவருக்கு) அங்கிருக்கும் ஏரிகளை தூர்வாரி பாதுகாக்கும் பொறுப்பைக் கொடுத்து ,அக்குளத்தில் மீன் பிடித்துக் கொள்ள செம்படவன் வசம் மானியம் கொடுக்கப்பட்டதையும்.. குளத்தைக் காக்க வருமானம் தரப்பட்டதையும் கூறுகிறது இக் கல்வெட்டு ..

இது வெண்பா வடிவிலும் உள்ளது.

" கண்டீஸ் வரவோலை சாகரஞ்சூழ் வையகத்துக்
கண்டீஸ்வரன் கருமம் ஆராய்க - பண்டே
அறஞ்செய்தான் அறங்காத்தான் பாதம்
திறம்பாமல் சென்னிமேல் வைத்து "

கல்வெட்டு:-

சுந்தரபாண்டிய தேவற்கு யாண்டு உயஉ வது பேரூர் நாட்டில் வெள்ளலூரில் செம்படவன் பிள்ளையானுக்கு நம்மோலை குடுத்த பரிசாவது வாயரைக்கா நாட்டில் சூரலூரான *சுந்தரபாண்டிய
நல்லூர் குரக்குத்தளி ஆளுடைய நாயனார் திருநாமத்துக் காணிக்கு இவ்வூர்
அணையும் காலும் பாத்து அணையிலுள்ள நீர் கிழையில் விழாமேல் பாத்துக்குளத்தில்
ஒதுக்கி அணையிலும் குளத்திலுள்ள குறையுள்ளது உலாவிப் பாத்துக் குறையுள்ளது
தானத்தனாற்கும் ஊரவருக்கும் சொல்லி ஊரில் உள்ள பெட்டியாரும் மேற்றி அணைக்கும் கோட்டையும் வைத்து *சிக்கெனப் பாத்துச்...
பொதுவானாகவும் இப்படிச் செய்து பொதுமிடத்து.. மேலைப்பற்றில். தென்ச...
டஞ்சொ *ஒரு மா(ச்) செய்யிறையிலி பெற்று உண்டு போதுவானாகவும் இவ்வூரில் பயி....
ரேறின நிலத்துக்கு ... தான் நானாழி *நெல்லுப்பெற்று பொதுவானாகவும்
நிலம் உழும் ... *நெல்லுக்கு ... கட்டிக்கொள்ளுவானாகவும் இப்படி அனுபவித்துப் பொதுவானாகவும்

www.heritager.org

அனுபவித்துப் பொதுவானாகவும் *அனுபவிக்குமிடத்து தானத்திற்கு நாள்தோறும் படிக்கறியுமிட்டுப்
பொதுவானாகவும் வாய்க்கால் பாட்டம் *ஆண்டொன்றுக்கு ஆறுபணம் இறுத்துப் பொதுவானாகவும் குளத்தில் பாசி பட்டம் தானத்தார் விலைமதித்தபடி ஏறிட்டுக்கொண்டு
தானத்திற்கு குரக்குத்தளி நாயனார்.... துக்கு சிலவறுப்பானாகவும்
*மீன்படுக்கும்போது குளத்தில் மீன் சிலவரை படுக்குமளவும் தானத்திற்கு நிச்சியத்தபடி
தறிதவிர் கறியிட்டு பொதுவானாகவும் *இவ்வூர் நான்கெல்லையும் உட்பட அணையு
குளமும் இம்மரியாதி பெற்று இம்மரியாதிக்குடிமைப்பாடு செய்து அனுபவிப்பானாகவும் *இப்படிக்கு
இவன் மக்கள் மக்கள் சந்திராதித்யவரை செல்வதாகக் *கல்லிலும் செம்பிலும் வெட்டிக்
கொள்ள நம்மோலை குடுத்தோம் அருளால் ஆதிசண்ட
ஸ்வர ஸ்ரீ கரணத்தான் எழுத்து இவை வீரராஜேந்திர சோழச் சக்கரவர்த்தி எழுத்து உட..

இவ்வூர் நான்கெல்லையும் உள்பட அணையு குளமும் இம்மரியாதி பெற்று இம்மரியாதிக்குடிமைப்பாடு செய்து அனுபவிப்பானாகவும் என்று வருகிறது.... நான்கு எல்லையையும் குறிக்கும் அளவு அவ் ஏரி அல்லது குளம் பெரியதாக இருந்ததா என்ற ஆவல் தோன்றியது .. இணையத்தில் தேடியதில் கோவிலுக்கு அருகில் 450 ஏக்கர் அளவில் நஞ்சராயன் குளம் இருந்திருக்கிறது .. இதற்கு நீர் நொய்யலில் இருந்து கொண்டு வரப்பட்டு இப்பகுதியின் நீர் தேவையை பூர்த்தி செய்துள்ளார்கள்..

இவ்வளவு பெரிய ஏரியால் பயனடையும் கிராமங்கள் எவ்வளவு இருந்திருக்கும். நீரை கொண்டு செல்ல எம்மாதிரியான வழிமுறைகள் பின்பற்றப் பட்டிருக்கும்... நினைக்கவே சிலிர்ப்பு தான் ஏற்படுகிறது...

அடுத்த கல்வெட்டும் இதற்கு தொடர்புடையதாய் சுந்தரபாண்டியரின் 22 ம் ஆண்டே வெளியிடப்பட்டுள்ளது. இதன் செய்தி குரக்குத்தளி நாயனார் பெயரில் தேதானமாய்க் கொடுத்த நன்செய், புன்செய் நிலமானது இருந்திருக்கிறது , அந்நிலத்தை சிதக்குறிச்சியைச் சேர்ந்த விவசாயிகளுக்கு விவசாயத்திற்கு பயன்படுத்திக் கொள்ள ஒப்புதல் அளிக்கப்பட்டதை கூறுகிறது .. அதில் வரும் வருமானத்தை கோவிலுக்கு செலுத்த பின்வருமாறு வேண்டும் என்று கூறுகிறது.. குளம் தோட்டங்களை முழுமையாக பயன்படுத்திக் கொள்ளலாம் என்பதையும் தெளிவுபடக் கூறுகிறது இக்கல்வெட்டு...

"வாயறைக்கா நாட்டு சுந்தரபாண்டிய தேவர் நம் குரக்குத்தளி நாயனாற்குத் தந்த உதக பிரமானப்
படிக்கு சூரலூர் ஆன சுந்தரபாண்டிய நல்லூர் இவர்கள் கால் படாகையில்
வரிகள் நமக்கு குடிநீங்கா தேவதானமாய் இவர்களே நமக்கு குடிமக்கள் ஆகவும் இவ்வூர்
நான்கெல்லைக்குட்பட்ட நன்செய் புன்செய் நத்தமும் தோட்டமும் குளமும் குளப்பரிப்பும் உட்பட
நிலம் குடிநீங்கா தேவதானமாகவும் நன்செய் உழுது வாரம் *இருகையில் ஒருகை நமக்குத் தருவார்களாகவும் *புன்செய் உழுது வைப்பற்றுக்குக் கடமை உள்ளதுவும்
பாதி தருவார்களாகவும் அந்தராயம் ஒட்டச்சு எலவை உகவை உகவை காணிக்கை வாசல்
வாயரக்காடு- சிதக்குறிச்சி-சூரலூரான சுந்தரபாண்டியநல்லூர்
ஓலைச்சம்படம் சந்துவி ஸ்ரீ உறாப பெரும் உபாயம் ......"

மொத்தமாய் நாம் பார்த்த இந்த இரு கல்வெட்டின் மூலம் நாம் அறிந்து கொண்ட செய்தி பயன்படுத்தபடாமல் இருக்கும் நிலத்தை சீர்செய்து புதிய நீர்நிலைகளை உருவாக்கி முன்பே அருகிலிருந்த நீர்நிலைகளில் நீரைத் தேக்கி அதைக் கொண்டு வேளாண்மையை பெருக்கி அதன் வருவாயினத்தில் ஒருபகுதியை கோவிலுக்கென ஒதுக்கி முக்காலமும் தடையில்லாமல் பூஜைகள் நடக்க ஏற்பாடு செய்திருக்கிறார்கள் கொங்கு பாண்டியர்கள்.

கொங்கு பகுதியில் நிறைய குளங்கள் உருவானதிற்கு இவர்களின் பங்கு முக்கியமானதாய் இருந்திருக்கிறது என்பதில் சற்றும் ஐயமில்லை.. மொத்தத்தில் நம் முன்னோர்கள் கோவில்களை வழிபாட்டு தலங்களாக பார்க்காமல் அரசுக்கும் மக்களுக்கும் நெருக்கத்தை ஏற்படுத்தும் இடமாகவும்.. கலை, இலக்கியம் மற்றும் பண்பாட்டின் மொத்தக் குவியல்களாகவும் ஆலயத்தைக் கருதியுள்ளார்கள்.

இவ்வாறு உயிர்புள்ள நம் பழமையின் உயர்வை நாம் ஒரு முறை நேரில் சென்று பார்த்து வந்தால் போதும் , நம் வரலாறு இன்னும் அங்கு உயிர்ப்புடன் நம்மைப் பற்றிய தகவலைத் தாங்கி கடவுள் போல் மௌன சாட்சியாய் நின்று நம்மை கவனித்துக் கொண்டிருக்கிறது என்பது நமக்கு விளங்கத் தொடங்கும்.. தானாய் நம்முள் விழிப்பு வரும், அது நம் வரலாற்றையும் அதன் தொன்மையையும் காக்கத் துடிக்கும்.

(கல்வெட்டு செய்தி:- ஈரோடு மாவட்ட கல்வெட்டுகள்( தொல்லியல் துறை)
எண்ணமும் எழுத்தும் :- சதீஷ் விவேகா

# நான் படித்த வரலாற்று நாவல்

– வித்யா லட்சுமி

சில வாரங்களுக்கு முன்பு "வரலாற்று வாசகர் வட்டம்" முகநூல் குழுவில் "கௌசிகா" என்ற வரலாற்று நாவலின் ஆசிரியர் திருமதி.கோமகள் குமுதா அவர்களின் நேர்காணலைக் கண்டு, அந்த புத்தகத்தை இணையத்தில் வாங்கி வைத்திருந்தோம்.

வார இறுதியில் நேரம் கிடைக்கவே பொறுமையாகப் படிக்க ஆரம்பித்தேன். ஆனால் கதையின் போக்கு புத்தகத்தை முழுவீச்சில் முடித்து முடித்த பின்பே வைக்கும்படி இருந்தது. நீண்ட நாட்களுக்குப் பிறகு வாசித்த நாவல்.

"கௌசிகா" நிஜமாகவே ஒரு ஆற்றின் தடத்தைப் போலக் கதை நகர்கிறது. கதையின் நாயகன் "கோவன் குமரன்" வாழ்க்கையும் அவன் மூலமாகக் கோவை நகரமும் உருவானதே கதையின் கரு. அவன் வாழ்வில் பல சாகசங்களை அவன் நிகழ்த்தி நம்மை ஒரு சாகசப் படம் பார்க்கும் பார்வையாளனாக நிறுத்துகின்றான். அவன் புலிகளுடன் சண்டையிடும் காட்சியும், யானையை வெற்றி கொள்ளும் காட்சியும் நம்மை ஆச்சரியத்தின் விளிம்பிற்கே கொண்டு செல்கிறது.

அவன் குதிரை "நீலன்" கதையின் இன்னொரு முக்கிய கதாபாத்திரம். அவனும் நீலனும் கொள்ளும் நட்பு மனிதர்களின் நட்பையும் தாண்டி விலங்குகள் மனிதர்களோடு எவ்வாறு அன்பு செய்கின்றன என்பதன் உதாரணம். கதையில் காடுகள் பற்றியும், கோவை நகரின் பழைய ஊர்களின் பெயர்களைப் பற்றியும், போர் முறைகளைப் பற்றியும் அளித்துள்ள தரவுகள் குறிப்பிடத்தக்கவை. பல திறமைகளைக் கொண்ட கோவன் குமரன், விதியின் வசத்தால் தன் நாடு, மக்கள், பெற்றோரை இழந்து மலைவாழ் குழுவின் தலைவரின் மகனாக சில வருடங்கள் இருந்து மீண்டும் தன் பெற்றோருடன் இணைவதே பாகம் ஒன்று. இரண்டாம் பாகம் குமரனின் மகள் பற்றியது.

இக்கதையில் என்னை மிகவும் கவர்ந்த விஷயம், இக்கதையில் யாரும் எதிரி என்று யாரும் இல்லை. சூழ்நிலைகள் சார்ந்தும், மக்களின் தேவைகள் சார்ந்தும் கதை நகர்கிறது. இருளர்களின் தலைவரோ, கோவனின் அக்கா மகனோ இருவருமே எதிரி என்றோ, கதாநாயகனுக்கு எதிரானவர்கள் என்றோ நமக்குத் தோன்றவில்லை. அவர் அவர்கள் அவர்களின் செய்கைகளை அவர்களின் சூழலே தீர்மானிக்கிறது. அதையும் தீங்கு எண்ணும் நோக்கில் இல்லாமல் செய்தது அவர்களின் மேலும் நமக்கு மரியாதையை வரும் விதத்திலேயே உள்ளது.

கோவையைப் பற்றியும், அதன் சுற்றி உள்ள ஊர்களைப் பற்றியும் அறிந்துகொள்ள இந்த நூல் உதவுகிறது. இன்றைக்கு உள்ள ஊட்டி, குன்னூர், நீலகிரி போன்ற மலைகளின் மக்கள், வாழ்வியல், உணவு, பழக்கவழக்கங்கள் போன்றவற்றையும் நமக்கு எடுத்து இயம்புகிறது. கோவையைச் சுற்றி உள்ள ஆறுகள், அவற்றின் தொன்மை, பழைய பெயர்கள் போன்றவை நம்மை ஈர்க்கும் விசயமாக உள்ளது. ஒரு அழகான கதைக்குள் இடங்களையும் கதை மாந்தராய் புகுத்தி நமக்குக் கோவையைப் புதுவிதமாக அறிமுகப்படுத்தி இருக்கிறார் ஆசிரியர்.

# தடயங்களைத் தேடும் பயணங்கள்

## – திருமதி. மகேஸ்வரி பாபு, பெங்களூரு



தமிழ்நாட்டில் வரலாற்றுச் சிறப்புகள் கொண்ட பல நகரங்களில் வேலூர் நகரமும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். பாலாற்றின் தென்கரையில் அமைந்துள்ள இவ்வூர் ஒரு பழம்பெரும் நகரமாகும். 'தொண்டை நாடு சாற்றோருடைத்து' என்று ஔவை பாடிய தொண்டைவள நாட்டில் அமைந்துள்ள வேலூர், தமிழகத்தின் சிறந்த ஆறுகளில் ஒன்றான பாலாற்றினை ஒரு பக்கமும், இயற்கையான குன்றுகளை மற்ற மூன்று பக்கங்களிலும் கொண்டமைந்துள்ளது.

வேலூரும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளும், வரலாற்றுக்கு முந்தைய காலம் தொட்டே புகழ்வாய்ந்த இடமாக இருந்துவருவதற்கான ஆதாரமாகக் கற்கால மனிதர்கள் வாழ்ந்த சுவடுகளும், பல்லவர், சோழர், சம்புவராயர், முகலாயர், நாயக்கர், நவாபுகள், ஆங்கிலேயர்கள் எனப் பல ராஜ்ஜிய கல்வெட்டு ஆதாரங்களை மேற்கோள் காட்டி வரலாற்று ஆசிரியர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

மலைகள் சூழ்ந்த காரணத்தால் இது ஐந்து நிலங்களில் ஒன்றாகக் குறிஞ்சித்திணை என்று அழைக்கப்படுகின்றது. இந்நிலத்துக்குக் கடவுள் முருகனாகும். அவ்வேலை துணைக் கொண்டு இவ்வூரை நல்லியங்கோடன் என்னும் வேந்தன் வென்றதாகச் சிறுபாணாற்றுப்படை சங்க இலக்கியத்தில் 127-3 வரிகளில் பற்றிக் காணப்படுகின்றது.

"திறன் வேல் நுதியிற் பூத்த கேணி
விறல் வேல் வென்றி வேலூர்"

மேலும் வேல மரங்கள் நிறைந்த காட்டில் குடியிருப்பு உண்டானதால் வேலப்பாடி என்று பெயர் பெற்று பின்னர் வேலூர் என்று சிறப்புப் பெயர் பெற்றது என்று அறிஞர் ரா.பி.சேதுப்பிள்ளை தமது "ஊரும் பேரும்" (பக்கம்-12) எனும் நூலில் குறிப்பிட்டுள்ளார்.
வாழும் உதாரணமாக இன்றும் வேலப்பாடி என்ற





பெயரில் ஒரு குடியிருப்பும், அதன் அருகே அமைந்த பகவதி மலை (மராட்டியர் ஆண்ட போது வாலாஜிமலை) மேல் உள்ள குகையில் சோழ இளவரசர் இராசாதித்தனை தக்கோல போரில் கொன்ற "கச்சியும் தஞ்சையும் கொண்ட கன்னரதேவன்" என்ற இராஷ்டிரகூட அரசர் மூன்றாம் கிருஷ்ணன் காலத்தைச் சேர்ந்த அக்கல்வெட்டில் (கி.பி. 965) இவ்வூர் "வேலூர் பாடி" எனத் தெளிவாகக் குறிப்பிடப்பட்டுள்ளதை இன்றும் காணலாம். இதன் மூலம் வேலூர் ஒரு தொன்மையான நகரம் என்பது புலனாகிறது.

இவ்வூரும் இதன் சுற்றுப்புறப் பகுதிகளும் வரலாற்று காலத்திலிருந்தே புகழ்வாய்ந்த இடங்களாகும். பல இடங்கள் அதிகம் அறியப்படாமல் உள்ளன. கண்டு ரசித்த சில இடங்கள் இங்கே தொகுக்கப்பட்டுள்ளது.

**1.** வள்ளிமலை:

இவ்வூர் வேலூரின் 28 கி.மீ. தூரத்தில் அமைந்துள்ளது. சமணர்களின் ஆதிக்கமும், குடியேற்றமும் அமைந்துள்ள இம்மலையில் கல்படுக்கைகள், பள்ளிகள், சிற்பங்கள், கல்வெட்டுகள் காணக்கிடைக்கின்றன.

**2.** வேலப்பாடி பகவதிமலை :

வேலூர் நடுவே வேலப்பாடி என்ற குடியிருப்பின் அருகே அமைந்துள்ள பகவதிமலை சமணர்களின் குடியிருப்பை அழித்து, இன்று பகவதி அம்மன் ஆலயமாகிவிட்டது. மலை குகையில் மூன்றாம் கிருஷ்ணனின் (கி.பி. 965) அரிய கல்வெட்டு பலர் பார்வையில் படாமல் மறைந்துள்ளது. மேலும் இங்கே சில கற்கால ஆயுதம் போன்ற கற்கள் சிதறி கிடப்பதைக் காணமுடிகின்றது.

**3.** பூட்டுதாக்கு :

இரத்தினகிரி தாண்டிய பின் வலதுபுறம் உள்ளே அமைந்த சாணர்குப்பம் கிராமத்தில் குரங்குமலை உள்ளது. இங்கே அடுக்கடுக்காய் ஒன்றின் மேல் ஒன்றாக அமைந்துள்ள இயற்கையான குகைகளில் சமணர் கல்படுக்கைகளும், மலைமேல், நவாபு காலத்திய அழிந்த நிலையில் மசூதியும் உள்ளது. மேலிருந்து பார்த்தால் மேலகுப்பம் கிராமத்தின் இயற்கை அழகை காணலாம். சிரம் இன்றிச் சமணத் தீர்த்தங்கரர் சிலையும் உள்ளது.

**4.** அமணங்குட்டை:

சலவன்பேட்டை குடியிருப்பின் கடைசியில் அமைந்துள்ளது. பல நூற்றாண்டுகளுக்கு முன்பு இங்கே சமணர்கள் வாழ்ந்துள்ளனர். 1950வரை கூடச் சில துறவிகள் இங்கே இருந்ததாகக் கேள்வி, இன்று இங்கே சிவன் கோயில் காணப்படுகின்றது. சமண உருவங்கள், கல்படுக்கைகள், குளம் போன்ற தடயங்கள் மறையாமலுள்ளது.

**5.** சின்னபால பாக்கம்:

கனியம்பாடி செல்லும் வழியில் உள்ளே அமைந்த கிராமம் இது. இங்கே உள்ளே சருக்கு மலைமேல் இயற்கையாக அமைந்த குகையின் நுழைவாயிலில் பல்லவ மன்னன் நிருபதுங்கவர்மன் (கி.பி.869) கல்வெட்டுக் காணப்படுகின்றது. சிம்ம நந்திபடார் என்ற சமண துறவிக்கு இடமும் சிறு ஆலயமும் அமைத்த சம்பவத்தைக் குறிப்பிடுகின்றது. இன்று கரைந்த நிலையில் பெரிய செங்கற்கள் மட்டுமே உள்ளன. புதர் மறையில் ஆதிமனிதர்களின் ஓவியங்கள் காணப்படுகின்றன.

**6.** அரும்பாவி மலை / அர்மாமலை:

ஆம்பூரிலிருந்து சுமார் 12 கி.மீ. தூரத்தில் உள்ள இயற்கையான 100 அடி நீளம் உள்ள பிரம்மாண்ட குகையில், மேல் பகுதியில் சமணர் கால ஓவியங்கள் காணப்படுகின்றன. உடைந்த நிலையில் பல்லவர் கால சிற்பங்கள் சிதறிக்கிடக்கின்றன.




ஓவியங்கள் அழியாமலும், களவாடப்படாமலும் இருந்திருந்தால் இது தமிழகத்து அஜந்தா என்றே பெயர் பெற்றிருக்கும்.

**7.** தென்னம்பட்டு:

அரும்பாவி மலை செல்லும் வழியில் அமைந்துள்ள தென்னம்பட்டுக் கிராமத்தில் தொன்மையான சமணப் பாஸ்வநாதர் சிலை கண்டறியப்பட்டு இன்று புதியதாக அமைத்துள்ள கோயிலில் இடம் பெயர்க்கப்பட்டுள்ளார். இவரைக் காண பல்வேறு இடத்திலிருந்து சமணச் சமூகத்து மக்கள் வருகின்றார்கள்.

**8.** விளாப்பாக்கம்:

ஆற்காடு பேருந்து நிலையத்திலிருந்து **8** கி.மீ. தூரத்தில் அமைந்துள்ளது பஞ்சபாண்டவர் மலை என்கின்ற திருப்பான்மலை. பல்லவ மன்னர் நந்திவர்மன் காலத்தில் இங்கே வசித்த சமண துறவிகளுக்குக் கல்படுக்கைகளும், குடைவரை கோயிலும் அமைத்துள்ளார். மலை மேல் நந்திவர்மன் மற்றும் சோழ மன்னர் இராஜ ராஜர் கொடுத்த நன்கொடைகள் பற்றிய கல்வெட்டுகள் இருப்பது சிறப்பு. ஆதிநாதர், யட்சி சிற்பங்கள், கல் படுக்கைகள் காணப்படுகின்றன.

**9.** சென்றாயன் பள்ளி:

கனியம்பாடியில் இருந்து குடியாத்தம் செல்லும் சாலையில் அமைந்துள்ள சிறிய கிராமம். கோழி கொண்டை மலையின் அடிவாரத்தில் அமைந்துள்ள ஒரு பிரம்மாண்ட பாறையின் கீழே அமைந்துள்ள அந்த ஓவியங்கள், ஆராய்ச்சியாளர்கள் கூறும் காலம் சுமார் **4000** ஆண்டுகளுக்கு முன்பு, காளை அடக்கும் வீரன், குதிரைகள், மனிதர்கள், வேட்டையாடும் காட்சிகள் போன்றவை வெண்கற்களால் வரையப்பட்டுள்ளது. வணிகவழி பாதையாக இருந்த இடம் இந்தக் கிராமம், இன்று ஒரே தெருவில் பத்து வீடுகள் தான் உள்ளது.



**10.** எருக்கம்பட்டு:

வள்ளிமலையிலிருந்து பொன்னை செல்லும் சாலையில் அமைந்துள்ள சிறிய கிராமத்தின் எல்லையில் அமைந்த ஏரிக்கரையின் கீழ்ப்பகுதியில் அமைந்துள்ள அரங்கநாதர் ஆலயம் மிக அழகாகவும், எளிமையாகவும் காட்சிதருகின்றது. முற்காலச் சோழர் மற்றும் இராட்டிரகூடர் கலைப்பாணியும் கலந்து காட்சியளிக்கும் இக்கோயில் **9**-ம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்று கணிக்கப்பட்டுள்ளது.

**11.** மேல்பாடி:

வேலூரிலிருந்து **30** கி.மீ. தொலைவில் பொன்னை ஆற்றங்கரையில் அமைந்துள்ள இவ்வூர் மிகத் தொன்மையானது. பாணர்கள், கங்கர்கள், வைதும்பர்கள் ஆகியோரின் ஆட்சியின் கிழ் இவ்வூர் இருந்திருக்கின்றது. இராட்டிரகூட அரசர்கள் மற்றும் சோழ அரசர்களின் எல்லை நாடாகையால் இங்குப் பல போர்கள் நிகழ்ந்துள்ளன. சோமநாத சுவாமி என்று இன்று அழைக்கப்படும் இக்கோயில் "சோழேந்திர சிங்க ஈஸ்வரம் உடையார் மகாதேவர் கோயில்" என்று முதலாம் பராந்தகன் (கி.பி. **907-955**) காலத்தில் அழைக்கப்பட்டுள்ளது. மிகவும் கலையழகுடன் திருசுற்று மண்டபங்களும், மாளிகையும், கோபுரம் போன்ற அமைப்புகளும் பிற்காலத்தில் இணைக்கப்பட்டுள்ளன. கருவறையைச் சுற்றிலும் சோழர்களின் மெய்கீர்த்திகள் வடிக்கப்பட்டுள்ளன.

**12.** அரிஞ்சய சோழன் பள்ளிப்படை:

சோமநாத ஈஸ்வர் ஆலயத்தின் எதிரே இப்பள்ளிப்படை அமைந்துள்ளது. அரிஞ்சய சோழன் (கி.பி. **956-957**) என்பவர் இவ்வூருக்கு அருகே இராட்டிரகூடர்களுடன் போரில் உயிர்துறந்தார். பிற்காலத்தில் ஆட்சிக்கு வந்த முதலாம் இராஜராஜ சோழன் கி.பி. **1014**-ல் தன் பாட்டனாருக்கு பொன்னை நதிக்கரையில் "பள்ளிப்படைக்கோயில்" ஒன்றை எழுப்பி அதற்கு அரிஞ்சை ஈஸ்வரத்து மகாதேவர் என்று பெயர் சூட்டியுள்ளார். இக்கோயில் மிக அற்புதமான





கலை நுணுக்கத்துடனும், சிற்பங்களுடனும் இராஜராஜ சோழனின் மெய்க்கீர்த்தியைக் கொண்ட கல்வெட்டுகளுடனும் காட்சியளிக்கின்றது.

**13.** மகேந்திரவாடி:

பல்லவ மன்னனான மகேந்திரவர்மனின் (கி. பி. 600-630) பெயரிலேயே அமைந்துள்ள இவ்வூர், வேலூரிலிருந்து 60 கி.மீ. தொலைவில் அரக்கோணம் வட்டத்தில் பாணாவரம் இரயில் நிலையத்திற்கு அருகே அமைந்துள்ளது. வெட்ட வெளியில் தனியாக இயற்கையாக அமைந்துள்ள பெரிய பாறை ஒன்றை குடைந்தெடுத்து அற்புதமான குகைகோயில் ஒன்றைப் பல்லவ மன்னர் உருவாக்கியுள்ளார். அழகிய தூண்கள் கொண்ட முன் மண்டபம், அதையடுத்துக் கருவறை என இருபகுதி மட்டுமே உள்ளது.

**14.** திருமால்பூர் :

வேலூரிலிருந்து 65 கி.மீ. தொலைவில் அரக்கோணம் வட்டத்திலுள்ள கலையழகுடன் கூடிய மற்றொரு கோயில் கோனார் கோயில் எனப்படும். இது சோழர் காலத்தைச் சேர்ந்த கற்றளி ஆகும். உடைந்த சிலைகள் ஒரு சில காப்பாற்றப்பட்டு வருகின்றன. சோழர்காலக் கல்வெட்டு எழுத்துக்கள் வெளிசுவற்றில் வடிக்கப்பட்டுள்ளன.

**15.** சோழவரம் :

சோழபுரம் என்று முன்னர் அழைக்கப்பட்ட ஊர், வேலூரிலிருந்து தெற்கில் சுமார் 13 கி.மீ. தொலைவில் உள்ளது. பல்லவ மன்னன் கெம்ப வர்மன் காலத்தில் கல்வெட்டு இவ்வூரை காட்டுத்தும்பூர் எனக் குறிப்பிடுகிறது. சோழர்களின் தலைநகரம் போன்றிருந்த இவ்வூர் இன்று சிற்றூராகக் காட்சியளிக்கின்றது. இங்குள்ள கோயில்களில் கலையழகு மிளிரும் சிற்ப வேலைப்பாடுகள் மிகுந்த கற்சிலைகள் காணப்படுகின்றன.

**16.** திருமலை :

வேலூரிலிருந்து தென் கிழக்கில் 45 கி.மீ. தொலைவில் போளூர் வட்டத்தில் இவ்வூர் அமைந்துள்ளது. திருமலை என்ற பெயரிலேயே இதன் புனிதத் தன்மையை உணரலாம். சமணர்களின் முக்கியத்தலமாக விளங்குகிறது. மலையின் நடுப்பகுதியில் இயற்கையாக அமைந்துள்ள பகுதியிலும், அடிவாரத்திலும் சமணங்களின் கட்டுமானக் கோயில்கள் காணப்படுகின்றன. மலையுச்சியில் நேமிநாதரின் 17 அடி உயரமுள்ள உருவச்சிலையைக் காணலாம். பார்சுவநாதர் ஆலயமும் காணப்படுகின்றது. குந்தவை ஜீனாலயம் என்று கல்வெட்டில் அழைக்கப்படுகின்றது.

இக்கோயிலுக்கு முதலாம் இராஜராஜனின் சகோதரியான குந்தவைப் பிராட்டியினால் மானியங்கள் அளிக்கப்பட்டன என்பதைக் கல்வெட்டின் மூலம் அறியலாம். பல கல்வெட்டுகள் ஆங்காங்கே பொறிக்கப்பட்டுள்ளன. இன்றைக்கும் சமணங்களின் முக்கியத் தலமாக விளங்குகின்றது.

**17.** வேப்பூர் :

வேலூரிலிருந்து கிழக்கே 10 கி.மீ. தொலைவில் பாலாற்றின் தென்கரையில், ஆற்றின் படுகையில் அமைந்துள்ளது. வசிஸ்டீச்சுவமுடையார் எனும் சிவன் கோயில். கோவிலிலுள்ள கல்வெட்டு ஆற்று வெள்ளத்தின் நீர் மேலாண்மை பற்றிய விஜயநகரப் பேரரசு பிறப்பித்த (கி.பி. 1446) ஆணையைத் தெரிவிக்கின்றது. கல்யாண மண்டபச் சிற்பங்கள் காணத்தக்க கலைப்படைப்பாக உள்ளன.

**18.** விரிஞ்சிபுரம் :

கல்வெட்டுகளில் இவ்வூர் ஜெயங்கொண்ட சோழ மண்டலத்துத் திருவிரிஞ்சிபுரம் எனக் குறிப்பிடுகின்றது. வேலூருக்கு தெற்கே 9 கி.மீ. தொலைவில் பாலாற்றின் தென்கரையில்



அமைந்துள்ள சிறந்த சிவத்தலம் ஆகும். சின்ன பொம்மு நாயக்கரின் மகனான லிங்கம பூபாலு என்னும் மன்னன் கோயிலை விரிவுபடுத்தியுள்ளார். பராந்தகச் சோழன், இராஜராஜன், பிறகு விஜயநகர மன்னர்களின் பெயர்கள் இக்கோயில் கல்வெட்டுகளில் இடம்பெற்றுள்ளன. அருணகிரிநாதர் திருப்புகழில் பதினைந்து பாடல்களில் இத்தலத்தைப் பாடியுள்ளார். "திருவிரிஞ்சை மதிலழகு" என்பது இதன் புகழைக் குறிக்கும் ஒரு வழக்குச் சொல்.

**19.** பள்ளிகொண்டா :

வேலூரிலிருந்து **22** கி.மீ. தொலைவில் மேற்கே பெங்களூர் நெடுஞ்சாலையில் உள்ளது. திருமால் பள்ளிகொண்டா நிலையில் ஓர் அற்புத வைணவ தலம், ஒரு காலத்தில் இது சமண பள்ளியாயிருந்தது, பிறகு வைணவர்களால் வெற்றிக் கொள்ளப்பட்ட ஊர். அழகிய சிலைகள், தூண்கள் கொண்ட ஆலயம் இது.

**20.** திருவலம் :

வேலூர் சென்னை சாலையில் **20** கி.மீ. தொலைவில் பொன்னை நதிக்கரை ஓரம் அமைந்துள்ள தலம் இது. சிவபெருமானை வல்லநாதர் என்பர் இக்கோயில் உள்ளே சோழர்காலக் கல்வெட்டுகளும், செப்புத் திருமேனிகளும் கண்களைக் கவருகின்றது. இங்கு உள்ள மிகப் பெரிய சுதையினால் ஆன நந்தி மூலவரை நோக்காது எதிர்த்திசையில் அமர்த்திருகின்றது. வாணர்குல மன்னர்கள் ஆண்ட இவ்வூர் **10**-ம் நூற்றாண்டில் பெரிய படைவீடாக இருந்திருக்கின்றது.

**21.** காங்கேய நல்லூர் :

வேலூரை அடுத்துள்ள பாலாற்றின் வடகரையில் இவ்வூர் அமைந்துள்ளது. இங்கே சோழர், சம்புவராயர் காலத்துக் கோயில்களும் கல்வெட்டுகளும் உள்ளன. சொல்லின் செல்வர் திருமுருக கிருபானந்த வாரியர் தோன்றிய ஊர், அவர் நினைவிடம் அழகுற அமைக்கப்பட்டுள்ளது.

**22.** நாட்டேரி பிரம்மதேசம் :

வேலூரிருந்து **30** கி.மீ. தொலைவில் ஓச்சேரி கிராமத்தின் உள்ளே **10** கி.மீ. அமைந்துள்ளது. பிரம்மதேசம் என்ற சிறிய கிராமம். பல்லவ மன்னன் கெம்பவர்மன் **9**-ம் நூற்றாண்டு காலத்தில் அமைந்த கோயில் திடி மணல் பாறைகளால் கட்டப்பட்டுள்ளது. இந்தக் கிராமத்தில் முதலாம் இராஜேந்திர சோழர் உயிர்நீத்தார் என்பதும் அவருடன் அவர் மனைவி அரசி வீரமாதேவி உடன்கட்டை ஏறினாள் என்பதும் இங்குள்ள கல்வெட்டு கூறும் அரிய வரலாறு.

**23.** அப்துல்லாபுரம் :

சீரழிந்து காணப்படும் அரண்மனை ஒன்று வேலூரிலிருந்து பெங்களூர் செல்லும் தேசிய நெடுஞ்சாலை ஓரம் **5** கி.மீ. தொலைவில் உள்ளது. **1676**-ல் அப்துல்லாகான் என்பவர் வேலூர் கோட்டையைக் கைப்பற்றி ஆட்சி செய்துவந்தார். மராட்டிய அரசனான துக்கோஜிரான் என்பவரிடம் போரில் தோற்றுக் கோட்டையை விட்டு வெளியேறி இவ்விடத்தில் ஒரு புது குடியிருப்பையும்,





அரண்மனையும் அமைத்து அரசாண்டார். இது அப்துல்லாகான் மஹால் என அழைக்கப்பட்டு வருகின்றது. அழகிய கலை வேலைப்பாடுகளைக் கொண்ட பன்னிரண்டு அறைகளுடன், இரண்டு அடுக்கு மாளிகையாகக் கட்டப்பட்டு இவ்வரண்மனை, சாலை விரிவாக்கத்தில் பலியாகி தற்சமயம் பார்ப்போர் அற்றுப் பாழடைந்துள்ளது.

**24.** திப்புசுல்தான் உறவினர்கள் நினைவிடம் :

வேலூர்-ஆற்காடு செல்லும் சாலையில் திப்பு உறவினர்கள் சமாதிகள் அமைந்துள்ளன. கி.பி.**1799**-ல் ஸ்ரீ ரங்கப்பட்டணத்தில் வெள்ளையருடன் போரிட்டு இறந்த மாவீரன் திப்புசுல்தான், அவர் குடும்பத்தினர் அனைவரும் கைது செய்யப்பட்டு வேலூர் கோட்டையில் சிறை வைக்கப்பட்டனர். சுமார் நான்கு ஏக்கர் நிலத்தில் **100** மேற்பட்ட சமாதிகள் காணப்படுகின்றன. ஹைதர் அலி மனைவி, திப்புவின் மருமகள், திப்புவின் மனைவி, மகள், மந்திரி பூர்ணய்யாவின் மகள் போன்ற சமாதிகள் குறிப்பிடத்தக்கவை.

**25.** ஆற்காடு கோட்டை :

முகலாயர் ஆட்சியில் தன் படையில் உள்ள தளபதிகளைத் தான் கைப்பற்றிய இடங்களுக்கு 'நவாபாக' நியமித்தனர். செஞ்சியைக் கைப்பற்றிய தாவூதகான் அங்கே நவாபாக நியமிக்கப்பட்டார். இவர் **1638** முதல் **1703** வரை செஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்து வந்தார். **1703**-ல் செஞ்சியில் ஏற்பட்ட கடும் வறட்சியின் போது தலைநகரை ஆற்காட்டிற்கு மாற்றினார்.

இவர் காலத்தில் ஆற்காட்டில் 'ஆலம்பானா' என்ற கோட்டை கட்டப்பட்டது. பல்வேறு போரினாலும், பாலாற்றின் வெள்ளத்தாலும், நவாப் சந்ததிகள் சென்னை அமீர் அரண்மனைக்கு இடம் பெயர்ந்ததாலும் இன்று அழிந்த நிலையில் காணப்படுகின்றன.

**26.** பச்சை கல் மசூதி :

**1710**-ஆம் ஆண்டு "சாதத்துல்லாகான்" ஆற்காடு நவாபானார். **1724**-ஆம் ஆண்டு வேலூர் கோட்டை சாதத்துல்லாகான் வசமானது. இவருடைய **22** ஆண்டு ஆட்சிக் காலத்தில் பல போர்களில் பங்கு கொண்டார். அவற்றுள் மிக முக்கியமானது செஞ்சி மன்னன் 'தேசிங்கு ராஜன்' மீது நடைபெற்று வெற்றி பெற்ற போராகும். இவர் **1732**-ஆம் ஆண்டு ஆற்காட்டில் மரணமடைந்தார். இவர் நினைவிடத்தில் பச்சை வண்ண கற்களால் அழகிய நினைவிடம் அமைக்கப்பட்டுள்ளது. இன்றும் அது பச்சைக் கல் மசூதி என்றே அழைக்கப்படுகின்றது. அழிவுற்றக் கோட்டை வாயில் அருகே இம்மசூதி அமைந்துள்ளது.

**27.** இராணிப்பேட்டை இராணிபாய் நினைவிடம் :

கி.பி. **1714**-ஆம் ஆண்டுச் செஞ்சி மன்னர் தேசிங்கு ராஜன் வரி கொடுக்க மறுத்ததாலேயே **03.10.1714** அவர் மீது ஆற்காடு நவாப் சாதத்துல்லாகான் போரை மேற்கொண்டு வெற்றிபெற்றார். போரில் இறந்த தேசிங்கு உடலோடு அவர் மனைவி இராணிபாய் உடன்கட்டை ஏறினாள். இளம் வயதுடைய இராணியின் கற்பின் உறுதியை நேரில் கண்ட சாததுல்லாகான், அதற்குப் பரிகாரமாக இராணியின் நினைவாக ஆற்காடு பாலாற்றங்கரை கிழக்கில் இருவருக்கும் நினைவு மண்டபம் அமைத்து இராணியின் நினைவாக "இராணிப்பேட்டை" என்ற ஊரை உருவாக்கினார்.

**28.** முத்து மண்டபம் :

கி.பி. **1816**-ஆம் ஆண்டு இலங்கையில் கண்டியை ஆண்டு வந்த கடைசித் தமிழ் மன்னன் "விக்ரம ராஜ சிங்கா". இவரை **08.03.1832** அன்று உடல்நலம் பாதிக்கப்பட்டு மரணம் அடைந்தார். இவர் நினைவிடத்தில் வேலூர் பாலாற்றங்கரையில் தமிழக அரசு சார்பில் **1990**-ல் "முத்து போன்ற வடிவமைப்பில் முத்து மண்டபம்" என்ற நினைவு









மண்டபம் கட்டப்பட்டது.

**29.** வேப்பம்பட்டு:

வேலூரிலிருந்து கணியம்பாடி செல்லும் சாலையில் உட்புறம் அமைந்த சிறிய கிராமம் வேப்பம்பட்டு. இங்குப் பிற்காலச் சோழர்கள் நிர்மாணித்த விருபாட்சீஸ்வரர் என்ற அழகிய கோயில் சாலையோரம் அமைந்துள்ளது. கோயில் சுவர் முழுவதும் சிவனின் பல்வேறு திருவிளையாடல் காட்சிகள் சிற்பமாக வடித்து வைத்துள்ளது. கண்களுக்கு விருந்து, சுமார் **25** காட்சிகள் உள்ளன. மேலும் அதிட்டானம் பகுதியில் கல்வெட்டுகள் வெட்டப்பட்டுள்ளன. அதில் இவ்வூர்ப் பெயர் வேப்பம்பட்டு என்றே அழைக்கப்பட்டுள்ளதை அறிய முடிகின்றது.

**30.** களம்பூரான் கோட்டை :

வேலூரிலிருந்து **16** கி.மீ. தொலைவில் தெற்கே ஆரணி செல்லும் வழியில் மோட்டுப்பாளையம் என்ற கிராமத்தில் கோட்டை மலை மீது அமைந்துள்ளது. இக்கோட்டை விஜயநகர் காலத்தில் நாணயம் அச்சடிக்கும் இடமாக இருந்துள்ளதால் மலை உச்சியில் மிகப் பாதுகாப்பான முறையில் அமைக்கப்பட்டுள்ளது.

**2 x 3** அடி மட்டுமே கோட்டை நுழைவாயில், அவ்வளவு எளிதாகக் கண்டுபிடிக்க இயலாத இடத்தில் உள்ளது. உள்ளே பல அடுக்குப் பாதுகாப்பு அம்சமான அறைகள் உள்ளன. சாகசமலை ஏற்றத்துக்கு உகந்த இடம்.

மேலும் வேலூரில் இது போன்ற அதிகம் அறியப்படாமல் உள்ள இடங்களுக்கு நீங்களும் சென்று நமது தொன்மையான வரலாற்றைக் கண்டு மகிழலாம்.

# அத்திமூர் மலைக்கோட்டை

## குமரன் சண்முகம் மற்றும் திருவண்ணாமலை வரலாற்று ஆய்வு நடுவம்



ஜவ்வாது மலைத் தொடரில் பலரும் அறியாத அழியும் நிலையில் தமிழகத்தின் பெருங்கோட்டை உள்ளது. திருவண்ணாமலை மாவட்டம் போளூரில் இருந்து ஐந்து மைல் தொலைவில் வடமேற்கு திசையில் அத்திமூர், போத்தரை கிராமங்களை ஒட்டிய ஜவ்வாது மலைத்தொடரைச் சேர்ந்த ஓர் உயரிய மலையின் (கடல் மட்டத்திலிருந்து 3124 அடி உயரத்தில்) உச்சியில் மராட்டியர்களால் கட்டப்பட்ட கர்நாடககிரி(Carnaticghur) என்ற பெயர் கொண்ட கோட்டை உள்ளதாக 140 வருடங்களுக்கு முன்னால் உள்ள ஆங்கில விவரச் சுவடியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

அந்தப் பதிவேட்டில் கோட்டையின் சுற்றுச்சுவர்கள் 25 அடி உயரமும், கோட்டையின் சுற்றளவு அரை மைல் நீளமும் கால் மைல் அகலமும் கொண்டதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இக்கோட்டையில் கண்காணிப்பு கோபுரங்கள், வெடி மருந்து கிடங்குகள், இரகசிய அறைகள் உள்ளன. கோட்டையில் உள்ள பெரும்பாலான கட்டிடங்கள் அழிந்து தரைமட்டமாகி , கோட்டை பிரகாரம் முழுவதும் மரங்களும் புதர்களும் வளர்ந்து காடாக மாறி உள்ளதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இக்கோட்டை அத்திமூர் கோட்டை என்றும் பொத்தரை கோட்டை என்றும் அழைக்கப்படுகிறது. ஆங்கிலேயர் இக்கோட்டைக்கு வைத்த பெயர் கர்னாடககிரி.

குதிரை வழித் தடம்

இக்கோட்டைக்குச் செல்ல அக்காலத்தில் பயன்படுத்தப்பட்ட குதிரை வழித்தடம் இன்று முற்றிலுமாக அழிந்து விட்டது. மலை ஏறுவதற்கு சிரமான கடினமாக வழி மட்டுமே உள்ளது

மலையேற்றம்

தற்செயலாகத் திருவண்ணாமலை ஆய்வு நடுவதைச் சேர்ந்த திரு ச.பாலமுருகன் அத்திமூர் பொதுமக்களிடம் விசாரித்தபோது அருகில் உள்ள மலையின் மேல் பாழடைந்த கோட்டை இருப்பதாகத் தெரிவித்தார்கள். ஆங்கில பதிவேட்டில் குறிப்பிடப்பட்டுள்ள கர்நாடககிரி கோட்டை தான் இந்த கோட்டையாக இருக்கும் என்று அவர் யூகித்து அதை உறுதிசெய்யத் திருவண்ணாமலை ஆய்வு நடுவத்தின் சார்பாக ஞாயிற்றுக்கிழமை (03/03/19) கோட்டையை ஆய்வு செய்யத் திட்டமிட்டார்.

மேலும் அவர் இந்த வரலாற்றுப் பதிவை என்னோடு பகிர்ந்துகொண்டு என்னையும் அழைத்தார். மிகுந்த ஆர்வத்தைத் தூண்டிய இந்த பதிவால் ஈர்க்கப்பட்டு ஞாயிற்றுக்கிழமை காலை திருவண்ணாமலை ஆய்வு நடுவம் குழுவை போளூரில் சந்தித்து அவர்களோடு சேர்ந்து அத்திமூர் சென்றேன். மலையேற்ற பயணத்திற்கு தேவையான





உணவு மற்றும் குடிநீரை வாங்கிக் கொண்டு மலையின் அடிவாரத்தை அடைந்தோம். அத்திமூறை சேர்ந்த 2 வழிகாட்டிகளின் துணையோடு மலை ஏற தொடங்கினோம்.

பாதை கரடு முரடாகவும் இருபுறமும் புதர்கள் வளர்ந்திருந்ததால் மலையேற்றம் கடினமாகவே இருந்தது . அயர்ச்சியைத் தணிக்க ஆங்காங்கே சிறிது நேரம் இளைப்பாறினோம். அரை மணி நேரம் மலையேற்றத்திற்குப் பிறகு ஒரு செங்குத்தான வழுவழுப்பான பாறையை அடைந்தோம். மிகவும் சிரமப்பட்டு மிகுந்த அச்சத்தோடும் கவனத்தோடும் குரங்கு போலக் கைகால்களைப் பாறையின் மேல் கவ்வியபடி ஏரி கடந்தோம்.

மேலும் சில இடங்களில் மலைச்சரிவை ஒட்டியவாறு குறுகலான ஒற்றையடிப் பாதையைக் கடந்து சென்றது எங்களுக்குச் சவாலாக அமைந்தது.500லிருந்து 1000 அடிகள் வரை செங்குத்தான மலைச்சரிவை ஒட்டிய பாதையை மிகுந்த கவனத்தோடு உயிரைப் பணயம் வைத்துக் கடந்து சென்றோம்.

ஆண்டவர் பாதம் கோயில்

வழியில் கிராம மக்கள் வழிபடும் ஒரு சிறிய பெருமாள் கோயிலை அடைந்தோம். அங்குப் பெருமாள் பாதம் என்று கிராம மக்களால் நம்பப்படும் பாதச் சுவட்டைப் பார்வையிட்டு பெருமாளுக்குக் கற்பூரம் ஏற்றி வழிபட்டோம். பிறகு சிறிது நேரம் இளைப்பாறிவிட்டு பயணத்தைத் தொடர்ந்தோம். பெருமாள் கோயிலிலிருந்து மலை உச்சியை நோக்கிப் பார்க்கும்போது கோட்டை கண்காணிப்பு கோபுரம் தென்பட்டது.

பெருங்கற்கால ஈமச் சின்னங்கள்

` வழியில் உள்ள கன்னி கோயிலில் மதிய உணவை அருந்திவிட்டு நடைப்பயணத்தைத் தொடர்ந்தோம். அடர்ந்த மூங்கில் காடு வழியாகப் பல நீர் வற்றிய ஓடைகளைக் கடந்து நீண்ட நடைப் பயணத்திற்குப் பிறகு பரந்து விரிந்த சமவெளியான இடத்தை அடைந்தோம். அங்கு பெரும் கற்காலத்தைச் சேர்ந்த 50-க்கும் மேற்பட்ட ஈமச் சின்னங்களான கல்திட்டைகள் மற்றும் கல் பதுக்கைகள் காணப்பட்டன. இந்த ஈமச் சின்னங்களைக் கிராம மக்கள் குள்ள மனிதர்கள் வீடு என்றும் வாலி வீடு என்று அழைக்கின்றனர்.



சிலவற்றைத் தவிர ஏனைய ஈமச் சின்னங்கள் சிதைந்த நிலையில் காணப்பட்டன. இந்த இடத்தில் உள்ள ஈமச் சின்னங்களைப் பற்றி இதுவரை எந்தப் பதிவும் இல்லை. இந்த ஈமச் சின்னங்கள் மூலம் ஜவ்வாது மலையில் 2 ஆயிரம் முதல் 3 ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பு பெருங்கற்கால மனிதர்கள் வாழ்ந்ததற்கான ஆதாரமாக விளங்குகிறது.

கர்நாடககிரி கோட்டை

ஈமச் சின்னங்களைப் பார்வையிட்ட பிறகு எங்கள் குழுவில் ஒரு சிலர் திரும்பிவிடலாம் என்று வற்புறுத்தினர். ஆனால் இவ்வளவு தூரம் சிரமப்பட்டு மலை ஏறிய பிறகு கோட்டையைப் பார்க்காமல் திரும்புவதை நானும் ஒரு சிலரும் விரும்பவில்லை. வழிகாட்டிகள் கொடுத்த நம்பிக்கையில் தொடர்ந்து மலையேறினோம். செங்குத்தான பாதை வழியாக மிகுந்த சிரமத்தோடு விரைவாக நடந்து சென்று மலையின் உச்சியை அடைந்தோம். அடிவாரத்திலிருந்து உச்சியை அடைய ஐந்து மணி நேரம் எடுத்துக் கொண்டோம். உச்சியில் கோட்டையின் இடிபாடுகளைப் பார்வையிட்டோம். 25 அடி உயரமுள்ள கற்களால் கட்டப்பட்ட கோட்டை மதில் சுவர்கள் கம்பீரமாகவும் உறுதியாகவும் காட்சியளித்தன.

நீர் வற்றிய நிலையில் ராஜகுலம் ,ராணி குளம், சிம்ம தீர்த்தம் எனப் பல குளங்கள் உள்ளன. ராஜா குளத்தில் மட்டும் சிறிதளவு அளவு நீர் இருந்தது. குளத்தின் மேற்பரப்பில் அல்லி மலர்கள் பூத்துக்குலுங்கும் காட்சியைப் பார்ப்பதற்குக் குளுமையாக இருந்தது. எங்களிடம் இருந்த குடிநீர் குறையத் தொடங்கியதால் மிகவும் களங்கமான நீரை காலி தண்ணீர் பாட்டில்களில் நிரப்பி அவசர தேவைக்காகச் சேமித்து வைத்துக்கொண்டோம்.





வழி எங்கும் கோட்டை கட்டிடங்கள் தரைமட்டமாக இடிந்த நிலையில் அடித்தளம் மட்டுமே எஞ்சி இருந்தது. எங்குப் பார்த்தாலும் உடைந்த செங்கற்கள் சிதறிக்கிடந்தன. கோட்டையின் மதில் சுவரை ஒட்டிய பாதையில் நடந்து சென்று கோட்டையின் நுழைவாயிலை அடைந்தோம். உள்ளே சென்று பார்த்தால் வட்டமாக ஒரு மண்டபம் காணப்பட்டது. மண்டபத்தின் தூண்களில் இந்து சமயம் சிற்பங்கள் பொறிக்கப்பட்டிருந்தன. வர்ணம் பூசப்பட்ட ஒரு பாம்பு சிற்பம் மண்டபத்தின் சுவரில் காணப்படுகிறது. மண்டபத்தைச் சுற்றி அடர்ந்த செடி கொடிகள் வளர்ந்திருந்தன. மண்டபத்தைக் கடந்து உள்ளே சென்று பார்த்தபோது வர்ணம் பூசப்பட்ட ஹனுமான் மற்றும் மீன் பொறிக்கப்பட்ட நடுகற்களைப் பார்த்தோம்.

கோட்டையின் உட்பிரகாரம் அடர்ந்த காடாகக் காட்சியளித்தது. நேரமின்மையால் கோட்டை பகுதிகளில் ஓரளவுக்குத் தான் ஆராய முடிந்தது . சுற்றுப்புறச் சுவரில் அங்கங்கே போர் வீரர்கள் துப்பாக்கிக் கொண்டு குறிவைத்துச் சுடவும் எதிரிகளைக் கண்காணிக்கவும் துவாரங்கள் பொறிக்கப்பட்டிருந்தன. வழிகாட்டிகள் கோட்டையைச் சேர்ந்த மருந்து கிடங்கைப் பார்வையிட அழைத்துச் செல்வதாகக் கூறினார்கள். ஆனால் நேரம் ஆகி விட்டமையால் கிடங்கைப் பார்வையிடும் முயற்சியைக் கைவிட்டோம். எனினும் தொலைதூரத்திலிருந்து மருந்து கிடங்கைப் பார்வையிட்டு மனதைத் தேற்றிக் கொண்டோம்.

இந்தக் கோட்டையில் ஒரு பெரிய பீரங்கி இருந்ததாகவும் அது மலைச் சரிவில் விழுந்து ஒரு பள்ளத்தில் புதைந்து விட்டதாக வழிகாட்டிகள் கூறினார்கள். அந்த பீரங்கி பார்வையிடவும் எங்களுக்கு நேரம் கிட்டவில்லை.

மலை இறக்கம்

கோட்டையைச் சுற்றியுள்ள இயற்கைக் காட்சிகளை ரசித்த பிறகு மலை 5.30 மணி அளவில் இறங்கத் தொடங்கினோம். நீரோடை பாதை வழியாக நடந்து சென்றோம். பாதை மிகவும் சரிவாகவும் கற்கள் நிறைந்ததாகவும் இருந்ததால் மிகவும் சிரமப்பட்டு மெதுவாகக் கீழே இறங்கினோம். சில இடங்களில் புவியீர்ப்பு விசையால் ஈர்க்கப்பட்டு கீழே சரிந்து விழுந்தோம்.

ஆனால் பெரிய அளவில் விபத்துக்கள் ஏதும் ஏற்படாமல் சிறு கீறல்கள் உடன் தப்பினோம். சில இடங்களில் குதிரை பாதை வழியாகச் சிரமமின்றி விரைவாக நடந்து சென்றோம். நேரம் ஆக ஆக இருட்டத் தொடங்கியது. போதிய வெளிச்சம் இல்லாததால் டார்ச் மற்றும் கைப்பேசி ஒளியின் உதவியால் மிகவும் சிரமப்பட்டு நீண்ட நேர நடைப் பயணத்திற்குப் பிறகு 9 மணி அளவில் தரை காட்டை கடந்து அடிவாரத்தை அடைந்தோம். அங்கு ஒரு வீட்டில் தாகத்தைத் தணித்துக் கொண்டு சிறிது நேரம் இளைப்பாறினோம்.

அங்குள்ள மக்களை விசாரித்த போது நாங்கள் சுமார் பத்து கிலோமீட்டர் தாண்டி இறங்கியதை அறிந்து கொண்டோம். கிட்டத்தட்ட 2 மணி நேரம் நடைப்பயணம் மேற்கொண்டு அத்திமுரை அடைந்து வாகனங்களை விட்டுச் சென்ற வீட்டுக்குச் சென்றோம். அங்கு எங்களுக்குச் சுவையான இரவு விருந்து அளிக்கப்பட்டது.

வழிகாட்டிகளான சிவா, மகி ஆகிய இருவருக்கும் ,கிராம மக்களுக்கும் நன்றி.

# குறும்பர்

M. ஆபிஷா பேகம், ஆய்வு மாணவர்



குறும்பர்கள் ஆடு மாடுகள் மேய்க்கும் நாடோடி இனத்தைச் சார்ந்தவர்கள் என்றும், பழங்குடிகள் இனத்தைச் சார்ந்தவர்கள் என்றும் இருவேறு கருத்துகள் நிலவுகின்றது. குறும்பர்களின் முக்கியமான தொழிலாகக் கால்நடை வளர்ப்பு இருந்தாலும் வேளாண்மை மற்றொரு பிரதான தொழிலாக இருந்துவருகிறது.

தற்போது குறும்பர்கள் நீலகிரி, குன்னூர், கோயமுத்தூர், ஏற்காடு போன்ற மலைப்பிரதேசங்களிலும் சமவெளிப் பகுதிகளிலும் வாழ்ந்து வருகின்றனர்.

குறும்பர்கள் குறுநில மன்னர்களா?

குறும்பர்கள் ஒரு குறிப்பிட்ட நிலப்பகுதியை ஆண்ட குறுநில மன்னர்கள் எனவும் அவர்கள் சில கோட்டைகளைக் கட்டியுள்ளனர் என்றும் ஆய்வாளர்கள் கூறுகின்றார்கள்.

நாளடைவில் அவர்கள் தங்களது ஆதிக்க விரிவாக்கத்தைச் சென்னை, மாவலிபுரம், வடபட்டணம், ஆற்காடு வரை பரப்பினார்கள். குறும்பர் இனத்தவரின் வாழ்விடங்கள் மலையை ஒட்டியுள்ள காட்டுப்பகுதியிலும் கடற்கரையிலும் அமைந்திருக்கும். அக்குறும்பர்கள் தங்களது வாரிசுகளையும் போர் வீரர்களாகவே வளர்த்தனர்.

சங்க காலத்திற்கு முன்பே தமிழகத்தில் வாழ்ந்திருக்கிறார்கள் என்றாலும் சில ஆய்வாளர்கள் அவர்களது காலம் கி.பி. 150 எனக் கூறுகிறார்கள். குறும்பர்கள் மற்ற நாகரிகங்களைப் போல் எழுச்சியான வளர்ச்சியைப் பெறாவிட்டாலும் தங்கள் இனத்தை வேளாண்மை, வணிகம், போர் என அனைத்து விதத்திலும் சிறப்பாக வளர்த்தனர்.

குறும்பர்களின் கோட்டைகள்

குறும்பர் மக்களுக்கு அறுபத்து நான்கு கோட்டைகள் உரியனவாக இருந்தன. அவற்றுள்

இருபத்து நான்கு கோட்டைகள் புகழுடன் விளங்கின. குறும்பர்கள் பஞ்சபாண்டவர்களின் போர் வீரர்களாக இருந்தனர் என்ற புனைகதையும் உண்டு.

1. புழல் கோட்டை
2. சாளுவான் கோட்டை
3. நெரும்பூர் கோட்டை
4. அணைக்கட்டு கோட்டை
5. பட்டிப்புலம் கோட்டை
6. ஆமூர் கோட்டை
7. புலியூர் கோட்டை
8. நயிசி குளக்கோட்டை
9. களத்தூர் கோட்டை
10. செம்பூர் கோட்டை
11. தமுனூர் கோட்டை
12. ஈக்காடு கோட்டை
13. படூர் கோட்டை

கலாச்சாரம் மற்றும் பண்பாடு

மெக்கன்சியின் சுவடிகளைக் கொண்டு குறும்பர்கள் வாழ்ந்த இடத்தை சில பிரிவுகளாக வகைப்படுத்தலாம்.

1. சந்நியாசி குறும்பர்
2. தொண்டை மண்டல குறும்பர்
3. மதுரை குறும்பர்
4. கொங்கு நாட்டு குறும்பர்
5. நீலகிரி குறும்பர்

இச்சுவடிகளில் இடம்பெற்றுள்ள செய்திகளின் அடிப்படையில் தொழில், மதம், பழக்கவழக்கங்கள், நம்பிக்கைகள், திருமணச் சடங்குகள் ஆகியவற்றைக் காணலாம்.

குறும்பர்களின் வகைகள்
1. ஊர் குறும்பர்
2. காடு குறும்பர்
3. பெட்டக் குறும்பர்
4. கொள்ளிக் குறும்பர்

குறும்பர்கள் என்னும் இனத்தவர்கள் பல மதங்களைப் பின்பற்றினாலும் சமணமதமே பிரதான மதமாக இருந்தது. மாமல்லபுரத்திற்கு அருகே வசித்த குறும்பர்கள் சமணச் சமயத்தைப் பின்பற்றினார்கள். படுவூர் என்னும் ஊரில் குறும்பர்கள் கட்டிய சமணக் கோயில் ஒன்று உள்ளது.
குறும்பர்கள் வாழ்ந்த ஊர்களும் அவற்றின் சிறப்புகளும்

புழல்



சென்னைக்கு அருகில் உள்ள பெரிய ஊராட்சிகளுள் புழல் ஒன்றாகும். தற்போது சென்னை மாநகரத்தின் ஒரு பகுதியாகத் திகழும் புழல் எண்ணற்ற வரலாற்றுத் தடங்களைக் கொண்டிருக்கிறது.
குறும்பர் மக்களின் தலைநகர் கோட்டை இருந்த இடம் இப்போது "கோட்டை கரை மேடு" என்றும் "குறும்பர் மேடு" என்றும் அழைக்கப்படுகிறது. கறுப்பு மற்றும் சிவப்பு நிற பானை ஓடுகள் மற்றும் சுடுமண் பொருட்கள் கிடைக்கின்றன. புழலில் மிகப் பழமையான சமணக்கோயில் உள்ளது. முதுமக்கள் தாழிகளும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.
பட்டிப்புலம்

சென்னையிலிருந்து 51 கி.மீ. தொலைவில் மாமல்லபுரம் செல்லும் சாலையில் பட்டிபுலம் உள்ளது. கடற்கரை கிராமமான பட்டிபுலத்தில் குறும்பர்கள் வாழ்ந்ததற்கான சான்றுகள் காணப்படுகிறது. பட்டிபுலத்தில் திருப்பட்டீஸ்வரர் என்ற சிவன் கோயிலும், பொன்னியம்மன் கோயிலும், வெட்டவெளியில் கல்லாலான சிவலிங்கம் ஒன்றும் உள்ளது.

இவ்வூரில் "வம்பாமேடு" என்ற பகுதியில் ஏராளமான பானை ஓடுகள், சுடுமண் பொம்மைகள், முதுமக்கள் தாழிகள், ரோமன் காசுகள் போன்றவை கிடைத்துள்ளது. இங்குக் குறும்பர் காலக் கல்வெட்டுடன் கூடிய பாறை ஒன்று உள்ளது.



சாளுவான் குப்பம்

சாளுவான் குப்பம் முன்பு சாணான்குப்பம் என்று அழைக்கப்பட்டது. இது குறும்பர்களின் வாழ்விடமாகத் திகழ்ந்துள்ளது. அடுத்ததாகச் சுவடியில் இடையன் பாடல் என்று குறிப்பிடப்பட்டுள்ள இடம் இப்போது புலிக்குகை எனக் கூறப்படுகிறது.

இதன் அருகே உள்ள பாறைகளில் குறும்பர்கள் விளக்கு எரிப்பதற்குப் பொந்துகளைச் செய்துள்ளனர். அந்த விளக்குகளில் தங்கள் கால்நடைகளைப் பாதுகாத்து வந்தனர்.

நெடுமரம்

குறும்பர்களின் கோட்டை இருந்த இடங்களின் நெடுமரம் என்ற ஊர் இருந்ததைப்பற்றி மெக்கன்சி ஓலைச்சுவடிகள் குறிப்பிடுகின்றன. அங்குக் குறும்பர்கள் வாழ்ந்த இடமாக "கோட்டை கரை" என்ற பகுதி உள்ளது. அப்பகுதியில் ஏராளமான பானை ஓடுகள் மற்றும் முதுமக்கள் தாழியின் உடைந்த பகுதிகள் கிடைத்துள்ளன.

நெரும்பூர்

குறும்பர்கள் கோட்டை இருந்த இடமாகச் சுவடி குறிப்பிடும் கோட்டைகளில் நெரும்பூர் கோட்டையும் ஒன்றாகும். திருக்கழுக்குன்றத்திலிருந்து 16 கி-மீ. தொலைவில் நெரும்பூர் உள்ளது. நெரும்பூரிலுள்ள நீல மாணிக்கப் பெருமாள் கோயில் (கல்வெட்டுகளுடன்) என்ற வைணவக் கோயில் குறும்பர்கள் பற்றிய செய்தியைத் தருகிறது. திருவாலீஸ்வரம் என்ற மற்றொரு பழமையான சிவன் கோயிலும் இருக்கிறது. அக்கோயிலைச் சுற்றி அழகான சிற்பங்கள் மற்றும் கல்வெட்டுகள் உள்ளன.

குறும்பர்களின் கோட்டைகள் இருந்த இடத்தில் தற்போது பானை ஓடுகளும் செங்கற்களும் கிடைக்கின்றன. குறும்பரின் கோட்டைப்பகுதி எனக் கருதப்படும் இடத்தைச் சுற்றிலும் அகழிப்பள்ளம் காணப்படுகிறது.

அணைக்கட்டு

அணைக்கட்டு என்ற ஊரில் குறும்பர் கோட்டை இருந்ததென்ற குறிப்பு மட்டுமே இரண்டு சுவடிகளிலும் காணப்படுகிறது. இந்த ஊரில் குறும்பர்கள் வாழ்ந்ததற்கான அடையாளமாய்ச் செங்கற்களாலான அடித்தளங்கள் காணப்படுகிறது.

படுவூர்

சென்னையிலிருந்து 33 கி.மீ. தொலைவில் கேளம்பாக்கத்திற்கு அருகில் அமைந்துள்ள படுவூர் என்றும் படூர் எண்ணற்ற வரலாற்றுத் தடயங்களைக் கொண்டுள்ளது. படூரின் காலம் பெருங்கற்காலத்திலிருந்து தொடங்குகிறது. பெருங்கற்காலச் சின்னங்களான கற்வட்டம் மற்றும் முதுமக்கள் தாழிகள் போன்றவை கிடைக்கின்றன.

1816-ம் ஆண்டு மெக்கன்சியின் உதவியாளர்கள் பெருங்கற்காலச் சின்னங்களை ஆராய்ந்துள்ளனர். இந்த ஊரில் குறும்பர் இனத்தவர்கள் வாழ்ந்ததற்கான அடையாளமாக "கோட்டைமேடு" காணப்படுகிறது.

கள ஆய்வில் கண்டறியப்பட்டவை

பட்டிபுலத்தில் நான் சில நாட்களுக்கு முன்பு கள ஆய்வு பணியில் ஈடுபட்ட போது "Medieval Period" என்று அழைக்கப்படும் மத்திய வரலாற்றுக் காலத்தைச் சார்ந்த பானை ஓடுகள் சில கிடைத்தன மற்றும் சிதிலமடைந்த பழங்காலக் கோயிலையும் கண்டறிந்துள்ளேன்.

மேலும், இங்குக் கிடைத்த பொருட்களை அடிப்படையாகக் கொண்டு முறையான ஆய்வினை மேற்கொண்டால் பட்டிபுலத்தின் தொன்மை வெளிப்படும் என்பது என் கருத்தாகும்.

# ஒன்னுபுறம் கோட்டை

மோகன் குமார். V, வேலூர்



வேலூர் மாவட்டம் என்றால் அனைவருக்கும் தெரிந்த ஒரே கோட்டை வேலூர் மாநகரின் மையப் பகுதியில் அமைந்துள்ள வேலூர் கோட்டை. ஆனால் வேலூரைச் சுற்றி உள்ள மலைகளில் பல கோட்டைகள் இருப்பதைப் பலருக்கும் தெரியாது. அவற்றில் ஒன்று தான் இந்த ஒண்ணுபுரம் கோட்டை **(Onnupuram Fort)** ஒன்னுபுறம் கோட்டை துருகம் என்ற மலைமேல் **700** அடி உயரத்தில் நிறுவப்பட்டுள்ளது. வேலூர் திருவண்ணாமலை தேசிய நெடுஞ்சாலையில் கண்ணமங்கலத்தை அடுத்த வண்ணான் குளம் என்ற கிராமத்தை ஒட்டியவாறு **90** ஏக்கர் பரப்பளவில் கிழக்கு மேற்காக இந்த மலை அமைந்துள்ளது.

கிராமத்தின் கிழக்கு திசையில் கிளை சாலை ஒன்று ஒன்னுபுறம் நோக்கிச் செல்கிறது. சுமார் ஒரு கிலோமீட்டர் பயணித்த பிறகு துருகம் என்கின்ற ராமசானி குப்பம் அடைந்து விடலாம். இந்த கிராமம் ஒன்னும்புறம் கோட்டை அமைந்துள்ள துருகம் மலையின் அடிவாரத்தை ஒட்டி அமைந்துள்ளது. அங்கு ஒரு பழமையான பெருமாள் கோயில் உள்ளது. கோயிலின் அருகில் உள்ள மர நிழலில் வாகனத்தை நிறுத்திவிட்டு வேலூர் மலையேறுதல் சங்கம் **(Vellore Trekking Club)** சார்பாக நானும் நண்பர்கள் திரு. குமரன் சண்முகம், திரு. நரசிம்மன் கேசவன் மற்றும் நடராஜன் மலை ஏறத் தொடங்கினோம். துருகம் மலை ஏற இருவழிகள் உள்ளன. தேசிய நெடுஞ்சாலையிலிருந்து ஒரு வழியும் துருகம் கிராமத்திலிருந்து மற்றொரு வழியும் உள்ளது. நாங்கள் துருகம் கிராமத்திலிருந்து செல்லும் பாதையைத் தேர்ந்தெடுத்தோம்.

பெருமாள் கோயில் எதிரில் உள்ள நடைபாதை வழியாக மலையின் அடிவாரத்தை அடைந்தோம். அங்கிருந்து செங்குத்தான நீர் வரப்பு பாதை வழியாகப் பாறைகளின்மேல் தாவியபடி ஏறினோம். வேர்வையும் மூச்சுத் திணறலும் எங்களை வாட்டி எடுத்தது. சிறிது தூரம் சென்றபின் வழுவழுப்பான பாறைகள் மேல் ஏற வேண்டிய இக்கட்டான சூழ்நிலை ஏற்பட்டது. சிரமத்துடன் பாறைகளைக் கடந்து சென்றோம்.

அதன் பிறகும் எங்களைச் சோதிக்கும் வகையில் செங்குத்தான பாறையில் செதுக்கப்பட்ட படிக்கட்டுகள் மூலமாக மேலேறி அரைவட்ட வடிவில் அமைக்கப்பட்ட கண்காணிப்பு கோபுரத்தை

அடைந்தோம். கண்காணிப்பு கோபுரத்தின் பக்கவாட்டில் ஒரு சிறிய குகை போன்ற சந்து உள்ளது. அதனுள் உட்கார்ந்து புகைப்படம் எடுத்துக்கொண்டோம்.

அங்கிருந்து மீண்டும் பாறைகளில் செதுக்கப்பட்ட படிக்கட்டுகள் மூலமாக ஏரி பரந்துவிரிந்த சமவெளியான ஒரு இடத்தை அடைந்தோம். அங்குக் கோட்டையின் சுவர்கள் இருந்த தடயங்கள் தென்பட்டன. கோட்டையின் சுவர்கள் மலைச்சரிவில் விழுந்ததால் அடித்தளம் மட்டுமே எஞ்சி இருந்தது.

ஆங்காங்கே உடைந்த செங்கற்கள் சிதறிக் கிடந்தன. பாறைகள் நிறைந்த சமவெளி ஆய்வு செய்த பிறகு மேலேறி அடுத்த தளத்தை அடைந்தோம். அங்குப் பிரமாண்டமான பாறையைக் கண்டோம். பாறையின் அடியில் நீர் வற்றாத இயற்கை சுனை இருந்தது. கோட்டை நுழைவாயில் அருகில் ஒரு பீடத்தின் மேல் கருங்கல்லில் அழகிய அனுமன் புடை சிற்பம் செதுக்கப்பட்டிருந்தது. பாறையின் அடியில் சுனையை ஒட்டியவாறு ஒரு கன்னி கோயிலிருந்தது. பவுர்ணமி மற்றும் அமாவாசை தினங்களில் கிராம மக்கள் இங்கு வந்து வழிபடுவது வழக்கம். பாறையின் அடியில் உள்ள சுனை என்றுமே வற்றாது . சுனை நீரை அருந்துவதால் பல தீராத நோய்கள் குணமடையும் என்பது கிராம மக்களின் நம்பிக்கை.பாறையின் மேல் பகுதியில் மங்கிய நிலையில் ஒரு கல்வெட்டு காணப்படுகிறது.

கல்வெட்டு தெலுங்கு மொழியில் இருப்பதாக ஒன்னுபுறதை சேர்ந்த தொல்லியல் நிபுணர் கருத்து தெரிவித்துள்ளார். சுனையைச் சுற்றி மூன்று படிகள் கொண்ட துறை அமைக்கப்பட்டுள்ளது. சுனையின் அருகில் சிதைந்த நிலையில் ஒரு சுவர் மட்டுமே எஞ்சி உள்ள அறை உள்ளது. உடைமாற்றும் அறையாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது. சுனை பகுதியிலிருந்து செங்குத்தான பாறை படிகள் மேலேறிச் சென்றால் அடுத்து தலத்தை அடைந்து விடலாம்.

மேற்தளத்தில் சிதைந்த நிலையில் பல கட்டிடங்கள் உள்ளன.அங்கு ஆயுதக் கிடங்குகள்,







ரகசிய நிலவறைகள் மற்றும் தானியக் கிடங்குகள் உள்ளன. ஒரு பெரிய பாறையில் ராமன் சீதை லட்சுமணர் ஆகிய மூவரை வணங்கும் வடிவில் அனுமானும் புடை சிற்பங்களாக வடிக்கப்பட்டுள்ளன.

புடை சிற்பங்களில் உள்ள பாறையின் அடியில் சிறிய சுனை உள்ளது. இந்த தளத்தில் பல பாறைகள் ஒன்றோடு ஒன்று ஒட்டியவாறு அமைந்துள்ளது. பாறையின் நடுவில் குகை போன்ற அமைப்பு உள்ளது. அங்கு அமர்ந்து இளைப்பாறினால் குளிர்ச்சியான தென்றல் காற்றை அனுபவிக்கலாம். குளிர்சாதன அறையில் இருப்பது போன்ற உணர்வு ஏற்படும்.இந்த தளத்திலிருந்து பாறையில் செதுக்கப்பட்ட படிகள் மூலமாக மேலே ஏறினால் திருவண்ணாமலையில் இருப்பதுபோன்ற ஒரு பெரிய கொப்பரை தென்படுகிறது. கார்த்திகை





தீபதன்று தீபம் ஏற்றப்படுகிறது. அங்கிருந்து 4 திசைகளிலும் உள்ள அழகான சுற்றுப்புற சமவெளிப் பகுதிகளையும் மலைகளையும் கண்டு களிக்கலாம். பத்து மைல் தொலைவில் உயரமான மலைமேல் நிறுவப்பட்டுள்ள களம் பூரான் கோட்டையைப் பார்க்கலாம். பழங்காலத்தில் இரு கோட்டைகளுக்கு இடையே தீ பந்தம் மூலம் ரகசிய செய்திகள் பரிமாறப்பட்டதாகக் கூறப்படுகிறது. இந்தக் கோட்டை விஜயநகரப் பேரரசால் நிறுவப் பட்டிருக்கலாம் என்று கருதப்படுகிறது.

வரலாற்றுச் சிறப்புமிக்க கோட்டையும், சிற்பங்களையும், நீர் நிலைகளையும் கண்டு களித்து விட்டு கோட்டையை விட்டு கிளம்ப மணம் இல்லாமல் அங்கிருந்து கிளம்பினோம்.





# கைலாச கிரி மலைக்கோட்டை

நரசிம்மன் கேசவன், வேலூர்



கைலாச கிரி மலைக்கோட்டை வேலூர் மாவட்டத்தின் மிக உயரமான மலைக்கோட்டை என்ற பெருமைக்குரியது. இவ்வளவு புகழ்வாய்ந்த இந்த கோட்டையின் வரலாற்றை நாம் பல ஆண்டுகளாக மறந்துவிட்டோம். தொல்லியல் துறை இந்த கோட்டையைப் பராமரித்து சுற்றுலா மற்றும் மரபு சார்ந்த இடமாக மாற்றி இருக்கலாம். தற்போது பொதுமக்கள் வரவு இல்லாததால் சமூகவிரோதிகள், கள்ளச் சாராயம் காய்ச்சுபவர்கள், புதையல் தேடுபவர்களின் வருகையால் கோட்டையில் சுற்றுப்புறச் சூழல் கடுமையாகப் பாதிக்கப்பட்டுள்ளது.

பல வருடங்களாக எல்லோரும் மறந்துவிட்ட இந்த கோட்டையை வேலூர் மலையேறுதல் சங்கம் (Vellore Trekking Club) சார்பாக நானும் நண்பர்கள் திரு. குமரன் சண்முகம், திரு. மோகன் குமார் மற்றும் திரு. கலைச்செல்வன் சென்று பார்வையிட்டோம்.

இந்தக் கோட்டையைப் பற்றி எங்களுடைய ஆய்வுகளும், ஆங்கிலேயர் காலத்து ஆவணங்களில் உள்ள செய்திகளையும் உங்களோடு பகிர்ந்து கொள்கிறோம்.

**கோட்டைக்குச் செல்லும் பாதை (ROUTE TO THE FORT)**

திருமலைகோடியில் இருந்து பென்னாத்தூர் செல்லும் சாலையில் உள்ள ஒரு குன்றில் அமைந்துள்ள பாலமுருகன் கோயிலுக்குச் செல்லும் பாதையைக் கடந்து முற்காலத்தில் அமைக்கப்பட்ட மூன்று மலைகளைக் கடந்து செல்லும் குதிரை பாதை வழியாக 6 மைல் (9.65 KM) நடைப்பயணத்தை மேற்கொண்டால் கோட்டையை அடைந்து விடலாம். இந்த பயணத்திற்குக் குறைந்தபட்சம் இரண்டு மணி நேரம் ஆகும். வழி எங்கும் கரடுமுரடாகவும், முட்செடிகள் நிறைந்ததாகவும், ஒரு சில இடங்களில் செங்குத்தாகவும் அமைந்திருப்பதால் மலையேற்றம் சிறிது கடினமாகவும் சவால்கள் நிரைந்ததாவும் இருக்கும்.

பாதை நெடுகிலும் பசுமையான ஆங்காங்கே அடர்ந்து மரங்கள், செடிகள், குறங்குகளின் குரல் மற்றும் பறவைகளின் இனிமையான குரலோசை, நாங்கள் பயணித்த காலம் இலையுதிர் காலம் ஆனதால் நாங்கள் நடந்து செல்லும் போது காய்ந்த இலைகளை மிதிப்பதால் ஏற்படும் ஓசையும் இவ்வனைத்தும்









கேட்பதற்கு மனத்திற்கு இதமாக இனிமையாக இருந்தது. 3 மைல் (4.82 KM) தொலைவு கடந்ததும் ஒரு பெரிய பாறையின் நிழலில் அமர்ந்து எடுத்துச் சென்ற பழங்கள், கடலை மிட்டாய் மற்றும் உளர் திராட்சை ஆகியவை பகிர்ந்து உண்டபின் தண்ணீர் அருந்தி விட்டு சிறிது நேர ஓய்விற்குப்பின் மீண்டும் பயணத்தைத் தொடர்ந்தோம்.

பயணத்தின் நடுவழியில் ஆஞ்சநேயர் ஆலயம் அமைந்துள்ளது. ஒரு பெரிய பாறையில் புடைச் சிற்பமாக ஆஞ்சநேயர் காட்சியளிக்கின்றார். கோயிலுக்கு அருகாமையில் நீர் பற்றிய குளம் ஆனால் நீர் வற்றிய நிலையில் உள்ளது. கோவிலைக் கடந்து 100 அடி தூரத்தில் விநாயகர் புடைச் சிற்பம் உள்ளது.

கோவிலையும் சிற்பத்தையும் கண்டுகளித்தப்பின் பயணத்தைத் தொடர்ந்தோம் கோட்டையை நோக்கி.

**கோட்டையின் அமைவிடம் (LOCATION OF FORT)**

கைலாச கிரி மலை புகழ்பெற்ற நாராயணி தங்கக் கோயில் அமைந்துள்ள திருமலை கோடியிலிருந்து வடக்கு தெற்கு திசைகளில் நீண்டு அமைந்துள்ள ஒரு கம்பீரமான மலைத்தொடராகும். இந்த மலைத்தொடரின் உச்சியில் (உயரம் 2700 அடி) உள்ள பாறையின் மேல் மராட்டியர்களால் நிறுவப்பட்ட கோட்டை அமைந்துள்ளது. கோட்டையைச் சுற்றி உயரமான சுற்றுப்புறச்சுவர் எழுப்பப்பட்டுள்ளன. ஆனால், பல இடங்களில் இந்த சுவர்கள் இடிந்து சரிந்து காணப்படுகின்றன.

**கோட்டையின் நுழைவாயில் (ENTRANCE OF FORT)**

கோட்டையின் நுழைவாயில் முற்றிலும் இடிந்த நிலையில் செங்கல் மற்றும் பாறை குவியலாகக் காட்சியளிக்கின்றது.

**கோட்டையில் உள்ள நீர்நிலைகள் (WATER BODIES IN THE FORT)**

கோட்டையின் வடகிழக்கு பகுதியில் சுற்றுப்புற சுவரை ஒட்டியவாறு ஒரு ஆழமான நீர்நிலை நீர் நிலை அமைக்கப்பட்டு உள்ளது. நீர்நிலையின் சுவரில் காமதேனு மற்றும் தாமரை போன்ற பல அறிய சிற்பங்கள் வடிவமைக்கப்பட்டுள்ளன. ஆச்சரிய விதமாகக் கோட்டையின் நடுவில் பாறையின் மத்தியில் பாறையை குடைந்தார் போன்று இயற்கையான நீச்சல் குளம் அமைந்துள்ளது.

**இடிந்த கட்டிடங்கள் (DIAPILATED BUILDINGS)**

இந்த கோட்டையில் பெரும்பாலான கட்டிடங்கள் இடிந்து தரை மட்டமாகி அடித்தளம் மட்டுமே மிஞ்சிய





நிலையில் உள்ளன. கோட்டையின் உள்பரப்பில் எங்குப் பார்த்தாலும் செங்கல் மற்றும் கற்கள் சிதறிக் கிடக்கின்றன. ஒரு சில சுவர்கள் மட்டுமே உறுதியாக நின்று கொண்டிருக்கின்றன.

## கோடைக்கால பங்களா (SUMMER BUNGALOW)

இக்கோட்டையை மன்னர்கள் இடம் இருந்து ஆங்கிலேயர்கள் கைப்பற்றியபின் தாழ்வான கிழக்குப் பகுதியில் தங்களுக்கு என்று ஒரு பங்களாவை அமைத்திருக்கின்றனர். ஆங்கிலேயர்கள் இக்கோட்டையை ஓய்வு தளமாகப் பயன்படுத்தி இருக்கின்றனர். தற்போது பங்களா, கூரை இடிந்து பாழடைந்த நிலையில் உள்ளது.

பங்களாவில் இருத்த விலை உயர்ந்த மரச்சாமான்கள், சுவரில் இருந்த சன்னல்கள் அலமாரிகளின் கதவுகள் மற்றும் அறைக் கதவுகள் களவாடப்பட்டுள்ளன. இதனால் மிஞ்சியுள்ள சுவர்கள் வலுவிழந்து இடிந்து விழும் அபாய நிலையில் உள்ளன. தரை முழுவதும் மண் மற்றும் காய்ந்த இலைகளால் மூடப்பட்டு ஆங்காங்கே செடி கொடிகள் வளர்ந்து புதராகக் காட்சி அளிக்கின்றது.

மேலும் சுவர்களின் விரிசல்களில் செடிகள் மற்றும் ஆலமரம் போன்ற பெரிய மரங்கள் வளர்த்துள்ளன. பங்களாவின் அருகாமையில் ஆழமான குழிகள் தோண்ட பட்டிருந்த மண் ஈரமாக இருந்ததால் சமீப காலத்தில்தான் புதையல் வேட்டைக்காரர்களால் தோண்டப்பட்டவையாக இருக்கலாம் என்று கருதுகிறோம்..

## குகை (CAVE)

பாறையை ஒட்டினார்போல் ஒரு குகையைக் கண்டறிந்தோம். அதன் முகப்பு குருதியாகவும் இருள் நிறைந்ததாக இருந்ததால் உள்ளே சென்று ஆராய்வதைக் கைவிட்டோம்.





புல்வெளி **(MEADOW)**

கோட்டையின் வடக்கு பகுதியில் அமைத்துள்ள பரந்து விரிந்த புல்வெளி (தர்ச்சமயம் காய்ந்து கிடக்கிறது) இரம்மியமாக காட்சியளிக்கிறது கோட்டையின் மேல்வாயிருந்து அழகான காட்சிகள்.

இயற்கைக் காட்சிகள்

கோட்டையின் தெற்கு திசையிலிருந்து நின்று பார்த்தால் மலையடிவாரத்தில் உள்ள சமவெளிகள், கிராமங்கள், சாலைகள் மற்றும் நீர்நிலைகள் ஆகியவற்றின் அழகைக் கண்டுகளிக்கலாம்.

இவ்வாறு வரலாற்றுச் சிறப்புமிக்க கோட்டையும், கோட்டை சிற்பங்களையும், நீர் நிலைகளையும் கண்டு களித்து விட்டு கோட்டையை விட்டு அங்கிருந்து கிளம்பினோம்.



